## அவள் எவ்வளவு அழகாயிருக்கிறாள்...
## அவள் உபயோகிப்பது பாண்ட்ஸ்

நீங்களும் சருமத்தை மிருதுவாகவும், வழவழப்பாகவும், அழகாகவும் வைத்துக்
கொள்ள **பாண்ட்ஸ்** வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்

இலேசானதும் பனிக்கட்டிபோல் மென்மையானதுமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தின் மென்மையான அழகைப் பாதுகாத்து, அதை எழிலுடனும், பொலிவுடனும் இருக்கச்செய்யும். எண்ணெய்ப் பசையில்லாத இந்த க்ரீம் தேய்த்துக்கொண்ட மறு விநாடியிலேயே மறைந்து விடுகிறது. பவுடர் போட்டுக் கொள்வதற்குமுன் இந்த க்ரீமைத் தடவிக்கொண்டால் பவுடர் மணிக்கணக்கில் படிந்திருக்கும்.




**சருமத்தை சுத்திகரிக்கும் சிறந்த க்ரீம்**
தினமும் இரவில் பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை முகத்தில் தடவுங்கள். அது உங்கள் மிருதுவான சருமத்தை சுத்தம்செய்து முக அழகைப் பாதுகாக்கும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பரேட்டட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பெற்றது)






சென்னை ஐலண்டு மைதானத்தில் நடைபெறும்
இந்திய செஞ்சிலுவைச் சங்க
பொருட்காட்சியிலுள்ள

# ஸ்டாண்டர்டு மோட்டார்

காட்சி மண்டபத்திற்கு
விஜயம் செய்யுமாறு உங்களை அழைக்கின்றோம்
காட்சி மண்டபம் நெ. 1 & 2
ஸ்டாண்டர்டு மோட்டார் ப்ராடக்ட்ஸ் ஆப் இந்தியா லிட்.
சென்னை





BOMAS 283. A

# புதிதாக வந்துள்ளது!




அழகான மோஸ்தர் உள்ள காபினட்டாலும், தொழில் நுணுக்க சிறப்பினுலும் தனிப்பெருமையுடன் திகழ்வது மாடல் 0322. ரசிகத்தன்மைக்கு ஒரு உன்னத பாராட்டாகும்.

- 6 வால்வ் ● ஆல்-வேவ் ● 3 பாண்ட்
- ஏஸி அல்லது ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)
- நிகர விலை ரூ. 375.00 உள்ளூர் வரிகள் அலாதி



**murphy radio**

வீட்டிற்கு உற்சாகமளிக்கிறது!

மர்ஃபி ரேடியோ ஆப் இந்தியா லிட்., பம்பாய்-12

MR/62

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே

புத்தாண்டு மலர்



மலர் 18
இதழ் 37

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

விளம்பி ஆடு
பங்குனிமீ 30

# புது வருஷப் பிரார்த்தனை

புது வருஷம் வருகிறது. புது மலர்கள் பூக்கின்றன. புது மணம் வீசுகிறது. நமது சிந்தனையிலும் புதுமை வேண்டும். இதுதான் நமது புது வருஷ வேண்டுகோள்.

நமது நாட்டைப் பல பிரச்னைகள் அல்லற்படுத்துகின்றன. அவற்றைத் தீர்க்கப் பல வழிகளைக் கடைப்பிடித்துப் பார்த்தோம். மேல் நாட்டில் வெற்றி கிட்டிய முறைகளை இங்கு அனுஷ்டித்துப் பார்த்தோம். ஒன்றும் பயன் விளைவிக்கவில்லை. நாம் பத்து வருஷத்தில் கணிசமாக முன்னேற முடியாமல் கணிசமான அளவு கடன் பட்டுப் பல சிக்கல்களில் நேர்முகமாகவும் மறைமுகமாகவும் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். இவற்றிலிருந்து விடுபடப் புது நோக்கு வேண்டும்; புது முறைகளைக் கையாள வேண்டும்.

நாம் சொல்லும் முறைகள் மிகப் புராதனமான முறைகள் போல் தோன்றலாம்.

காந்திமகான் ஒத்துழையாமை இயக்கத்தைப் பற்றிக் கூறியபோது, அந்தக் காலத்து மக்களும் "தர்மமும் அஹிம்சையும் சுதந்திரம் வாங்கிக் கொடுக்குமா? மக்கள் இதில் முழு மனத்தோடு சேருவார்களா?" என்று ஐயம் தெரிவித்தார்கள். ஆனால் நிலைமை அதற்கு நேர்மாறாக உருவெடுத்தது. லட்சக்கணக்கில் தேசமக்கள் ஒத்துழையாமைப் போரில் கலந்து கொண்டார்கள்.

அதேபோல் இன்று ராஜாஜியோ உழைப்பு, இரக்கம் என்ற இரு தத்துவங்களின் மீதுதான் தேச க்ஷேமத்தை நிலைநிறுத்த வேண்டும் என்று ஓயாமல் சொல்லி வருகிறார்.

கம்யூனிஸத்தைக் கடைப்பிடிக்கும் நாடுகளிலேயே, ஒவ்வொரு நாடு ஒவ்வொரு முறையை அனுஷ்டித்து வருகிறது. யுகோஸ்லேவியா ருஷ்ய முறைகளை அனுஷ்டிக்கவில்லை. ருஷ்ய முறைகளுக்கும் சீன முறைகளுக்கும் எவ்வளவோ வித்தியாசமுண்டு. போலந்து நாட்டுத் தலைவர் கோமுல்கா, "பலாத்காரக் கூட்டுறவு விவசாயம் இனிமேல் கிடையாது" என்று சமீபத்தில்தான் வற்புறுத்தி, நிலத்தை விவசாயிகளுக்கே பிரித்துக் கொடுத்தார்.

இப்படி சோஷலிஸ நாடுகள் என்று சொல்லப்படும் நாடுகளிலேயே அங்கு அனுஷ்டிக்கப்படும் முறைகளைப் பற்றி இவ்வளவு குழப்பம் நிலவும்போது, நமது நாட்டில் அம்முறைகளைக் கையாண்டு சமுதாய நிலைமை மாற்றிக் குழப்பத்தில் ஆழ்த்துவானேன்? தர்மத்தில் ஊறிய பாரத மக்கள் இருக்க, காந்தி மகானின் சத்திய வேள்வியில் புடம் போட்டு எடுக்கப்பட்ட தலைவர்களான ராஜாஜி, ராஜேந்திர பிரசாத், ஜவாஹர்லால் நேரு, வினோபாஜி, ஜெயப்பிரகாஷ் நாராயணர் போன்றவர்கள் இருக்க, உலகத்துக்கே அதிசயம் விளைவிக்கும் முறையில் புதிய சமுதாயம் உண்டாக்க நமக்கு நல்ல வாய்ப்பிருக்கிறது. இந்த அற்புத வாய்ப்பை நமது பிரதமர் நேரு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதுதான் நமது புது வருஷப் பிரார்த்தனை!

# நாட்டின் யோகக்ஷேமம்

**ராஜாஜி**

தேசத்தின் செல்வத்தைப் பெருக்குவதற்கும், பெருக்கிய செல்வத்தை மக்களுக்குப் பகிர்ந்தளிப்பதற்கும் 'உழைப்பு-தயை' என்ற இரு கொள்கைகளே அடிப்படை. ஏராளமான பணச் செலவில் பெரிய அதிகார வர்க்க இயந்திரத்தை ஏற்படுத்தித் தனி நபர்களின் சொத்தைப் பறித்து உழைப்பில் ஊக்கத்தை இழக்கச் செய்யும் முறைகளைக் கையாள்வதை விட்டு, மேலே கூறிய உழைப்பு-தயை என்ற கொள்கைகளை மக்கள் மனத்தில் புகுத்த ஒரு பெரிய இயக்கம் நடத்த வேண்டும். உழைப்பு என்னும்போது ஊதியமில்லாத 'கௌரவ' வேலையைக் குறிக்கவில்லை. உழைப்புக்குத் தகுந்த ஊதியம் யாரும் பெற்றேயாகவேண்டும். 'கௌரவ' வேலைகள் நாட்டில் பெருந் தீங்குகள் விளைவித்திருக்கின்றன. ஜீவனத்துக்கென்று ஒரு குறிப்பிட்ட வேலையில்லாதவர்கள், 'தேசத்தை ஆளும் உரிமை எங்களுக்குத்தான் உண்டு' என்று முன் வந்து ஒருவகை சுயநலவாதிகளாக மாறி யோக்கியமாக வேலை செய்து நாட்டுச் செல்வத்தைப் பெருக்கும் மக்களைக் கொடுமைப்படுத்துவதில் இறங்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு உழைப்பாளியும் அவனவன் ஊதியத்துக்குத் தகுந்த வேலை செய்கிறான். ஊதியம் கொடுக்காமல் உழைப்பைப் பெறும்போதுதான், மோசடிகளும் லஞ்ச ஊழல்களும் விளைகின்றன. பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தரின் ஊதியமானாலும் சரி, மண் எடுத்து வேலை செய்யும் கூலியானாலும் சரி, எல்லாரும் சமமானவர்களே. அவரவர்களுக்குரிய ஊதியத்தைக் கொடுக்கத் தயங்கக் கூடாது. ஊதியம் இல்லாமல் வேலை செய்பவர்களைப் பிடிப்பதுதான் ஆபத்து. அப்படி வேலை செய்பவர்கள் முழு மனத்தோடு வேலை செய்ய மாட்டார்கள். அப்படி வேலை செய்தால் நிரந்தரமாக இருக்காது. சமுதாயத்துக்கும் லாபகரமாக இருக்காது.

ஒவ்வொரு மனிதனும் தனது சக்தியுள்ளளவு வேலைசெய்வது அவன் கடமை. அதற்குரிய நல்ல ஊதியம் பெற அவனுக்கு உரிமையுண்டு. வேலையில்லாதவர்களே இருக்கக் கூடாது. யோக்கியமாக வேலை செய்து வாழ வாய்ப்பளிக்கும் சர்க்காரே நல்ல சர்க்காராகும்.

உழைப்பது கடமை என்று சொல்லும்போது மனதார, குறையின்றி உழைக்க வேண்டும் என்பதுதான் பொருள். உழைப்பில் குறையிருக்கக் கூடாது. வேலை செய்வதாகப் பாவனைசெய்து சமுதாயத்தை ஏமாற்றப் பார்க்கக் கூடாது. சண்டையில் போர் வீரர்கள் தங்கள் முழு தைரியத்தைக் காட்டி எப்படிப் போர் செய்கிறார்களோ, அவ்வாறே உழைப்பாளிகளும் தங்கள் உழைப்புச் சக்தி முழுமையும் ஈடுபடுத்தி வேலை செய்ய வேண்டும். அப்போதுதான் நமது தேச வறுமையை வெற்றி கொள்ள முடியும். இப்படி ஒவ்வொருவரும் தேச பக்தி உணர்ச்சியோடு முழுசக்தியையும் ஈடுபடுத்தி வேலை செய்யும் போது 'மேற்பார்வை அதிகாரிகள்' என்ற கூட்டத்துக்கே இடமில்லை. அப்படியிருந்தாலும் அவர்கள், வேலை செய்பவர்களுக்குச் சமயத்தில் சொல்லிக் கொடுப்பதற்கும் உதவுவதற்குமுரிய மேஸ்திரிகளாகத்தான் இருப்பார்களே தவிர, அதிகாரம் செய்து வேலைவாங்கும் அதிகாரிகளாக இருக்க மாட்டார்கள். ஆகவே இந்தச் சிறிய உழைப்புத் தத்துவத்தை நம் நாட்டு மக்கள் எல்லாரும் நன்கு உணர்ந்து, தங்கள் மனச்சாட்சியின் ஒரு அம்சமாகக் கொண்டு விட்டார்களானால், தேசத்தில் செல்வம் அபரிமிதமாகப் பெருகிவிடும்.

மிக உயரிய வேலையிலிருந்து மிகத் தாழ்ந்த வேலை வரை இது எல்லா வகை வேலை செய்பவர்களுக்கும் பொருந்தும்.

தாங்களாகவே இலவச வேலை செய்வதாகவோ, 'கௌரவ' வேலைசெய்வதாகவோ சொல்லிக் கொண்டு வருபவர்கள்தான் சமுதாயத்தின் மீது படரும் புல்லுருவிகள். அவர்களால் நமது தேசியப் பிரச்னையைத் தீர்க்க முடியாது. மேல் தளத்திலிருந்து அடித்தளம் வரை யோக்கியமாகக் கூலிக்கு வேலை செய்யும் உழைப்பாளிகளே தேவை.

செல்வத்துக்குத் தர்மமும் தயையுமே காவலர்களாக இருக்க வேண்டும். செல்வம் படைத்தவர்கள், தர்மம், தயை உணர்ச்சிகளினால் உந்தப்பட்டுச் செலவழிக்க வேண்டும். ஈத்துவக்கும் இன்பமே அவர்கள் இன்பமாக இருக்க வேண்டும்! 'உன்னிடம் உள்ள பொருள் கடவுளின் பொருள். நீ அப்பொருளுக்குத் தர்மகர்த்தாதான். அவ்வளவே உன் உரிமை'—இந்தக் கொள்கை ஏற்கப்பட்டால் தேசத்திலுள்ள ஒவ்வொருவனுமே மன்னனாகவும், தெய்வமாகவும் கூட எழில்பெற்று விளங்க முடியும். குடும்ப சுதந்திரத்தை இழக்காமல், நாட்டில் சுபிட்சத்தையும் சந்தோஷத்தையும் உண்டாக்க வேண்டுமானால் இது ஒன்றுதான் வழி. இதை விட்டு வேறு வழிகளைக் கடைப்பிடித்தால், ஏதாகிலும் ஒன்றை அல்லது இரண்டையுமே இழந்து விடுவோம். அதாவது தனி மனிதனின் சுதந்திரத்தையும் சுபிட்சத்தையும் இழந்து தேச சுபிட்சமும் பெருகாமல் எங்கும் துன்பமும் துயரமும் பரவும். உழைப்பு, தயை என்கிற இரட்டை நன்னெறியைக் கடைப்பிடித்தோமானால் தனி மனிதனின் சுதந்திரமும் நாட்டின் யோகக்ஷேமமும் இரண்டுமே காக்கப்படும்.

நந்தவனத்திலோர்
ஆண்டி...












# தலாய் லாமா விஜயம்

தலாய் லாமா க்ஷேமமாக இந்திய எல்லைக்குள் வந்து விட்டார் என்ற செய்தியைக் கேட்டும், அவருக்கு இந்திய மக்களும் அரசாங்கமும் மரியாதையும் புகலிடமும் அளிக்கும் என்கிற செய்தியைக் கேட்டும் உலகம் முழுதும் மகிழ்ச்சியடையும். புத்தர் அவதரித்ததும் அவருடையமதம் தோன்றியதும் இந்தியாவில். புத்தரே, மாறிமாறித் தலாய் லாமாவாக அவதாரம் செய்கிறார் என்பது திபெத் மக்களின் ஐதிகம். புத்த மதத்தினரின் கொள்கையும் அதுவேதான். ஆகவே, தலாய் லாமா ஒரு நாட்டின் அரசியல் தலைவர் மட்டுமன்றி லோக குருவும் ஆவார். அவரது வருகையினால் இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான மக்களின் உள்ளம் பரவசப்பட்டிருக்கும். பௌத்த மதத்தினைச் சேர்ந்தவர்கள் அடையும் மகிழ்ச்சியில் மற்ற மதத்தைச் சேர்ந்தவர்களுக்கும் முழுப் பங்குண்டு.

சீன சர்க்கார், இனிமையாகப் பேசி, தலாய் லாமாவைத் தங்களிடம் ஒப்படைக்கும்படி கோரலாம். ஹங்கேரி நாட்டுப் புரட்சியையும் அதையொட்டி நடந்த நிகழ்ச்சிகளையும் மனத்தில் வைத்து, தலாய் லாமா விஷயத்தில் இந்திய சர்க்கார் போதிய முன்ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்!

பௌத்த அவதாரம் என்று மக்கள் கருதும் புனித மகான் புத்தர் அவதரித்த நாட்டுக்கே திரும்பி வந்திருக்கிறார். இதை நாம் பாக்கியமாகக் கொள்ள வேண்டும். எந்தப் பாப நிகழ்ச்சியிலும் நன்மையும் கூடவே இருந்து வரும். இது ஒரு இயற்கை நியதி. புத்தர் சத்தியத்தையும் தர்மத்தையும் தயையையும் புத்துயிருடன் தோற்றுவித்துப் பரப்பிய தேசத்துக்கு இமயத்துக்கு அப்புறமிருந்து காடும் மலையும் ஆறும் தாண்டி, பௌத்த முனிவரும் மக்கட் தலைவருமான ஒருவர் ஏழை யாத்திரைக்காரராக வந்து சேர்ந்த இந்த நன்முகூர்த்தத்தில் புத்தாண்டு கொண்டாடுவதோடு, உள்ளங்களைப் புதுப்பித்துக் கொண்டு புண்ணிய வாழ்வு வாழ்வோம்

# கலை விருந்து

அழகெனும் அழகும்ஓர்
அழகு பெற்றதே! —கம்பர்

இப்புத்தாண்டு மலரின் அட்டையை அலங்கரிக்கும் அந்த அணங்கை ஒரு முறை பாருங்கள்!

என்ன அழகு! என்ன அழகு! நமது புராதன சிற்பாசாரியர்கள் கலை உள்ளத்தில் பிறந்த கலைமாது இவள்.

தமிழர்கள் சிற்ப சாஸ்திரத்தில் சிறப்புற்று விளங்கிய காலத்துக் காஞ்சி நகர்ச் சிற்பம்!

இந்த அணங்கு பிறவியிலேயே அழகு! அது போதாதென்று அந்த அழகு எல்லாம் 'பளிச்' என்று எடுத்துக் காட்டும் வகையில் ஆபரணங்களை எடுத்து அணிந்து கொண்டாள். முழு அலங்காரம் ஆனவுடன் தன் அழகைக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள். தலையில் அணிந்திருந்த அந்த ஆபரணம்தான் சற்றுச் சாய்ந்திருந்தது. அதைச் சீர்ப்படுத்தி விட்டால் தன் காலடியில் வையகமும் வானகமும் வந்து புகலடையும் என்ற பெருமித உணர்ச்சி அவள் முகத்தில் ஏற்படுகிறது. அந்த உணர்ச்சியையே சிற்பக் கலைஞன் செதுக்கி வைத்தான். அதை நமது ஓவியர் வினு புத்தாண்டு ஓவியக்கலை விருந்தாக நமக்குப் பெயர்த்தளிக்கிறார்.

## முகப்புப் படம்

புது வருஷத்தின் முதல் பருவம் வஸந்தருது என்பார்கள். மன்மதனின் உற்ற நண்பன் வஸந்தன். மன்மதனும் ரதியும் வஸந்தனும் இம் மாதத்தில் அடிக்கும் கொம்மாளம் இவ்வளவு அவ்வளவல்ல! இளைஞர்கள் உள்ளங்களையும் இளம் பெண்களின் உள்ளங்களையும் மலர்க் கணைகளால் பாடாய்ப் படுத்தி விடுவான் மன்மதன்.

வஸந்தன் புத்தம் புது மலர்களைத் தேசமெங்கும் மலரச் செய்து மன்மத பாணத்தில் தாக்குண்ட காதலர்களை மனமகிழச் செய்வான். அல்லது சில சமயத்தில் விரகதாபத்தை அதிகரிக்கச் செய்தாலும் செய்வான்.

இந்த அனங்கன், ஜனக மகாராஜன் சபையில் என்ன செய்தான் என்பதைக் கவிச் சக்கரவர்த்தி கம்பர் ரஸமாக வர்ணிக்கிறார்.

ஒரு சிவ தனுசை முறிக்க விசுவாமித்திரர் கட்டளையிட, ராமன் எழுந்திருந்தான். அதற்கு முன் ஆயிர வில்லை ஒருவன் இறுத்தான்! அவன் யார்? மன்மதன்தான்!

ஜனக மகாராஜன் சபையில் கூடியிருந்த பெண்கள் ராமன் அழகில் மயங்கி நின்ற காட்சியை மேற்கண்டவாறு ரஸமாக வர்ணிக்கிறார் கம்பர்.

அந்த மன்மதனும் ரதியும் போர்க் கோலம் பூண்டு எழுந்த காட்சியை ஓவியர் ராஜும் அழகாக வரைந்திருக்கிறார்.

இவ்வருடப் புத்தாண்டு மலருக்கு இரண்டு அரிய ஓவியங்களை நேயர்களுக்குக் கலை விருந்தாக அளிக்க முடிந்ததைப் பற்றிப் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

இப்புத்தாண்டில் தமிழகம், எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைவது போல் கலைத்துறையிலும் சிறப்புற்று விளங்குவதாக.

# என்ன சேதி?

## காய்கறி வியாபாரம்

காய்கறி வியாபாரிகள் வேலை நிறுத்தம் ஒரு வகையில் முடிந்தது பற்றி மகிழ்ச்சியடைகிறோம். பெரிய வியாபாரிகள் வேலைநிறுத்தத்தில் மும்முரமாக ஈடுபட்டிருந்தபோது, சென்னை நகரின் சுற்றுப்புறங்களிலுள்ள கிராமங்களிலிருந்து, வெள்ளரிக்காய், முள்ளங்கி, கீரை, கத்திரிக்காய், வெண்டைக்காய் முதலியவற்றைக் கூடையில் கொண்டு வந்து தெருவில் விற்றார்கள். அந்தச் சிறு வியாபாரிகளையும் அங்காடிக்காரர்களையும் 'விற்கக் கூடாது' என்று பெரிய வியாபாரிகள் தடை செய்யாமல் இருந்ததற்குப் பொது மக்களின் சார்பில் நன்றி தெரிவித்துக் கொள்ளுகிறோம்!

சர்க்கார், விற்பனை வரி விஷயமாக லோககாதன் கமிட்டி ஏற்பாடு செய்து, பிறகு அதன்மேல் தாங்கள் ஒரு மசோதா தயார் செய்து, பிறகு அதைச் செலக்ட் கமிட்டிக்கு அனுப்பி ஆராயச் செய்து கடைசியில் சட்டமாக்கினார்கள். அதை எதிர்த்து வியாபாரிகள், ஒரு கடையடைப்பு நிகழ்த்தியதால், சர்க்கார் படிப் படியாகப் பணிந்து கொடுத்து வந்திருக்கிறது. இத்தனை கமிட்டிகள் ஆலோசனை செய்ததெல்லாம் வீண் பணச் செலவு என்பதைக் காய்கறி பழ வியாபாரிகள் நிரூபித்து விட்டார்கள். சர்க்கார் நடக்கும் லட்சணம் இப்படி. சர்க்கார் தாங்கள் செய்யும் காரியங்களில் தங்களுக்கே உறுதியான நம்பிக்கை இல்லை என்பதை மீண்டும் காண்பித்துக் கொண்டு விட்டார்கள்.

## சென்னையில் பொம்மை விழா

குழந்தைகள் உள்ள இடத்தில் பொம்மைகளைக் காணலாம். பொம்மைகள் உள்ள இடத்தில் குழந்தைகளைக் காணலாம். இந்த உண்மையைச் சென்னை வாசிகள் இவ்வாரம் 6ந் தேதியிலிருந்து ராஜாஜி மண்டபத்தில் நேரில் காணத் தொடங்கி யிருக்கிறார்கள்.

நமது பாரத நாட்டுச் சிறுவர் சிறுமியர்களின் கலை வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வரும், டெல்லி "சங்கர்ஸ் வாரப் பத்திரிகை" நிர்வாகிகள், ராஜாஜி மண்டபத்தில் சென்ற 6ந் தேதி முதல் அரிய பெரிய பொம்மைப் பொருட்காட்சி ஒன்றை ஆரம்பித்து வைத்திருக்கிறார்கள். இந்தத் திருவிழாவிலே சுமார் 3000 பொம்மைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. சுமார் 50 நாடுகளிலிருந்து வரவழைக்கப் பட்ட இந்தப் பொம்மைத் திருவிழாவை ராஜ்ய முதல் அமைச்சர் திரு காமராஜ் அவர்கள் திறந்து வைத்தார். இந்திய சர்க்கார், இந்தப் பொம்மைத் திருவிழாவைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து இதற்கு டெல்லியில் நிரந்தரமாக ஒரு பொருட்காட்சிக் கட்டடம் எழுப்பித்தர முன் வந்திருக்கிறதென்றால், இந்தப் பொம்மை விழாவின் சிறப்பை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம். சென்னையில் நடந்துவரும் இந்தப் பொருட்காட்சிக்குக் குழந்தைகள் தான் செல்ல வேண்டுமென்பதில்லை; பொம்மையைப் பார்த்துக் குழந்தைகள் மகிழ்ச்சி யடைவதைக் கண்டு சந்தோஷப்படப் பெரியவர்களும் ஆயிரக் கணக்கில் சென்று வரலாம்.

தொடர்ச்சியான ஆறு விளம்பரங்களில் முதலாவது இது.

# கயிறின் கதை



## தேங்காய் பறித்தல்

மேற்குக் கடற்கரை நாடு கேரளம். தேங்காய் அதிகமாக விளையும் பூமி. தென்னை மரமும், அதை வாழ்க்கை வசதிகளுக்கு வகையாகக் கொண்டு வாழும் 500.000 குடும்பங்களும் இந்தக் கதையின் நாயகர்கள்.

அறுபது அடிக்கும் அதிகமாக உயர்ந்து, பச்சோலைக் கரங்கள் நீட்டி, பாளைச் சிரிப்புச் சிந்தி, தேங்காயக் குலைகள் குலுங்க, தென்றலில் சற்றே தலை அசைத்து நிற்கும் இந்தத் தென்னை மரததைப் பாருங்கள்.

பற்றி ஏறக் கிளைகள் இல்லை. எனவே ஏறிக் காய் பறிப்பது அபாயகரமான வேலையாகத் தோன்றலாம். தேங்காய் பறிப்பவர் அவ்வாறு கருதுவதில்லை. கால்களில் தளை பூண்டு, கைகளால் அடிமரம் அணைத்து, இடுப்பிலிருந்து தொங்கும் வீச்சரிவாள் மின்னொளி சிதற வேகமாக அவர் தொத்தி ஏறுகிறார். தேங்காய்க் குலைகள் அரிவாள் வீச்சேற்று கீழே விழுகின்றன. பூமியின் நாலா பக்கமும் சிதறுகின்றன. கேரளநாட்டுப் பெண்கள் தேங்காய்களைத் திரட்டிக் குவிக்கின்றனர், தேங்காய்கள் உரிப்பதற்குத் தயாராக உள்ளன.





இந்தியாவில் விளையும் 330 கோடித் தேங்காய்களில், 162 கோடி நெற்று களை, 130,000 டன்கள் கயிறும், கயிறில் தயாராகும் பொருள்களும் செய்யக் கயிற்றுத் தொழில் உபயோகப் படுத்துகிறது. இந்தத் தொழில் மூலம் நாட்டுக்கு 11 கோடி ருபாய் வருமானம் வருகிறது. 500,000 குடும்பங்களுக்கு—பெரும்பாலும் பெண்களுக்கு—வேலை கிடைக்கிறது.

காயர் போர்டு இந்திய அரசாங்கத்தால் ஏற்படுத்தப்பட்டிருப்பது. திட்டமான தயாரிப்பு, பொருள்களின் தன்மை நிர்ணயம், ஒழுங்கான முறையில் விற்க ஏற்பாடு செய்வது ஆகிய சேவைகளே இந்த போர்டின் நோக்கம்.

விலை மலிவான கயிற்றுப்பாய்கள், மெத்தைகள், தளவிரிப்புகள் ஆகியன உங்கள் அலுவலகங்களுக்கும் வீடுகளுக்கும் அழகு சேர்க்கின்றன.

# காயர் போர்டு

(கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா) எர்ணாகுளம்.

**ஷோ-ரூம்கள் & விற்பனை நிலையங்கள்:**

16 A, அசப் அலி ரோடு, புது டில்லி—போன்: 26988

1/155, மவுண்ட் ரோடு, மதராஸ்-2—போன்: 85787

1 A, மஹாத்மா காந்தி ரோடு, பெங்களூர்

கஸ்தூர் நிவாஸ், பிரெஞ்சு ரோடு, பம்பாய்—7—போன்: 74053

5, ஸ்டேடியம் ஹவுஸ், சர்ச்கேட், பம்பாய்.

EP.CB.1

# 4து வருஷக் கதை



கதைக்கு முன்னால் கொஞ்சம் விளக்கம் செய்ய விரும்புகிறேன். தேவர்களுடைய சரீரத்தின் தன்மை வேறு. நம்முடைய உடல்களின் தன்மை வேறு. காற்றுக்கும் கடினப் பொருள்களுக்கும் உள்ள வித்தியாசத்தை விட அதிக வித்தியாசம்.

மனித ஜன்மம் இரண்டாகப் பிரிந்து ஆண் பெண் என்கிற பேதம் அமைந்திருக்கிறது. இரண்டாகப் பிரிந்த சிருஷ்டி ஒன்றுசேர சதா முயல்கின்றன. அதுவே பிரகிருதி வேகம். அதுவே காதல். அந்த வேகத்தைத் தர்ம மார்க்கத்தில் அடக்கிச் செலுத்தி உலக வாழ்க்கை நடத்து என்பது பகவான் கட்டளை. அந்தக் கட்டளையை மீறினால் துன்பம். அந்தக் கட்டளையை அனுசரித்தால் இன்பம். தர்மத்துக்கு இசைந்த மகிழ்ச்சி.

மனைவி மக்களுடன் அறநெறியில் வாழ்க்கை நடத்துவதை விட வேறு என்ன மகிழ்ச்சி உண்டு மனிதனுக்கு? சாதாரண மானுடத் தன்மையை இயற்கை விதி இரண்டாகப் பிரித்து ஆண் பெண் என்று வகுத்திருக்கிறது. ஒன்றுக்கொன்று பூரணம் தரும் வகையில் எல்லாம் அமைந்திருக்கிறது.

பீஷ்மாச்சாரியர், ஹனுமான் இவர்களுடைய உள்ளம் ஆண் தன்மையின் வீரமும் பலமும் பெண் தன்மையின் ஈரமும் இரக்கமும் சேர்ந்த உள்ளம். ஆனபடியால் இவர்களுடைய பிரம்மசரியம் பூரணப்பான்மை பெற்றதில்லை.



தெய்வங்களும் மானிடர்களைப் போலவே ஆணும் பெண்ணுமாக அமைந்திருக்கிறதாக நம்முடைய சாஸ்திரம். பிரம்மாவும் சரஸ்வதியும், விஷ்ணுவும் லக்ஷ்மியும், ஈசுவரனும் பார்வதியும் பிரியாத புருஷன் மனைவிமார்கள். ஆனால் நம்முடைய பிரகிருதி வேறு. தெய்வங்களின் பிரகிருதி வேறு. தெய்வங்களின் சரீரம் மிகவும் சூட்சுமம்; நம்முடைய அறிவுக்கு எட்டாத நுண்ணிய அமைப்பு. குணங்களே அமைந்து தெய்வங்களின் சரீரங்களாகி விடுவதாக வைத்துக் கொள்ளலாம். கருணையும் மற்ற ஈர உணர்ச்சிகளும் பெண் உருவம். ஈசுவரத் தன்மை சத்தியம் நியாயம் முதலியன சேர்ந்து ஆண் உருவம்.



மனித ஜாதியை எழுதும்போது உடலமைப்பில் கருத்துச் செலுத்திச் சித்திரம் தோன்ற வேண்டும். தெய்வங்களைச் சித்திரத்தில் காட்டும்போது குணங்கள் முகத்தில் தோன்ற வேண்டும். உடுத்திய உடை மூடியும் மூடாமலும் உடலின் அவயவங்களை எடுத்துக் காட்டுவது தேவ ஜாதிக்குச் சரியாகாது. மானிட ஸ்திரீகளுக்கும் தேவதைகளுக்கும் உள்ள பேதம் இதுவே. தற்போது நம்முடைய சித்திரக்காரர்கள் வரைவதில் அந்த வித்தியாசம் காண்பதில்லை. பொய்ப் புருவங்களும் மையிட்ட கண்களும் தலை முடியும் மற்ற அவயவங்களும் எல்லாம் சினிமா நடிகர்களினதாகவே அமைந்து வருவதைக் காண்கிறோம். கண்டு அதிருப்தி அடைகிறோம்.

தெய்வங்களைச் சித்திரிப்பது கடினம். குணங்களை முகத்தில்தான் காண முடியும். முகத்தில் பவித்திரமும் சாந்தமும் தோன்றச் சித்திரம் வரையத் தெரிந்த பின்னரே தெய்வங்களை எழுத வேண்டும். அதற்கு நல்ல பயிற்சி வேண்டும். கோபத்தையும் சிரிப்பையும் எளிதில் எழுதி விடலாம். சாந்தமும் புனித உள்ளமும் முகத்தில் விளங்கும் சித்திரம் எழுதுவதற்கு அதிகப் பயிற்சி வேண்டும். ஆண் பெண் இருபால் விக்கிரகங்களுக்கும் இது பொது உண்மை. நடராஜ விக்கிரகங்களிலும் புத்த விக்கிரகங்களிலும் உயிரோடு சாந்த நிலையை

இவ்வாறு வைத்துக் கொண்டு நாம் பிரம்மா, விஷ்ணு, சிவன், சரஸ்வதி லக்ஷ்மி, பார்வதி இந்தத் தெய்வங்களை தியானிக்க வேண்டும். நம்மைப் போன்ற ஜட உடல்களல்ல அவை. தெய்விக குணங்களே சரீரங்களாகி வேலை செய்கின்றன என்று வைத்துக் கொள்ள வேண்டும். அறிவுக்கு எட்டாத விஷயங்களை இவ்வாறுதான் தியானித்து மனத்தில் நிற்கச் செய்யமுடியும்.

ஆனபடியால், சங்கரனையும் பார்வதியையும் தியானிக்கும் போதும், ஹரியையும் மகாலக்ஷ்மியையும் வழிபடும் போதும், பிரம்மாவையும் சரஸ்வதியையும் மனத்தில் கொள்ளப் பார்க்கும் போதும், மக்களுக்கும் தேவர்களுக்கும் உள்ள பேதத்தை உணர்ந்தே தியானிக்க வேண்டும். கேவலம், நம்மைப் போல் அவர்களும் என்று வைத்துக் கொண்டு தியானிப்பது அறியாமை.

நம்முடைய வாலிபச் சித்திரக் கலைஞர்கள் இதைக் கவனிக்க வேண்டும்.

***சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்***



யும் காணலாம். உயிரற்றும் செய்து விடலாகாது. பசு வேகமும் இருக்கலாகாது.

* * *

சரஸ்வதியும் லக்ஷ்மியும் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"அக்கா! பூவுலகத்தில் ஸ்திரீகள் இப்போது ரொம்ப மேன்மை அடைந்து விட்டார்கள். எல்லாரும் பள்ளிக்கூடம் போய்ப் படித்து, சகல சாஸ்திரங்களும் வித்தைகளும் கற்றுப் பயிற்சி பெற்று விட்டார்கள். ஆண்களுக்குச் சரிநிகர் சமானமாகி விட்டார்கள். இதைப் பார்க்க எனக்கு மிகுந்த திருப்தியாக இருக்கிறது" என்றாள் சரஸ்வதி தேவி.

"ஆமாம்! சரஸ்வதி, உண்மை. படித்தது மட்டுமல்ல; கச்சேரிகளுக்கும் தொழிற்சாலைகளுக்கும் போய்ப் பணமும் சம்பாதிக்கிறார்கள். பெற்றவர்களும் மணந்த புருஷர்களும் இதற்குச் சம்மதித்து சந்தோஷமாக ஒன்றுக்கு இரண்டாக வருவாய் சம்பாதித்து வருகிறார்கள். செல்வம் பெருகி வருகிறது. எனக்கும் இது மிகத் திருப்தியாக இருக்கிறது" என்றாள் லக்ஷ்மி.

இதைப் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தாள் பார்வதிதேவி. அவள் தனியாகக் கொஞ்சம் எட்டி உட்கார்ந்திருந்தாள். இப்போது கிட்ட வந்து பேச ஆரம்பித்தாள்.

"நீங்கள் சந்தோஷப்படுகிறீர்கள். எனக்கு இதுவெல்லாம் பிடிக்கவில்லை. இந்த மானிட ஸ்திரீகள் தற்போது செய்து வரும் புது முயற்சிகளும் சம்பாதனையும் என் தவத்துக்கு இடையூறு உண்டாக்கி வருகின்றன" என்றாள்.

"நீ சொல்லுவது விளங்கவில்லை" என்றாள் பெருந்தேவி.

"ஏன் விளங்கவில்லை? அதோ பார். புகை கிளம்பி மேலே எழுவதைப் பார்" என்றாள்.

மக்கள் செய்யும் பாவங்கள் மேலே கரும் புகையாகக் கிளம்பி எழுவதை மூவரும் பார்த்தார்கள். அப்போது அவர்கள் முகங்களில் துக்கம் தோன்றிற்று.

* * *

"நீ சொல்வது உண்மை" என்றாள் சரஸ்வதி.

லக்ஷ்மியும் அப்படியே ஒப்புக் கொண்டாள்.

"படிப்பும் பணமும் தருமத்தோடு கலந்தவையாக இருக்க வேண்டும்" என்றாள் சரஸ்வதி.

"படிப்பும் பணமும் அபாயம்" என்றாள் பார்வதி.

"ஆனால் பெண்களுக்குப் படிப்பு வேண்டாமா?" என்றாள் லக்ஷ்மி.

"நீயும் நானும் அறிவும் ஞானமும் அடையவில்லையா? நம்முடைய படிப்பும் வேலையும் நம்முடைய கணவன்மார்களின் படிப்பும் வேலையும் ஒன்றல்லவே?" என்றாள் பார்வதி.

பேச்சு முடிந்து யோசனையில் ஆழ்ந்தார்கள்.

முடிவில் பார்வதி சொன்னாள்:

"சரஸ்வதி! நீ இவர்களிடைச் சென்று அறிவு ஊட்ட வேண்டும். ஆண்கள் என்ன செய்ய வேண்டும், பெண்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைப் போதிக்க வேண்டும்" என்றாள்.

"சோம்பலை நீக்க வேண்டும் ஆண்கள்" என்றாள் லக்ஷ்மி.

"குடும்பமும் குழந்தைகளும் மனைவியின் பொறுப்பாக இருக்க வேண்டும்" என்றாள் பார்வதி.

"கருணை இருக்க வேண்டும் இருபாலருக்கும்" என்றான் கண்ணன், திடீரென்று அந்தச் சமயத்தில் வந்து லக்ஷ்மி பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு.

இதைக் கண்ணன் சொன்னதும் பாபப் புகை மறைந்தது. 33-வது வருஷமாகிய விகாரி ஆரம்பித்தது. நான்கு நாட்களில் வரும் வெள்ளிக்கிழமையன்று ராமாவதாரம். ராமசந்திரனை மக்கள் கொண்டாடுவார்கள். உழைப்பும் கருணையும் ஓங்குக. அறம் வளர்க. மங்களம்

# ஆசார்ய சுவாமிகளின் ஸ்ரீமுகம்

நம் தமிழ் நாட்டிலும் கேரளத்தி லும் வங்காளத்திலும் புத்தாண்டு சூரியன் மேஷராசியில் வரும்போது துவக்கப்படுகிறது.

அனேகமாக இந்தச் சமயந்தான் சூரியன் நேர் கிழக்கே உதிப்பான். இரவும் பகலும் சம அளவாக இருக்கும், சாயன கணித முறையில் மேஷப் பிரவே சத்துக்கு இருபத்திரண்டு நாட்கள் முன்னதாகவே இந்தப் பகல் இரவு சமான நிலை ஏற்படுகிறது.

புத்தாண்டு பிறக்கப் போவதற்கு அறி குறியாக இயற்கை அன்னை தனது மர வர்க்கங்களில் அரசிளங் குழந்தைகளா கிற அரசையும் வேம்பையும் அடியோடு இலையுதிரச் செய்து புதுத்துளிர் துளிர்க்க விட்டு அரசுக்குப் பூவில்லாததால் வேம்பை மாத்திரம் பூக்கவும் செய்து அவைகளின் அடியில் வீற்றிருக்கும் விநா யகர், ஆதிசேஷன், சிவபெருமான், பாம்பி லாடும் கண்ணன் முதலியவர்களுக்கு முதலில் பூரண சூரிய பூஜை செய்வித்து, சூரியன் கடுமையாகப் போகும் நாட் களில் துளிர்க்குடை பிடிக்கிறாள்.

புத்தாண்டில் பூக்கும் முதல் வேப்பம் பூவை அருந்துகிறோம். பொங்கலன்று இனிய கரும்பைக் கடித்தோம். வருஷப் பிறப்பன்றோ கசப்பை அருந்துகிறோம். ஆரம்பத்தில் கசப்பாயிருக்கும் அனு பவங்களெல்லாம் முடிவில் தித்திக் கும். ஆரம்பத்தில் தித்தித்து விட்டால் முடிவில் கசக்கும். இது இன்றும் என்றும் உள்ள அனுபவம்.

கசப்பென்று ஒன்றையும் வெறுக் காது புத்தாண்டின் துவக்கத்தில் மருந் தாம் கசப்பையே இயற்கை அன்னையின் அருளாக எதிர்கொண்டு வரவேற்போம். ஒன்றிலும் வெறுப்பு வேண்டாம்.

துவக்கத்தில் 'விகாரி'யான கசப்பை அருந்தியதால் ஒரு குறையுமில்லை.

என்றும் எல்லாம் தித்திக்கும் நிலைக்கு இது அடிகோலாகும்.

இவ்விகாரி புத்தாண்டில் புத்தாண்டவ இளைஞர் திபெத்திய லாமாவின் வருகை விகாரியாகவும்கசப்பாகவும்இருந்தாலும் முடிவில் அவருக்கும் இனிப்பாய் முடிந்து, நம் நாட்டின் மதிப்புக்கும் உலக மாந்தர் நேர்மைக்கும் பெருமையாக முடிய இறைவன்திருவருளை இறைஞ்சுகின்றோம்.



# தமிழ் வருஷப்பிறப்புக்கு
# நோவாக் ரேடியோ வாங்கி மகிழ்வடையுங்கள்

NOVAK

Hi-Fi



## நோவாக் ரேடியோ

**உங்களது இல்லங்களை அலங்கரித்து**

**பரிபூரண திருப்தியை அளிக்கிறது**

இந்த 'நோவாக்' ரேடியோ ஹை–பி (ஹைபெடிலிடி) இயற்கைக் குரலை அப்படியே வெளிக்கொணர்ந்து ஒலிபரப்பும் நுட்பமான நவீன முறையில், குரல் வகைகளையும் இன்னிசைகளையும், தாரஸ்தாயி மந்தரஸ்தாயி பிரஸ்தாபங்களையும் உங்களுக்குப் பிடித்தமாதிரி, இரண்டு ஒலிபெருக்கிகளை இசைவாகப் பொருத்தி வைப்பதன் மூலம் வழங்குகிறது.

இந்த நவீன நுட்பத்தைக் கையாண்டு உயர்ந்த முறையில் தயாரிக்கப் பட்டிருக்கிறது நோவாக் ஹை–பி என்ற பிரசித்தி பெற்ற பெல்ஜிய நாட்டு ரேடியோ. உன்னதமான முறையில் நாதத்தை இனிமையுடன் அளிக்கவல்லது.

உங்களுக்கு அருகாமையிலுள்ள நோவாக் வியாபாரியிடம் சென்று இந்த ரேடியோவை வைக்கச் சொல்லிக் கேட்டுப் பாருங்கள்.

## நோவாக் ரேடியோ

**மாடல் 684T Hi-Fi**

**ரூ. 550/-**

வரிகள் தனி

சக்திவாய்ந்த 6 சூப்பர்ஹெட் வால்வுகள் ★ 13.4 முதல் 572 மீட்டர் வரை 4 பாண்டுகளில் ★ தானாகவே இயங்கும் 'மியூஸிக்/ஸ்பீச்' முறை ★ தாரஸ்தாயி மந்தரஸ்தாயியில் மாற்றி வழங்கும் Hi-Fi ஏற்பாடு ★ எலெக்ட்ரோமாக்னடிக் ஸ்பீக்கர்கள் 9½"ஒலிப்பிகள் 4½" ட்வீட்டர் ★ மத்திய அலைகளைப் பிடிக்கும் ஏரியல் ★ சிற்றலைகளுக்கான மறைக்கப்பட்ட ஏரியல் பான்டைப் ட்யூனிங் இண்டிகேடர் EM 80 ★ பிலிப்ஸ் ட்யூனிங் ★ சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது. ★ அதிகப்படி ஸ்பீக்கர்களும் பிக்கப்பும் வைத்துக்கொள்ள வசதிகள். ★ 205, 225, 250 வால்டேஜுகளுக்கான அட்ஜஸ்ட் மன்டுகள். ★ ஏ.ஸி. அல்லது ஏ.ஸி./டி.ஸி. ★ ரம்யமான 'வினீர்' மரத்தினால் செய்யப்பட்ட 22"×14"×9½" காபினெட்

உற்பத்தியாளர்கள்: **டெலிராட் பிரைவேட் லிட்., பம்பாய்-10**

தென்னிந்தியாவுக்கு விநியோகஸ்தர்கள்:

## ஓபுல் ரெட்டி (மதராஸ்) பிரைவேட் லிட்.,

**31, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு, சென்னை-2**

சென்னை ராஜ்ய ஜில்லா விற்பனையாளர்கள்: டி. எஸ். என். சுந்தரராஜ பாகவதர் அண்ட் சன்ஸ், பாண்டிச்சேரி - ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (ஸவுத் இந்தியா) லிமிடெட், கோயமுத்தூர் எ. சப்பன் அண்ட் கம்பெனி வேலூர் - ஜார்ஜ் ஓக்ஸ் பிரைவேட் லிமிடெட், உதகமண்டலம் நேஷனல் ரேடியோ ஸானிக்ஸ், கும்பகோணம் - பிலிப்ஸ் ரேடியோ கம்பெனி, காஞ்சீபுரம் ஸ்ரீ நடராஜ ரேடியோ ஹோம், சிதம்பரம் - ஜெர்மன் ரேடியோ ஹவுஸ், திருச்சி பாலு ரேடியோ சர்வீஸ், மதுரை - ஆர். சுந்தரேசன் அண்ட் கம்பெனி, சேலம் & கிருஷ்ணகிரி

சென்னையில் டீலர்: ஜே. எஸ். பதி & பிரதர்ஸ், 62, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-17




## 77

அறத்தை வற்புறுத்திய முனிவர் பொருளைப் பற்றியும் மக்களுக்குச் சொல்லுகிறார். அந்தப் பாட்டுகளினின்றும் சிலவற்றை எடுத்துச் சொல்லலாம் என்று ஆரம்பிக்கிறேன்.

பொருள் என்றால் இந்த வாழ்வில் அடையக் கூடிய செல்வம் முதலியன. செல்வமானது ஐம்பொறிகளுக்கு இன்பம் தரும் விஷயங்களை விரும்பியபடி அடையக்கூடிய சாதனம். அதைப் போலவே கல்வி முதலிய மற்றச் சாதனங்களும். இவையெல்லாம் விஷங்களே ஆயினும், விஷம் அளவுக்கு அடங்கியும் சரியான அநுபானத்துடனும் உட்கொண்டால் உடலுக்குள் தோன்றிய குற்றங்குறைகளை நீக்கும் மருந்தாவது போல், பொருளும் அறமாகிய அநுபானத்துடன் சேர்ந்து தகுந்த அளவில் அடங்கியிருப்பின் உயிருக்கு உதவும். தீமை விளைவிக்காது. விஷத்தைக் கடையில் வாங்கி இஷ்டம் வந்தபடி அருந்தி விடலாகாது. பொருளைப் பற்றிய உண்மைகளையும் ஆள வேண்டிய முறைகளையும் முனிவராகிய வைத்தியரிடம் பெற்று உணர்ந்து வாழ்க்கையை நடத்த வேண்டும்.

கல்வியைப் பற்றிச் சொல்லுகிறார். அதில் முதன் முதலில் முனிவர் வற்புறுத்துவது: படிக்கும் நூலைத் தனக்கு வேண்டும்படி பொருள் கொள்ளாமல் 'கசடு அற' அதாவது குற்றம் நீங்கிய அதன் உண்மைப் பொருளை உணர வேண்டும், அப்படி நடக்க வேண்டும். கல்வி அறிவு பெறுவதற்காக மட்டும் அல்ல, அறிந்தபடி வாழ்க்கை நடத்துவதற்காக. இல்லையேல் அறிவு பயனற்ற பொருள். அதற்காகச் செலவழித்த காலம் வீண். கற்ற கல்வி வாழ்க்கைப் பண்பாடாக வேண்டும்.

கற்க கசடறக்
கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

கற்பவை என்பதில் கற்க வேண்டிய நூல்களைக் கற்க வேண்டும் என்றும் பயனற்ற நூல்களைக் கற்பதில் காலம் செலுத்த வேண்டாம் என்றும் அடங்கியிருக்கிறது. கற்றபின் அதற்குத் தக்கபடி நிற்காமற் போனால், அடைந்த கல்வி ஜீரணமாகாத உணவைப் போல் பயனற்றதுமன்றித் தீங்கும் பயக்கும். கல்வியெல்லாம் பண்பாடாகிவிட வேண்டும். உணவு ஜீரணமாகி உடலுக்குள் பரவும் இரத்தம் ஆவது போல்.

* * *

கல்வியை முனிவர் இரண்டாகப் பிரித்தார். ஒன்று, கணிதம்; மற்றொன்று இலக்கியம். எண் என்பது கணித நூல்கள் எல்லாம். எழுத்து என்பது இலக்கியமெல்லாம். இவை இரண்டும் மனிதனுக்கு இரண்டு கண்களைப் போல் ஆவன. கல்வி ஏறாத மனிதன் எந்தத் தொழில் எந்தப் பதவியில் இருந்தாலும் குருடனாவான். இவர்களுக்குக் கல்வி வேண்டும் இவர்களுக்கு வேண்டாம் என்பதில்லை. மக்கள் அனைவருக்கும் கல்வி வேண்டும்

என்பதைக் காட்டுவதற்காக 'வாழும் உயிர்க்கு' என்று சொல்கிறார் :

எண்என்ப ஏனை
எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்என்ப வாழும் உயிர்க்கு.

முதலில் வருகிற 'என்ப'-என்று சொல்லப்படுவன : அஃறிணைப் பன்மைப் பெயர்.

இரண்டாவது அடியிலுள்ள 'என்ப'-அறிவோர் சொல்வர் : உயர்திணைப் பன்மை வினை.

இந்தக் குறளில் உயிர் என்பது மக்கள்.

* * *

இதை இன்னும் வற்புறுத்த அடுத்த குறள் :

கண்உடையர் என்பவர்
கற்றோர் முகத்துஇரண்டு
புண்உடையர் கல்லா தவர்.

கல்வி அடைந்தவர்களே கண்களைப் பெற்றவர்கள். மற்றவர்களுடைய கண்கள் முகத்தில் இரண்டு புண்கள், அவ்வளவே. புண்களில் சீயும் குருதியும் வருவது போல் கண்களில் நீரும் புளிச்சையும் தோன்றும். பயனற்ற அவயவமாகும்.

கல்வி கற்கும் மாணவன், குருவினிடம் அறிவு பெற நிற்கும் சீடன், இவர்கள் எந்த மன நிலையைக் கொண்டிருக்க வேண்டும் என்பதை முனிவர் சொல்லுகிறார் :

உடையார்முன் இல்லார்போல்
ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்.

பணக்காரனிடம் ஏழை தனக்கு உதவும்படி கேட்கும்போது, எவ்வாறு அடக்கமும் பயமும் கொண்டு நிற்கிறானோ அவ்வாறு சீடன் நிற்க வேண்டும். பணத்தை விரும்பும் ஏழை போல் மாணவன் அறிவை விரும்ப வேண்டும். கொடுப்பானோ இல்லையோ, கொடுக்க மறுத்தால் என்ன செய்வேன் என்று பயமும், பிச்சை கேட்பவனுடைய அடக்கமும் இருக்க வேண்டும். இந்த அடக்கத்துக்கு இசையாதவன் கல்வி இல்லாமல்தான் இருக்க நேரிடும்.

கற்றவர்கள் எல்லாம் இந்த ஆசையும் அடக்கமும் கொண்டு கற்றார்கள். அப்படிக் கல்லாதவர் கடையரே ஆவர். மக்கள் சமூகத்தில் கீழ்நிலையில் நிற்க வேண்டியவர்கள் ஆவார்.

## 32. சந்திரவம்சக் கதைகள்

### புரூரவஸும் ஊர்வசியும்

சூரிய வம்சப் பரம்பரையை வர்ணித்து விட்டுச் சுகர் பரீக்ஷித்துக்கு சந்திர வம்ச வரலாறுகளை எடுத்துரைக்கலானார்.

பிரமனுக்குப் பிறந்தவர் அத்ரி முனிவர். அவருடைய ஆனந்தக் கண்ணீரில் தோன்றியவரே அமுத வடிவான சந்திரன் என்பது பழையவரலாறு. அந்தணருக்கும், மருந்துச் செடிகொடிகளுக்கும், நட்சத்திரங்களுக்கும் அதிபதியாக அவரைப் பிரமன் நியமித்தார். ஒரு சமயம் சந்திரன் பிரஹஸ்பதியின் மனைவியாகிய தாரையைத் தூக்கிச் சென்று விட்டார். இதனால் ஒரு போரே தொடர்ந்து விட்டது. இரு சார்பாரும் சோர்ந்து போன பிறகு, பிரமன் சந்திரனைக் கண்டித்துத் தாரையை மறுபடியும் பிரஹஸ்பதியிடம் சேர்ப்பித்தார்.

தாரையினிடம் சந்திரனுக்குப் பிறந்தவன் புதன். புதன் மகன் புரூரவஸ்.

புரூரவஸுடைய வசீகரம் மேன்மை கொடை, அன்பு, செல்வம், வீரம், இவைகளை நாரதர் வாயிலாகக்கேட்ட ஊர்வசி என்ற தேவமாது அவனை அடைய விரும்பினாள். மனித உருவோடு மன்மதனைப் பழிக்கும் எழில் வாய்ந்த அவ்விளைஞன் முன் தோன்றினாள். புரூரவஸ் அவளைக் கண்டதும் மெய்சிலிர்த்துப் பேசலுற்றான்: "உன் வரவு நல்வரவாகுக. நான் செய்ய வேண்டுவதை உரைப்பாய். பல்லாண்டு பரமானந்தத்துடன் வாழ்வோம்." அதற்கு ஊர்வசி, "அந்தமுள்ள அரசே! உம்மைக் கண்டவள் கண்கள் வேறிடம் நோக்குமா? உம்மை மனத்திலே வரித்த எனக்குச் சிந்தை தடுமாறுகிறது. உம்முடன் வாழ விரும்புகிறேன். இதோ இந்த இரண்டு செம்மறி ஆடுகளைக் காப்பாற்றி வாருங்கள். அவைகளைக் குழந்தைகள் என்று அன்புடன் வளர்த்து வருகிறேன். அவை இருக்கும் வரை நான் உம்மோடு களித்திருப்பேன்" என்றாள்.

ஆனந்தக் கடலில் ஆழ்ந்து ஊர்வசியோடு அரசன் பல காலம் வாழ்ந்தான். ஆனால் தன் சபையில் ஊர்வசியைக் காணாத இந்திரன் கந்தர்வரை விளித்து அவளைத் தேடச் சொன்னான். அவள் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொண்டு கந்தர்வர்கள் ஊர்வசி புரூரவனிடம் ஒப்படைத்திருந்த ஆடுகள் இரண்டையும் தூக்கிச் சென்றார்கள். ஆடுகள் கதறின. அந்த ஓசையைக் கேட்ட ஊர்வசி தன்னுடன் இருந்த அரசனைப் பலவாறு நிந்தித்தனள். "பகலில் பௌருஷம் காட்டி இரவில் பதுங்கும் பேடியை வரித்தேனே நான்" என்று ஏளனம் செய்தாள். இக்கடுஞ் சொற்களைக் கேட்ட புரூரவஸ் இரவிலே ஆடுகளைத் தேடி ஓடினான். ஊர்வசி திரும்பவும் சுவர்க்கம் சென்று விட்டாள்.

விடுதி திரும்பிய அரசன் ஊர்வசியைக் காணாது மதி இழந்து பித்தனைப் போல் ஆனான். உலகெல்லாம் திரிந்தான். ஒரு சமயம் குருக்ஷேத்திரத்தில் சரஸ்வதி நதிக்கரையில் ஊர்வசியைக் கண்டான். தன்னோடு திரும்பும்படி மன்றாடிக் கேட்டான். இல்லையேல் அங்கேயே உயிரை விடுவதாகச் சொன்னான். தன் உடலைக் கழுகும் ஓநாயும் தின்று திருப்தி அடையட்டும் என்று வீரம் பேசினான். ஆனால் ஊர்வசி மனம் கசியவில்லை. "கேவலம் ஒரு பெண்ணின் பொருட்டு உயிர் துறப்பது ஆண்மைக்கு அழகன்று. பெண்கள் அன்பற்றவர்கள். தங்களுக்கு வேண்டியதைச் சாதிக்கச் சாகசம் செய்வார்கள். குணமற்ற கன்னிகைகள் மதி குன்றியவரை மயக்கிப் பலரோடு மகிழ்வார்கள். நீ இன்னும் ஒரு முறை என்னுடன் வாழ்வாய்" என்றாள்.

ஊர்வசி கருத்தரித்திருப்பதை அரசன் அறிந்து கொண்டான். ஓராண்டு கழிந்ததும் அவள் மறுபடியும் அரசனுடன் ஒரு முறை வந்து தங்கினாள். கந்தர்வரை வழிபடுமாறு அரசனுக்கு உபதேசம் செய்தாள். அரசனும் அவ்வாறே செய்தான். கந்தர்வர்கள் அரசனுக்கு நெருப்புப் பாத்திரமொன்றைக் கொடுத்

தார்கள். அதை உபாஸனை செய்து புரூரவஸ் நாளடைவில் கந்தர்வ லோகத்தை அடைந்தான்.

## பரசுராம அவதாரம்

புரூரவஸ்ஸுடைய வம்சத்தில் வந்தவருள் காதி என்பவர் ஒருவர். ரிசீகர் என்ற அந்தணன் காதியின் புதல்வி ஸத்யவதியைத் தமக்கு மணம் செய்து கொடுக்கும்படி கேட்டார். அதைக் காதி மறுத்து விட்டார். தனக்குத் தகுந்தவன் இல்லை இந்த அந்தணன் என்பது அவர் கருத்து. "நாங்கள் உன்னத குலத்தவர்கள். என் பெண் வேண்டுமானால், வெண்ணிற மேனியும் ஒரு காது மட்டும் கறுப்பும் வாய்ந்த ஆயிரம் குதிரைகளைக் கொண்டு வா" என்றார். ரிசீகர் பிருகு வம்சத்தைச் சேர்ந்தவர். தவத்தின் பலம் படைத்தவர். உடனே வருணனை வேண்டிக் கொண்டு ஆயிரம் குதிரைகளையும் கொண்டு வந்து விட்டார். ஸத்யவதியையும் மணந்து கொண்டார்.

மகன் பிறக்க வேண்டும் என்று அவர் மனைவிக்கும் அவள் தாய்க்கும் ஆசையிருந்தது. மந்திரம் ஓதி இரண்டு அன்னக் கவளங்களை முனிவர் தயார் செய்தார். ஒன்று க்ஷத்திரிய குலத்தைச் சேர்ந்த தன் மனைவியின் தாய்க்கு, மற்றொன்று அந்தண குலத்தை அடைந்த தன் மனைவிக்கு. ஆனால் ஸத்யவதியின் மீது ஆசை கொண்ட முனிவர் உயர்ந்த கவளத்தைத் தம் மனைவிக்காகவே வைத்திருப்பார் என்று சந்தேகம் கொண்டு, ஸத்யவதியின் தாய் அதைத்தான் தின்றுவிட்டாள். அச்சமயம் முனிவர் நீராடச் சென்றிருந்தார். திரும்ப வந்து நடைபெற்றதை அறிந்தார். தம் மனைவியைக் கண்டித்தார். "உன் மகன் எதிரியை அழிக்கும் க்ஷத்திரிய குணம் பொருந்தியவனாய் விளங்குவான். உன் தம்பி பிரஹ்மஞானியாக இருப்பான்" என்றார். சத்தியவதி மிக்க வருத்தமுற்றதைக் கண்டு "உன் மகனுக்குப் பிறக்கும் மைந்தன் ஞானி ஆவான்" என்றார்.

ஸத்யவதிக்கு ஜமதக்னி பிறந்தார். நாளடைவில் ஸத்யவதி, "கௌசிகி" என்ற புண்ணிய நதியாக மாறினாள். ஜமதக்னிக்கு ரேணுகா என்பவளிடம் அநேக புதல்வர்கள் பிறந்தார்கள். அவர்களுள் கடைசிப் புதல்வன் புகழ் பெற்ற பரசுராமன். பரசுராமன் விஷ்ணுவின் அம்சமே என்பது அறிந்தவர் கொள்கை. புவி மீது ஆணை செலுத்தும் அரசர்கள் நெறி தவறி தமோகுணம் மேலிட்டுத் தீச் செயல் செய்து மறை ஓதுவோரைத் துன்புறுத்தியபோது அவர்கள் குலத்தை அறவே நாசம் செய்த பெரியோன்.

அக்காலத்தில் அரசனாக அர்ஜுனன் என்று ஒருவன் இருந்தான். அவன் தத்தாத்ரேயரை வழிபட்டுத் தவம் புரிந்து பல வரங்களைப் பெற்றான். ஆயிரம் கைகள், எதிரிகள் கண்டு அஞ்சும் தன்மை, இந்திரிய சக்தி, செல்வம், புகழ், பலம், யோக சக்திகள் எல்லாம் அடைந்து செருக்குற்றிருந்தான். தடையின்றி வாயுவைப் போல் எங்கும் போகும் வல்லமை வாய்ந்தவனாய் விளங்கினான்.

ஒரு தருணம் அவன் நர்மதா நதியில் நீராடச் சென்றான். பொங்கும் பெருமையோடு எழில் மங்கையர் எண்ணற்றவர் சூழ நவரத்தின மாலை மார்பில் திகழ, தனது ஆயிரம் கைகளால் ஆற்றின் போக்கைத் தடுத்து அணை கட்டினான்! அருகில் பாசறை நியமித்திருந்த ராவணன் ஆற்று நீர் தனது இருப்பிடத்தை அடித்துக் கொண்டு போவதைக் கண்டு சினமுற்றான். அர்ஜுனனை எதிர்த்துப் போராடச் சென்றான். அருளால் பலம் பெற்ற அர்ஜுனனுக்கு ராவணன் எம்மாத்திரம்? தனது மனைவியர் கண்டு களிக்க ராவணனைப் பிடித்துத் தனது தலைநகரமாகிய மாஹிஷ்மதியில் குரங்கைப் போல் கூட்டில் அடைத்து வைத்தான். பல நாட்கள் கழித்து அவனை விடுவித்தான்.

மற்றொரு சமயம் வேட்டையாடக் கானகம் சென்ற அர்ஜுனன் ஜமதக்னி முனிவரின் ஆசிரமத்தை அடைந்தான். முனிவரிடம் கேட்டதைக் கொடுக்கும் காமதேனு என்ற பசு இருந்தது. அப்பசுவின் சக்தியால் அரசனுக்கும் அவ



"என் தேர்தல் பிரசங்கத்துக்கு அவ்வளவு கூட்டம் வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. நினைத்ததைவிட இரண்டு பங்கு வந்திருந்தது!"
"நீங்கள் நினைத்தது எவ்வளவு?"
"நான் இரண்டுபேர் வருவார்கள் என்று நினைத்தேன். நாலுபேர் வந்திருந்தார்கள்."

னுடைய பரிவாரங்களுக்கும் அமைச்சர் தொட்டு மூட்டை தூக்கும் விலங்கு வரை அனைவருக்கும் ஏராளமான அன்னமும் பானமும் முனிவர் நல்கினார். தனக்கு மிஞ்சிய செல்வம் முனிவரிடம் இருப்பது அரசனுக்குப் பொறுக்கவில்லை. தன் சேவகர்களைக் கூப்பிட்டுப் பசுவைத் தூக்கிச் செல்லும்படி கட்டளை இட்டான். முனிவரிடம் மரியாதைக்காகிலும் ஒரு வார்த்தை கேட்க வேண்டும் என்ற எண்ணமே அவனுக்குத் தோன்றவில்லை. முனிவருக்கு வேள்விக்கும் நினசரி வேண்டிய பால் வெண்ணெய் நெய் முதலியவற்றை அளிக்கும் பசு காணமற் போனதில் அளவில்லா வருத்தம் வந்தது. அச்சமயம் முனி மகன் பரசுராமர் வெளியே போயிருந்தார். ஆசிரமத்துக்குத் திரும்பியதும் அர்ஜுனன் செய்த கொடுஞ் செயலைக் கேள்வியுற்று அடித்த பாம்பெனச் சீறினார். தனது கோடாலியையும் வில்லையும் அம்பையும் எடுத்துக் கொண்டு யானையைத் துரத்தும் சிங்கமென அர்ஜுனனை எதிர்க்கச் சென்றார். கருமான் தோல் தரித்துக் கதிரவன் கிரணங்களெனத் துலங்கும் சடையோடு வரும் பரசுராமனை அர்ஜுனன் கண்டான். ராமனை எதிர்க்கப் பெரும் சேனையை ஏவினான். ஆனால் வாயு வேகம் மனோ வேகம் படைத்த பரசுராமன் நினைத்த இடமெல்லாம் தோன்றி அச் சேனையைத் துகளாக்கினான். அழிந்த சேனையைக் கண்ணுற்ற அர்ஜுனன் சினம் கொண்டு தானே போர் புரிய முன் வந்தான். ஆயிரம் கைகளால் ஐந்நூறு வில் ஏந்தி அனைத்திலும் பாணங்களைத் தொடுத்தான். கைகளை ராமன் அறுத்தெறிந்தான். மலை உச்சியை வெட்டுவது போல் அர்ஜுனனுடைய தலையையும் சீவித் தள்ளினான்.

காமதேனுவையும் அதன் சேனையையும் மீட்டுத் தன் தந்தையிடம் ஒப்புவித்தான். ஆனால் ஜமதக்னி மகிழ்ச்சி அடையவில்லை. "ராமா! காரணமின்றி ஓர் அரசனைக் கொன்று விட்டனையே. வேந்தன் கடவுளின் அம்சம் என்று அறியாயோ? தீமையை மறந்து தீங்கிழைத்தோரை மன்னிப்பதன்றோ அந்தணருக்குப் பெருமை! அதன்றோ ஹரியின் தாளை அடைவதற்குச் சிறந்த பாதை. இப்பாபத்தைப் போக்கப் புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று சேவித்து வா" என்றார்.

தந்தையின் கட்டளையைச் சிரமேற்கொண்டு பரசுராமன் ஓராண்டு தீர்த்த யாத்திரை செய்தான். ஒரு நாள் பரசுராமனின் தாய் ரேணுகா கங்கைக்குச் சென்ற பொழுது அங்கு தாமரை மாலை அணிந்து கொண்டு மங்கையரோடு லீலை செய்யும் சித்ரரதன் என்ற கந்தர்வனைக் கண்டாள். தனது கணவனுடைய நினசரி ஓமத்துக்கு நீர் கொண்டு வரச் சென்ற ரேணுகா கந்தர்வன் அழகில் மயங்கி ஓமம் செய்யும் வேளை தாண்டி விட்டதை அறியவில்லை. தாமதத்தை அறிந்ததுமே பயந்து கணவன் முன் சென்று பயத்துடன் கைகூப்பி நின்றாள். முனிவருக்குச் சினம் மேலிட்டது. மனைவி திரும்புவதற்குத் தாமதம் ஏன் என்று யோகத்தால் தெரிந்து கொண்டார். தம் புதல்வர்களைக் கூப்பிட்டார். "மைந்தர்களே! இந்தப் பாவியைக் கொன்று விடுங்கள்" என்றார்.

தாயைக் கொல்லப் புதல்வர்கள் இணங்கவில்லை. ஆனால் தந்தையின் வல்லமையை அறிந்த பரசுராமன் தாயையும் சகோதரரையும் சேர்த்துக் கொன்றான். முனிவர் மைந்தனை மெச்சினார். "வேண்டிய வரம் கேள்" என்றார்.

"நான் கொன்ற தாயும் சகோதரரும் பிழைத்து என் செயலை மறக்கவேண்டும்" என்று பரசுராமன் தந்தையிடம் வரம் கேட்டான். இறந்தவர் எழுந்தனர்.

தந்தையை இழந்த அர்ஜுனன் புதல்வர்கள் பரசுராமனிடமும் ஜமதக்னி முனிவரிடமும் பகை பாராட்டி வந்தனர். ஒருநாள் பரசுராமன் தன் உடன் பிறந்தோருடன் வெளியே சென்றிருந்தான். ஜமதக்னி நிஷ்டையில் ஆழ்ந்து மற்றவரை மறந்திருந்தார். அச்சமயம் அர்ஜுனனுடைய மைந்தர் இரகசியமாக வந்து முனிவர் தலையை வெட்டி எடுத்துப் போயினர். துயரத்தால் சிதறுண்ட ரேணுகா தன் மகன் ராமனை வரும்படி கூக்குரலிட்டு அழுதாள். ஆசிரமத்தை அடைந்ததும் பரசுராமன் நடந்ததைத் தெரிந்து கொண்டான். அப்பொழுதே இந்தக் கொடிய க்ஷத்திரியப் பூண்டை அறவே ஒழித்து விடுவேன் என்று பெரும் சபதம் செய்தான். மாஹிஷ்மதி நகருக்கு விரைந்தேகி அரச குமாரர் தலைகளை அறுத்து மலையாய்க் குவித்து அவர்களுடைய உதிரத்தை நதியாய்ப் பெருக்கினான். குருக்ஷேத்திரத்தில் இருந்த குளங்களில் நீருக்குப் பதிலாக க்ஷத்திரிய ரத்தத்தை நிரம்ப வைத்தான்.

பிறகு தனது தந்தையின் தலையைக் கொண்டு வந்து உடலுடன் சேர்த்து ஈமச் சடங்குகளை நடத்தினான். உலகெலாம் வேள்வியில் உதவியவர்க்கு அளித்தான். தானும் மகேந்திரமலையை அடைந்து இன்றும் இருந்து வருகிறான் என்று சுகர் இக்கதையை முடித்தார்.

மருதாயியை மணக்கப் போட்டியிட்டனர் இரண்டுபேர். தையலின் உள்ளத்திலே தங்கராசுதான் இடம் பெற்றிருந்தான். ஆனால் அவனையோ அபினி கள்ளக் கடத்தல் குற்றம் சாட்டிப் போலீஸார் கைது செய்திருந்தார்கள் — முடிவு..........?

# காப்புக் காவல்

குங்குமப் பொட்டு குமாரசாமி வேறு எதில் தவறினாலும், ஆண்டுதோறும் அவர் பிறந்த கிராமத்தில் நடக்கும் அங்காளம்மன் திருவிழாவுக்குப் போய் வருவதில் மட்டும் தவறியதில்லை. உத்தியோகப் பொறுப்பு குறுக்கிட்டாலும், உடல் நிலையே இடம் கொடாமலிருந்தாலுங்கூட, அவர் ஒரே ஒரு நாளாவது திருவிழாக் காலத்தில் போய்த் தரிசனம் செய்து விட்டுத்தான் வருவார். அங்காளம்மன் தான் அவருடைய குல தெய்வமும் இஷ்ட தெய்வமும்.

அவர் கிராமத்திலிருந்து திரும்பியவுடன் தமது பதவிக் காலத்தில் சேர்ந்த பழைய நிகழ்ச்சிகளை நினைவுபடுத்திக் கொண்டு உற்சாகத்தோடு சொல்லுவார். அந்த வருஷம் அவர் நான்கே நாட்களில் திரும்பி வருவதாகச் சொல்லி விட்டுப் போனார். ஆனால் சரியாக ஒரு வாரம் கழித்துத்தான் திரும்பினார். அன்று மாலையில் நான் அவர் வீட்டுக்குள் நுழைந்தபோதே அவர் முன் தாழ்வாரத்துக்கு வந்து என்னை வரவேற்று, '' வாருங்கள். உங்களை இரண்டு நாட்கள் அலைய வைத்து விட்டேன். கிராமத்திலிருந்து குறிப்பிட்டபடி புறப்பட்டு விட்டேன். திண்டுக்கல்லில் தங்கராசு பார்த்து விட்டான். உள்ளே வாருங்கள் '' என்று எனக்குச் சமாதானம் சொல்லி உள்ளே அழைத்துக் கொண்டு சென்றார்.

வீட்டினுள் சென்று அமர்ந்தவுடன் அவர், '' உங்களுக்குத் தங்கராசுவைப் பற்றிச் சொல்லியிருக்கிறேனோ? இல்லையா? அவனால் தான் எனக்கு சப் - இன்ஸ்பெக்டர் படியிலிருந்து சர்க்கிளாக உயர்வு கிடைத்தது. அதுவும் அம்மன் திருவிழாக் கால நெருக்கடியில்தான் '' என்று தொடங்கினார்.

'' அப்போது நான் சப் - இன்ஸ்பெக்டர் படியிலிருந்தேன். திண்டுக்கல்லிலிருந்து என்னைத் திருமங்கலத்துக்கு மாற்றித் திடீரென மதுரைக்கு அழைத்தார்கள். அப்போது ஜில்லா சூப்பிரண்டண்டாக இருந்த வெள்ளைக்காரனுக்கு என் திறமையில் அபாரமான நம்பிக்கை. அப்போது நம்முடைய மாகாணத்தில் பெரிய அளவில் அபினிக் கடத்தல் வியாபாரம் நடந்து கொண்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. கடத்தல் நடக்கிறதென்பதுதான் தெரியுமே தவிர, அதை நடத்துவது யார் என்பது ஒன்றும் தெரியாது. துரை அந்தப் பொறுப்பை என் மேல் சுமத்தினார் '' என்று மேலே தொடர்ந்தார் குமாரசாமி.



பி. எஸ். ராமையா

'' எனக்கு நேர் மேல் அதிகாரியிடமிருந்தும், மதுரை ஸ்டேஷனிலிருந்தும் அந்த விவகாரம் பற்றிய தகவல்களை அறிந்தேன். வட இந்தியாவிலிருந்து ரயில் வழியாகச் சென்னைக்கு ஏராளமான அபினி வந்து கொண்டிருந்ததென்பது நிச்சயமாகத் தெரிந்தது. ஆனால் அது யார் வழியாக எங்கே போய்ச் சேர்ந்தது என்பதற்கு ஒரு தடையமும் இல்லை.

'' கிடைத்த விவரங்களைப் பற்றிக் கொண்டு கிளம்பினேன். சென்னை, கடலூர், புதுச்சேரி, திருச்சி எல்லாம் போய்ச் சுற்றி அலைந்தேன். நாகப்பட்டினத்துக்குப் போய் நான்கு நாட்கள் சுற்றிச் சுற்றி வந்தேன். உதவுபடியாக ஏதும் உளவு கிடைக்காவிட்டாலும்,

சென்னைக்கு வரும் சரக்கு கப்பலேற்றி அனுப்பப்படுகிறது என்பது மட்டும் நிச்சயமாயிற்று. கடைசியாகத் தூத்துக்குடிக்குப் போய் முயற்சி செய்து பார்ப்பது; நேர்வழியில் பிடிக்க இயலாதென்று ஆகிவிட்டால் பிறகு குறுக்கு வழிகளைக் கையாளுவதென்று உறுதி செய்து கொண்டேன்.

"அந்த வேலைப் பொறுப்பு மும்முரத்தில் அப்போது கிராமத்தில் திருவிழா சமயம் என்பதை அடியோடு மறந்து விட்டேன். நாகப்பட்டினத்திலிருந்து தூத்துக்குடிக்குப் போகும் வழியில் மணப்பாறையில் ரயிலில் சந்தித்த ஒரு நண்பர் எனக்கு அதை நினைவூட்டினார்.

"போகும் வழியில் திண்டுக்கல்லில் இறங்கி ஒரே ஒரு இரவு கிராமத்துக்குப் போய் அம்மனைத் தரிசித்து விட்டுப் புறப்படுவது என்று முடிவு செய்தேன். அம்மன் அருளால் அந்த முயற்சியில் நிச்சயமாக எனக்கு வெற்றி கிட்டி விடும் என்ற நம்பிக்கையும் உள்ளூறப் பிறந்தது.

"அப்போது என் குடும்பத்தினர் திண்டுக்கல்லில் தான் இருந்தார்கள். ஒரு வேளை அவர்கள் கிராமத்துக்குப் போயிருப்பார்கள் என்ற எண்ணத்துடன் வீட்டுக்குப் போனேன். அவர்கள் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள்.



"நான் 'எல்லாரும் சேர்ந்தே போவோம். ஜட்கா வண்டிக்கு ஏற்பாடு செய்து விட்டு வருகிறேன். நான் நாளைக் காலையில் அங்கிருந்து புறப்பட்டு விடுவேன். நீங்கள் இருந்து திருவிழா முடிந்தபிறகு வரலாம்' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

"முத்தம்மா முன்னால் வந்து 'நீங்க எப்போது வருவீங்கன்னு தான் பார்த்துக்கிட்டிருந்தேன். மருதாயிக்கு நாளை மறுநாள் கலியாணம். பெரிய அடிதடிக் கலகம் வரும் போலிருக்கு' என்றாள்.

எனக்குத் திடுக்கிட்டது. என் அகக் கண் முன்னால் அந்தப் பெண்ணின் அதிசய அழகு வடிவம் எழுந்தது.

"சமயமான அழகு என்ன என்பதற்கு மருதாயியைப் பார்க்க வேண்டும். இன்னும் இருக்கிறாள். நாலு குழந்தைகளுக்குத் தாயாகியவள். அப்போது செங்காய்ப் பருவமாகத் தோன்றிய அந்த அழகு இப்போது நன்றாகக் கனிந்து தோன்றுகிறது.

"அவளை நான் முதன் முதலாகப் பார்த்த போது அவளுக்குப் பதினேழு வயதிருக்கும். ஸ்டேஷனிலிருந்து வீட்டுக்கு வந்து கொண்டிருந்தேன். எங்கள் வீட்டு வாசலை அடைந்த சமயம் எதிர்ப் பக்கத்திலிருந்த கொட்டில் கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்த மருதாயியைக் கண்டு நின்று விட்டேன்.

"மெய்யான பெண்ணழகு என்பதைப் பற்றிய என் கருத்தைச் சொல்லி விடுகிறேன். அந்த மாதிரி ஒரு அழகியைப் பார்த்தவுடன் மனத்திலே ஒரு மகிழ்ச்சி பொங்கி நிறையும். ஆனால் அதிலே களங்கம் இருக்காது. அந்த மகிழ்ச்சி புலன்களுக்கு அப்பாற்பட்ட ஒரு அனுபவம். அத்தகைய அனுபவம்தான் எனக்கு அப்போது ஏற்பட்டது.

"நான் நின்று பார்ப்பதைக் கண்டு அந்தப் பெண்ணும் நிமிர்ந்து என்புறம் பார்த்தாள். அவள் முகம் புன்னகையால் மலர்ந்தது. அதே கணத்தில் அவள் நாணத்துடன் முகத்தைத் திருப்பிக் கொண்டு வேகமாக நடந்து போய் விட்டாள். அவள் உருவ அமைப்பில், நடையில் இருந்த ஒயிலை ரசித்துக் கொண்டு நின்றேன்.

"பின்னாலிருந்து வந்த முத்தம்மாவின் குரலைக் கேட்டுப் போதை தெளிந்து திரும்பினேன். முத்தம்மா வாயில் குறும்புடன் நின்றிருந்தாள். 'அவ பேரு மருதாயி. அவங்கப்பனுக்குச் சுருட்டுக் கம்பெனியிலே வேலை. ரொம்ப நல்ல பொண்ணு' என்றாள்.

"முத்தம்மாவிடமிருந்தே நான் மருதாயியைப் பற்றிய மேல் விவரங்களை அறிந்தேன். அவளுடைய தகப்பன் பெயர் சங்கரலிங்கம். தங்கராஜாவின் சுருட்டுக் கம்பெனியில் வேலை. அந்தப் பெண்ணுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆனால் அதில் அளவு கடந்த ஆவல். எங்கள் வீட்டுக்கு நாலைந்து வீடுகள் தள்ளி



ஒண்டுக் குடித்தனமாக வாழ்ந்தார்கள் பெற்றோரும் மகளும். அவள் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவாள். அவளை முதல் தடவை பார்த்தவுடன் அவளுடன் பேச வேண்டுமென்று ஆசைப்பட்டு என் மனைவியே அவளை அழைத்தாள். எந்நேரமும் பரபரவென்று ஏதாவது வேலை செய்யப் பறக்கும் இயல்பு. எங்கள் வீட்டுக்கு வந்தால் வலுவில் முன் வந்து வீட்டு வேலைகளைச் செய்யத் தொடங்கி விடுவாள். என் மனைவியிடம் 'எனக்கு எழுதப் படிக்கக் கத்துக்குடுங்க' என்று கெஞ்சுவாள்.

'' அவள் தகப்பன் சங்கரலிங்கத்தையும் எனக்குத் தெரியும். அந்தக் காலத்தில் அவனுக்கு மாதச் சம்பளம் ஏழு ரூபாய். மகளிடமிருந்த பண்பு, அவனுக்கு அவன் தந்தையளித்த சொத்து. அவ்வளவு நல்ல மனிதன்.

'' அந்த மருதாயிக்குக் கலியாணம். நாளை மறுநாளன்று. பெரிய அடிதடிக் கலகம் வரும் போலிருக்கிறது!

''முத்தம்மாளிடம் 'கலகம் வருவானேன்? அவளை யாருக்குக் கட்டிக் கொடுக்கப் போறீங்க?' என்று கேட்டேன்.

''என் தாயார் குறுக்கிட்டு, 'அவங்க அப்பனுக்கு அக்காமகன் ஒருத்தன் இருக்கானில்லே, வேலுச்சாமி. அவனுக்குத்தான் முறைப் பொண்ணு கட்டிடலாம்னு நெனைச்சிருந்தாங்க. அந்தப் பொண்ணு செத்தாக் கூட அவனைக் கட்டிக்க மாட்டேனுட்டா. அவங்க மொதலாளி தங்கராசு நான் கட்டிக்கிறேன்னு கேட்டானாம். அப்பன் மக எல்லாம் சம்மதிச்சுட்டாங்க. கலியாணத்துக்கு நாளும் வச்சுட்டாங்க. வேலுச்சாமி, 'இந்தக் கலியாணம் எப்படி நடந்துடும், பாத்துப் போடறேன். நான் தூக்குலே ஏறிட்டாலும் சரி. அவன் அவளோடே வாழப் போறதில்லே'ன்னு கூச்சல் போட்டுக்கிட்டுத் திரியறான். அவனுக்கும் நாயம் சொல்றதுக்குக் கட்சி கட்டிக்கிட்டு நாலு பேரு கௌம்பியிருக்காங்க'' என்றாள்.

'' நான், 'அதெல்லாம் வெறும் மிரட்டல். ஒண்ணும் நடக்காது. நான் போய் வண்டி அமர்த்திட்டு வந்துடறேன்'' என்று சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

''எனக்கு வேலுச்சாமியையும் தெரியும்; தங்கராசுவையும் தெரியும். வேலுச்சாமி பழுத்தடியன். அப்பன் தேடி வைத்த சொத்து கொஞ்சம் நிலம் புலம் இருந்தது. முதலில் சோடா முதலிய பானங்கள் தயாரிக்கும் வியாபாரத்தைத் தொடங்கினான். உருப்படவில்லை. பிறகு ஒரு வெற்றிலைபாக்குக் கடை வைத்தான். அதுவும் 'மேபின்' மாதிரித்தான். குடித்து விட்டு ஏழை பாழைகளையெல்லாம் மிரட்டிக் கொண்டு திரிவதுதான் அவனுக்குத் தொழில்.

''மருதாயியை அவனுக்குக் கட்டிக் கொடுக்கப் போவதாக அறிந்தால் நானே குறுக்கிட்டுத் தடுத்தாலும் தடுத்திருப்பேன். அந்த மாதிரித் தறுதலைப்பயலுக்காகப் படைக்கப்பட்ட பெண்ணல்ல அவள்.

'' தங்கராசு சுருட்டுக் கம்பெனி நடத்திக் கொண்டிருந்தான். அப்போது அவனுக்கு இருபத்தியாறு அல்லது ஏழு வயதிருக்கும். அபாரமான மனச் சுறுசுறுப்பு படைத்தவன். இருபத்திரண்டாவது வயதில் சொந்தமாக வியாபாரம் தொடங்கி ஐந்தே ஆண்டுகளில் மிகப் பெரிய அளவுக்கு வளர்ந்து விட்டான். அவனுடைய 'பொன் வளையம் மார்க்'கு சுருட்டுகள் சீமைக்குக் கூட ஏற்றுமதியாகிக் கொண்டிருந்தன.

''என் சொந்த வாழ்க்கை அனுபவத்தின் விளைவுதானோ என்னவோ, தன் சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்தவன் என்று அவனுக்கு என் நெஞ்சத்திலே கொஞ்சம் அதிகச் சலுகை. பார்ப்பதற்கும் படபட வென்று அவன் ஜோராக இருப்பான்.

'' வீட்டில் பெண்பிள்ளைகளிடம் 'ஒன்றும் நடக்காது' என்று சொல்லி விட்டுப் போய் விட்டேன். ஆனால் என் அந்தரங்கத்தில் சலனம் கண்டு விட்டது. மருதாயியின் வாழ்க்கை நிறைவுக்கு வேலுச்சாமியால் ஏதும் தடங்கல் அல்லது கோளாறு வந்து விடக் கூடாதே என்ற கவலை தோன்றியது.

''ஆனால் அதைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து அதற்கான வழி வகை காண அப்போது எனக்கு அவகாசமில்லை. நான் திண்டுக்கல் போய்ச் சேர்ந்தபோதே மாலை மணி நாலரையாகி விட்டது. இருட்டுவதற்குள் கிராமம் போய்ச் சேர்ந்து இரவில் தரிசனம் செய்துகொண்டு, விடிய விடியத் திரும்பி வந்து ரயிலைப் பிடித்தாக வேண்டும்.

''அந்த அவசரத்தில் நண்பர்களைத் தேடிப் பிடித்து வண்டி கேட்க நேரமில்லை. அதனால் வாடகை ஜட்கா வண்டியையே தேடிக் கொண்டு போனேன். கடைத் தெருவுக்குப் போய்ச் சிங்காரம் பிள்ளை கடையில் உட்கார்ந்து கொண்டு கடை ஆளை வண்டி பிடித்துக் கொண்டு வர அனுப்பினேன். பிள்ளையிடம் மருதாயியின் கலியாணம் பற்றிப் பேச்சுக் கொடுத்தேன்.

''பிள்ளை, 'வேலுச்சாமி கத்த உதவாக்கரை தான். ஆனாலும் முறைப்பெண்ணல்லவா? அவனுக்குப் பெரிய தம்பி நாடார் பக்க பலமும் கிடைத்திருக்கிறது. தகராறு பண்ணுகிறான்' என்றார்.

''நான் 'பெரியதம்பி நாடாரும்தான் இதே வியாபாரத்தில் நன்றாகச் சம்பாதித்திருக்கிறாரே. தங்கராசுவுடன் போட்டியா? எந்த வகையில் பார்த்தாலும் வேலுச்சாமிக்குத் தங்கராசு உயர்வுதானே' என்றேன்.

''பிள்ளை குல்கொட்டி, 'கெட்டிக்காரன்னு சொல்லுங்கள். சரி என்கிறேன். நானும் தான் இத்தனை வருஷங்களாக இதே வியாபாரம் நடத்துகிறேன். என் கடைச்சரக்கும் தான் கப்பலுக்குப் போகிறது. சும்மா சுருட்டு வியாபாரத்திலேயே நாலைந்து வருஷங்களில் இவ்வளவு பணம் சேர்ந்து விட்டது என்றால் எல்லோரும் நம்ப வேண்டாமா?' என்றார்.

'' பெரியதம்பி நாடார் மட்டும் எப்படிச் சம்பாதித்தார்' என்று கேட்க வாயெடுத்தேன். அடக்கிக் கொண்டு, 'தங்கராசு ஒரு வெள்ளைக்காரக் கம்பெனிக்கு சுருட்டு சப்ளை செய்ய ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறான். அந்தக் கம்பெனிக்கு இலங்கை, பர்மா சீமையிலெல்லாம் கிளைகள் இருக்கின்றன. அதுதான் அவன் வியாபார வெற்றி ரகசியம்' என்றேன்.

''பிள்ளை, 'என்னவோ உங்களுக்குத் தெரியாததை நான் சொல்லிவிடப் போகிறது போலக் கேட்கிறீர்களே. என் காதுலேயும் விழுந்ததைச் சொன்னேன். அவனுக்குச் சுருட்டு வியாபாரம் மட்டுமில்லே. இன்னும் என்னென்னவோ எல்லாம் இருக்கிறது என்கிறார்கள். உண்மையோ பொய்யோ தெய்வத்துக்குத்தான் வெளிச்சம்' என்றார்.

''அதற்குள் கடைப் பையன் வண்டியுடன் வந்து விட்டான். நல்ல வாட்ட சாட்டமான குதிரை. வண்டியும் நல்ல நிலைமையிலிருந்தது. சிங்காரம் பிள்ளைக்கு நன்றி செலுத்தி விட்டுப் புறப்பட்டேன்.

''அன்றிரவு நான் என் குலதெய்வத்தின் சன்னிதியில் நின்றபோது என் மனம் ஜபத்தில் ஒருப்பட மறுத்தது. அது திரும்பத் திரும்ப மருதாயி தங்கராசு கலியாண விவகாரத்துக்கே பாய முயன்றது.

''மறுநாள் அதிகாலையில் புறப்பட இயலவில்லை. நான் திண்டுக்கல்லுக்கு வந்து சேர்ந்தபோது மணி கிட்டத்தட்ட ஒன்பதாகி விட்டது. அடுத்த ரயில் வருவதற்குள் மருதாயி விவகாரத்தில் ஆவதைச் செய்ய வேண்டுமென்று வேலுச்சாமிக்கு ஆள் அனுப்பினேன். அவன் இரவில் எங்கேயோ சென்றவன் அதுவரையில் திரும்பவில்லையென்று பதில் வந்தது.

''பகல் பன்னிரண்டரை மணிக்கு நான் ரயிலடிக்குப் போய்ச் சேர்ந்தபோது வேலுச்சாமி அங்கே காத்திருந்தான். என்னைக் கண்டவுடன் அவன் குழைந்து கும்பிடு போட்டு, 'எசமான் தேடினீங்களாம்' என்றான்.

''நான், 'ஆமாம். மருதாயி விஷயமாக நீ என்னவோ கூச்சல் போட்டுக் கொண்டு வருவதாகக் கேள்விப்பட்டேன். அந்தப் பெண்ணுக்கும் விருப்பமில்லை. பெற்றவனுக்கும் சம்மதமில்லையென்றால் அப்புறம் அதில் வம்பு என்ன? அவள் தங்கராசுவைக் கட்டிக் கொள்ளாமல் தடுத்து விட்டால் மட்டும் உன்னைக் கட்டிக் கொள்ள அவள் இசைந்து விடுவாளா? இப்படியெல்லாம் பேசிக்கொண்டு திரிவது சரியாக இல்லையே' என்றேன்.

''வேலுச்சாமி, 'சொந்த மாமனே இப்படி எனக்கு விரோதம் பண்ணிப்பிட்டாரேங்கற ஆத்திரத்துலே ஏதோ உளறினேனுங்க. அவன் பணக்காரன். அவனை நான் என்ன செய்துட முடியும்? சாமியாப் பார்த்துக் கூலி கொடுக்குது. உங்ககிட்ட ஆணைவச்சுக் கொடுக்கறேனுங்க. நான் அவங்க வழிக்கே போகிறதில்லே' என்றான்.

'''சரி நீ போ!' என்று அவனை அனுப்பி விட்டு நடை மேடைப்பக்கம் நகர்ந்தேன். தற்செயலாக எதிர்ப்புறத்திலிருந்த ரொட்டிக் கடைப்பக்கம் திரும்பியது என் பார்வை. ரொட்டிகள் அடுக்கி வைத்திருந்த கண்ணாடிப் பெட்டியில் வேலுச்சாமியின் உருவம் தெரிந்தது. அவன் என் புறம் முறைத்துப் பார்த்து மீசையை முறுக்கிக் கொண்டிருந்தான்.

''திண்டுக்கல்லிலிருந்து நேரே தூத்துக்குடி போக மனம் இடம் கொடுக்கவில்லை. அதனால் மதுரையில் இறங்கினேன். பெரிய துரை முகாம் புறப்படப் போவதாக அறிந்து அவர் பங்களாவுக்கு விரைந்தேன். அவரிடம் அபினிக் கடத்தல் விவகாரத்தில் எனக்குச் சரியாகப் பிடி கிடைக்கவில்லை என்பதைச் சொல்லத்தான் போனேன். என்னைக் கண்டவுடன் துரை, 'சற்று முன்தான் உன்னைப் பற்றி நினைத்தேன். இரண்டு நாட்களுக்கு முன் சென்னைக்குக் கள்ளச் சரக்கு வந்திருக்கிறது. அது கை மாறிய பிறகு கொண்டுவந்த ஆளை மட்டும் பிடித்திருக்கிறார்கள். அவனிடமிருந்து உபயோககரமாக ஒரு தகவலும் கிடைக்கவில்லை. நீயே நேரில் போய்ப் பார்' என்று உத்தர விட்டார்.

''மாலை வண்டியில் புறப்பட்டு இரவு பத்து மணிக்குத் திண்டுக்கல் போய்ச் சேர்ந்தேன். அதற்குள் நான் ஒரு முடிவு செய்துவிட்டேன். மறுநாள் மருதாயி கலியாணம் நடக்க இயலாது. நானே அதில் குறுக்கிட நேர்ந்து விட்டதே என்று மனத்துக்குச் சிறிது ஆயாசமாகத்தான் இருந்தது.

''நேரே என் நண்பர் அப்துல்ஷுக்கூர் தோல் மண்டியில் போய் இருந்து கொண்டு தங்கராசுவை அழைத்து வர ஆளனுப்பினேன். நான் கூப்பிட்டனுப்பியது வேறு யாருக்கும் தெரியாதபடி பக்குவமாக ஆளைக்கொண்டு வர ஏற்பாடு செய்தேன்.

''தங்கராசு வந்தவுடன் அவனைத் தனியாக அழைத்துக் கொண்டு போய், 'உன்னைக் கைது செய்யப் போகிறேன். இங்கே உள்ளூர் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனால் ஊரில் கலவரம் ஆகிவிடும். ஆகையால் நீ இப்படியே பேசாமல் என்னுடன் வர வேண்டும்'' என்றேன்.

# சிறந்த உழைப்பிற்கு உகந்த தயாரிப்புகள்



தரத்தில் உயர்ந்ததும், குறைந்த விலையுள்ளதுமான நேஷனல்-எக்கோ ரேடியோக்களும் க்ளியர்டோன் தயாரிப்புகளும் நீங்கள் தேர்ந்தெடுத்துக்கொள்ளுமாறு விதவிதமாக உள்ளன!

## நேஷனல் எக்கோ ரேடியோக்கள்



நேஷனல்-எக்கோ மாடல் U-717: 5 வால்வுகளும் 3 பாண்டுகளும் கொண்ட இந்த ஏஸி/டிஸி ரேடியோவில் பெரிய நேஷனல்-எக்கோ ஸெட்டுகளில் உள்ள சில அம்சங்கள் அடங்கியுள்ளன. 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டது. ரூ. 250/-



நேஷனல்-எக்கோ மாடல் 722: அதன் ரகத்தில் இணையற்றது. சிறந்த உழைப்பு. 6 வால்வுகளும் 3 பாண்டுகளும் கொண்ட ஏஸி மற்றும் ஏஸி/டிஸி ஸெட்டுகள் கிடைக்கும். 'மான்ஸூனைஸ்' செய்யப்பட்டது. ரூ. 335/-

## Kleertone 'க்ளியர்டோன்' லாம்புகளும் உபகரணங்களும்

'க்ளியர்டோன்' எலெக்ட்ரிக் வாட்டர் ஹீட்டர்கள்: குழாயைத் திறந்ததும் உடனே வெந்நீர் கிடைக்கும். ஸைஸ்: 5 முதல் 16 காலன்கள் வரை



'க்ளியர்டோன்' ஸிங்க்ரோனஸ் எலெக்ட்ரிக் கடிகாரங்கள்: மிகவும் நம்பகமானவை. 7 டிஸைன்களில் பல்வேறு நிறங்களில் கிடைக்கும்



'க்ளியர்டோன்' குக்கிங் ரேஞ்ச்: தனித்தனியே கண்ட்ரோல்களுள்ள 2 ஹாட் ப்ளேட்டுகளும் ஒரு அடுப்பும் கொண்டது. 6,500 வாட்ஸ் வரை மின்சாரப் பளுவை தாங்கும்



'க்ளியர்டோன்' பல்புகள், ஃப்ளோரஸண்ட் ட்யூபுகள் மற்றும் உபகரணங்கள்: சிக்கனமானவை. பிரகாசமான ஒளியைப் பெற சிறந்த சாதனங்கள்



'க்ளியர்டோன்' வீட்டு இஸ்திரி பெட்டி: 7 ராத்தல் எடை. பலமான க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ்



'க்ளியர்டோன்' எலெக்ட்ரிக் கெட்டில்: பலமான க்ரோமியம் மூலாம் பூசப்பட்டது. 3 பைண்ட் கொள்ளும்; 230 வோல்ட்ஸ், 450 வாட்ஸ்






ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் பிரைவேட் லிமிடெட்
ஆபெரா ஹவுஸ், பம்பாய் 4 • 3, மதன் ஸ்ட்ரீட், கல்கத்தா 13 • ப்ரேஸர் ரோடு, பாட்னா 1/18, மௌண்ட் ரோடு, மதராஸ் - 36/79, ஸில்வர் ஜூபிலி பார்க் ரோடு, பங்களூர் ஜோர்ஜியன் காலனி, சாந்தினி சௌக், டில்லி • ராஷ்டிரபதி ரோட், செகந்திராபாத்

# மரக்கறிக் கூட்டு

## சமைத்துப் பாருங்கள்

6 பெரிய உருளைக் கிழங்குகள், 1 முள்ளங்கி, கைப்பளவு பிரஞ்சு பீன்ஸ், 2 மேஜை கரண்டி அளவு ரெக்ஸ் ஸாலட் ஆயில், 5 அல்லது 6 கறிவேப்பிலை, அருமையாக அரிந்த ஒரு வெங்காயம், ஒரு கப் உரித்த பச்சைப் பட்டாணி, அளவுக்கு உப்பு, ஒரு மேஜைக் கரண்டியளவு கறி பௌடர், ஒரு தேக்கரண்டியளவு ப்ரௌன் அன்டு போல்ஸன் கார்ன்ப்ளவர்—½ கப் பாலில் கலந்தது.

காய்கறிகளை சுத்தம் செய்து, நறுக்கி, பட்டாணியுடன் சேர்த்து பாத்திரத்தில் போட்டு, ½ கப் தண்ணீர் சேர்க்கவும். கறி பௌடரையும், கறிவேப்பிலையும் இதோடு கலக்கவும். ருசிக்குத் தகுந்தவாறு உப்பு சேர்த்து நன்றாக வேகவைக்கவும். இன்னொரு பாத்திரத்தில் ரெக்ஸ் ஸாலட் ஆயிலை ஊற்றி, நறுக்கிய வெங்காயத்தை சிவக்கும் வரை வதக்கவும், முதலில் வெந்த கறிகளை இதில் கொட்டி, பாலும் சேர்த்து வேகமாகக் கலக்கி, 10 நிமிட நேரம் நன்றாக மூடி வைக்கவும். பிற்பாடு இதைச் சப்பாத்திகளுடன் பரிமாறி சாப்பிடவும்.



கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.

இந்தியாவில் ஏஜெண்டுகள் : பாரி அன்டு கோ. லிட்.



**ப்ரௌன் அன்டு போல்ஸன் கார்ன்ப்ளவர் பேட்டன்ட் ஆக அங்கீகரிக்கப்பட்டது.**

இதன் பரிசுத்தத் தன்மைக்கு இப்பரீக்ஷையைச் செய்து பாருங்கள் :-

இரண்டு மேஜைக் கரண்டியளவு ப்ரௌன் அன்டு போல்ஸன் பேட்டன்ட் கார்ன்ப்ளவரை கொதித்து ஆற வைத்து குளிர்ந்த ஜலத்தில் நன்றாகக் கலக்குங்கள். 24 மணி நேரம் இவ்விதம் வைத்த பிற்பாடுங்கூட கெட்ட வாசனை உண்டாகாமல், மாசற்றதாகவும், பெக்டீரியா முதலிய அசுத்த அணுக்களால் சேதப்படாமலும் இருப்பதைக் காண்பீர்கள். மற்ற ப்ரௌன் அன்டு போல்ஸனின் உயர்தர சாதனங்கள் என்னவென்றால்: ஜெல்லி, கஸ்டர்ட் பௌடர், ப்ளேவர்ட் கார்ன்ப்ளவர்.



இங்கிலீஷ், ஹிந்தி, அல்லது தமிழ் பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அழகான சமையல் புஸ்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனை பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்து விடவும்)

தபால் செலவிற்காக 15 நயா பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு நான் இதோடு அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/செல்வி..........................................

..........................................................

விலாசம்..................................................

டிப்பார்ட்மென்ட் : KLK 13

கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ.
(இந்தியா) ப்ரைவேட் லிமிடெட்
தபால் பெட்டி : 994, பம்பாய் 1

"தங்கராசுவின் முகம் படபடப்பால் மாறியது. 'என்னைக் கைது செய்யப் போகிறீர்களா? எதற்காக? விடிந்தால் எனக்குக் கலியாணம்' என்றான்.

"நான், 'எனக்குத் தெரியும். எதற்கு என்ன என்பதையெல்லாம் சொல்லிக் கொண்டிருக்க இப்போது நேரமில்லை. இரண்டாவது ஆளுக்குத் தெரியாமல் இது நடந்தேறினால்தான் நல்லது. இல்லை, எனக்குள்ள போலீஸ் அதிகாரத்தைத் தெளிவாகக் காட்டினால்தான் ஆகும் என்றால் உன் இஷ்டம்' என்றேன்.

"அவன் சுலபமாக இணங்கிவிடவில்லை. குரலை உயர்த்தினான். அதைக் கேட்டு நாங்கள் இருந்த இடத்துக்கு வந்துவிட்டார் ஷுக்கூர். அவரைப் பார்த்தவுடன் தங்கராசு சட்டென்று அடங்கி விட்டான். இருந்தும், 'போலீஸ் என்றால் நியாயத்துக்கும் சட்டத்துக்கும் உதவி செய்யும் என்று எண்ணியிருந்தேன். யாரோ காலி கலவரம் செய்வதாக மிரட்டினால் அவனைப் பிடித்து அடக்குவதை விட்டு அவனுக்கு உதவி செய்யப் புறப்பட்டு விட்டீர்கள். என்னையும் அந்தப் பெண்ணையும் அழிக்கிறது என்று முடிவு செய்து விட்டீர்கள். தெய்வம் உங்களைக் கேட்கும்' என்று என்னைச் சபித்தான்.

"நான் கேட்டுக் கொண்டபடி ஷுக்கூர் பாயின் குதிரை வண்டி தயாராக நின்றது. அதில் தங்கராசுவை ஏற்றிக் கொண்டு புறப்பட்டேன். அம்பாத்துரைக்குப் போய் மதுரைக்குச் செல்லும் ரயிலைப் பிடித்தோம்.

"ஆனால் நான் மதுரைக்குப் போகவில்லை. தங்கராசுவைச் சோழவந்தான் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்றேன். சுந்தரனார் சப்-இன்ஸ்பெக்டருக்குச் சொல்லியனுப்பி அவரிடம், 'அபினிக் கடத்தல் சம்பந்தமான ஆள். நானே நான் திரும்பி வரும் வரையில் இவர் யாரென்பதும், இங்கே இருப்பதும் வெளியில் தெரியக் கூடாது' என்றேன்.

"நான் அபினிக் கடத்தல் விவகாரம் என்றவுடன் தங்கராசு, 'இது என்னய்யா அக்கிரமம்!' என்று கூவி விட்டான். அவனுக்குப் பதில் சொல்லிக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. அவனைக் காவல் அறைக்கு அனுப்பினேன்.

"அந்தக் காலத்தில் இப்போது இருப்பது போல் வேகமான போக்குவரத்து வசதி கிடையாது. ஆகையால் நான் அன்றிரவு சோழவந்தானிலேயே தங்கி விட்டு அதிகாலையில்தான் புறப்பட முடிந்தது. நான் திண்டுக்கல் போய்ச் சேர்ந்தபோது காலை ஒன்பதரை. அங்கே ஏற்பட்டிருந்த பரபரப்பு எனக்கு ரயிலடியிலேயே எட்டி விட்டது.

"போலீஸ் பெரிய துரை டிப்டி எல்லோரும் திண்டுக்கல்லில் வந்து கூடியிருக்கிறார்கள். தங்கராசு கடையிலிருந்து அபினிக் கள்ளச் சரக்கு கைப்பற்றப்பட்டது. தங்கராசுவை இரவிலிருந்து காணவில்லை. ஆள் எங்கேயோ சென்று மறைந்து விட்டான் என்ற தகவல்களைக் கேட்டுக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு விரைந்தேன்.

"நான் போனபோது நல்ல வேளையாகப் போலீஸ் ஸ்டேஷனில் பெரிய அதிகாரி யாருமில்லை. அதனால் முழு விவரங்களையும் நிதானமாகக் கேட்டு அறிந்து கொள்வதற்கு முடிந்தது.

"அன்று அதிகாலை ஐந்து மணிக்குச் சடையன் என்பவன் ஸ்டேஷனுக்கு வந்து, தங்கராசு கடையில் கள்ள அபினி இருப்பதாகவும், அதை அப்புறப்படுத்துவதற்குமுன் பிடித்து விட வேண்டுமென்றும் தகவல் கொடுத்தான். உடனே டிப்டிக்கு ஆள் பறந்தது. பெரிய துரை பக்கத்தில் அம்மையநாயக்கனூரில் முகாம் போட்டிருந்தார். மோட்டார் சைக்கிளில் அவருக்குச் செய்தி போயிற்று.

"அவர் வருவதற்குள் டிப்டியே தலைமை வகித்து ஒரு சிறிய போலீஸ் படையுடன் போய்த் தங்கராசு வீட்டையும் கடையையும் வளைத்துக் கொண்டு சோதனை போட்டார். கடையை அடுத்திருந்த தொழிற்சாலையில் புகையிலை பாடம் செய்யப்படும் பகுதியில் பூமிக்குள் புதைத்து வைக்கப்பட்டிருந்த கள்ளிப் பெட்டி தோண்டி எடுக்கப்பட்டது. அதற்குள் கொய்யா இலையில் சுற்றி வைக்கப்பட்டிருந்தது அபினி. தங்கராசு தப்பி ஓடி விட்டான். அவனைப் பிடிக்க உத்தரவுகள் பறந்து கொண்டிருந்தன.

"நான் இந்தத் தகவல்களை அறிந்து கொள்வதற்கும் பெரிய அதிகாரிகள் வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது. பெரிய துரையிடம், தங்கராசு போலீஸ் கைக்குள்தான் இருக்கிறான் என்பதைச் சொல்லி அவனைத் திண்டுக்கல்லுக்குக் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்தேன்.

"திண்டுக்கல் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் மிகவும் சுறுசுறுப்புடன் வேலை செய்தார். அன்று மாலைக்குள் மூன்று சாட்சிகளையும் சேகரித்து விட்டார். அவர்களெல்லாம் முன் இரவில் தங்கராசு கடைக்கு ஒரு கார் வந்ததாகவும், தங்கராசு கடை வாசலில் இருந்ததாகவும், காரிலிருந்து ஒரு பெட்டியை இறக்கி உள்ளே கொண்டுபோனதைப் பார்த்ததாகவும் சொன்னார்கள்.

"மாலையில் தங்கராசு வந்து சேர்ந்தான். அவனிடம் அவனுடைய கூட்டாளிகளைப் பற்றிக் கேட்க வேண்டிய விதமாகக் கேட்கப் பறந்தார் சர்க்கிள். நான் டிப்டியிடம், 'ஸார்! அவசரப்பட்டு அவனை ஒன்றும் செய்து விட வேண்டாம் என்று சொல்லுங்கள். அவன் எதிரிலேயே சாட்சிகளை அழைத்துக் கேட்



டால் தானாக உண்மையை ஒப்புக் கொண்டு விடுவான்' என்று சொன்னேன்.

"சாட்சிகள் வரவழைக்கப்பட்டார்கள். தங்கராசு பிரமை பிடித்தவன் போல் பேச வாய் வராமல் நின்றிருந்தான். சடையனும் மற்ற இருவரும் இரவில் கார் வந்ததையும், அதிலிருந்து பெட்டியை இறக்கியதையும் எல்லாம் கண்டது கண்டபடி சொன்னார்கள். டிப்டியின் உத்தரவின்படி சர்க்கிள்தான் அவர்களைக் கேள்விகள் கேட்டார்.

"அந்த விசாரணை முடிந்தபிறகுதான் நான் அதில் தலையிட்டேன். சாட்சிகளை ஒவ்வொருத்தராக அழைத்து, 'அந்தக் கார் வந்தபோது ராத்திரி மணி என்ன இருக்கும்?' என்று கேட்டேன். மூவரும் ஒரு மணிக்குக் கிட்டத்தட்ட இருக்கும் என்றார்கள். பண்டாரியின் பன்னிரண்டடித்து ரொம்ப நேரம் ஆகிவிட்டது என்றார்கள். 'கடை வாசலில் தங்கராசு இருந்ததைப் பார்த்தாயா?' என்ற கேள்விக்கு மூவரும் 'முன்னே இருட்டிலே தெரியல்லே. அவர் குரல் மட்டும் கேட்டுது. அப்புறம் கார் புறப்பட்டப்போ அந்த விளக்கு வெளிச்சத்திலே பார்த்தோம்' என்றார்கள்.

"அதிர்ஷ்டவசமாகச் சோழவந்தானில் என்னிடமிருந்து தங்கராசு பொறுப்பை ஏற்றுக் கொண்ட ஜவான் வந்திருந்தான். முதலில் அவனை அழைத்து, 'நான் தங்கராசுவுடன் அந்த ஸ்டேஷனுக்கு வந்தபோது மணி என்ன இருக்கும்' என்று கேட்டேன். அவன் 'சரியா ஒரு மணி ஸார். ஸ்டேஷன் டைரியிலே குறிச்சிருக்கேன்' என்றான்.

"அதைக் கேட்ட டிப்டி கோபத்துடன், 'என்ன மேன் உளர்றே? ஒரே நேரத்துலே இவன் எப்படித் திண்டுக்கல்லிலேயும் சோழவந்தானிலும் இருந்திருக்க முடியும்?' என்று சீறினார். என்னிடம், 'இதெல்லாம் என்ன? நீ தான் இவனைப் பிடித்தாய் என்ற பெருமை கைதவறிவிடக் கூடாதென்று கதை பண்ணுறியா?' என்றார்.

"நான் 'இதோ ஒரு நிமிஷத்தில் தெளிவு படுத்தி விடுகிறேன்' என்று கூறிவிட்டு, வாசலில் காத்திருந்த ஷோக்கூரையும் அவருடைய வண்டிக்காரனையும் அழைத்தேன். அவர்கள் இருவரும், நான் தங்கராசுவுடன் இரவு பத்தேமுக்காலுக்கு ஷோக்கூர் வீட்டிலிருந்து புறப்பட்டதாகச் சொன்னார்கள். வண்டிக்காரன் என்னை அம்பாத்துரை ரயிலடியில் விட்டதையும் சொன்னான்.

"நான் டிப்டியிடம், 'கடத்தல் நடத்துவது தங்கராசு அல்ல. உண்மையான ஆட்களைப் பிடிப்பதற்காகவே நான் நேற்று இரவு இவனைக் கைது செய்து அவ்வளவு தூரம் கொண்டு போனேன்' என்றேன்.

"மேலும் ஒரு மணி நேரத்தில் பெரியதம்பி நாடார், வேலுச்சாமி, அவர்கள் கோஷ்டியைச் சேர்ந்த இன்னும் இருவர் ஆகிய நால்வரும் ஸ்டேஷனுக்குக் கொண்டுவரப் பட்டார்கள். பெரியதம்பி நாடார் கடத்தல் கூட்டத்தில் ஒரு முக்கியமான ஆள் என்பது வெளியாயிற்று. அவருக்குத் தங்கராசுவிடம் வியாபாரப் போட்டி; பொறாமை. அவர் பணம் திரட்டுவதற்கு முழுக்கமுழுக்கக் கருட்டு வியாபாரத்தையே நம்பியிருக்கவில்லை. அபினி வியாபாரத்தில் அதைவிட எத்தனையோ மடங்கு அதிக லாபம் கிடைத்தது. இருந்தாலும், 'நேற்றுப் பயல். இவன் பெரிய வியாபாரியாகி விட்டானே?' என்று தங்கராசுவின் மேல் ஆத்திரம்.

"அந்த ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ள வாய்ப்புக்குக் காத்திருந்தார். மருதாயி கலியாண விவகாரம் அந்த வாய்ப்பை அளித்தது. வேலுச்சாமியைப் பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தார்.

"அவர் வெற்றியும் அடைந்திருப்பார். அவர் திட்டம் நிறைவேறியிருந்தால் தங்கராசு தான் நிரபராதி என்று என்னதான் கரடியாகக் கத்தியிருந்தாலும் பயனிருந்திராது. அவ்வளவு திறமையோடு எல்லாம் ஜோடிக்கப்பட்டிருந்தன. ஆனால் அவருடைய துரதிர்ஷ்டம் நான் அதில் குறுக்கிட்டுக் கெடுத்து விட்டேன்" என்று முடித்தார் குமாரசாமி.

நான், "நீங்கள் தங்கராசுவைக் கைது செய்தபோது இப்படியெல்லாம் வரப்போகிறதென்று உங்களுக்குத் தெரியுமா!" என்று கேட்டேன்.

குமாரசாமி, "இல்லை. நான் எதிர்பார்க்கவேயில்லை. அன்று இரவு தங்கராசுவுக்கு ஏதோ துன்பம் நேரப்போகிறதென்பது மட்டும் என் மனத்தில் பட்டுவிட்டது. காரண காரியத் தொடர்பு காட்ட முடியாத ஒரு மன நிலைமை இது. வேண்டுமானால் மனக்குறளி என்று சொல்லிக் கொள்ளலாம். அது அம்மனின் அருள் என்பதுதான் என் நம்பிக்கை" என்றார்.

நான், "ஆனால் சோழவந்தானில் அவனை ஒப்படைத்தபோது நீங்கள் சொன்னது?" என்றேன்.

அவர், "அப்போதைக்கு அந்த சப்-இன்ஸ்பெக்டருக்கு ஏதாவது சொல்ல வேண்டுமென்று என் மனத்தில் வந்ததைச் சொல்லி விட்டேன்" என்றார்.

"தங்கராசுவின் எதிரிகள் இப்படித் தாமாக வந்து சிக்கிக் கொள்ளாமல் இருந்தால் அந்த விவகாரம் பெரிய சிக்கலாகப் போயிருக்குமில்லையா?" என்றேன்.

குங்குமப்பொட்டு குமாரசாமி சிரித்தார். "அப்படி நேரவே நேராது. என் குலதெய்வம் இன்றுவரை என்னைக் கைவிட்டதில்லை. தங்கராசுவுக்கு நேரக்கூடுமென்று நான்பயந்த ஆபத்திலிருந்து அவனைப் பாதுகாக்கத்தான் அவனைக் கைது செய்வதாகச் சொல்லி ஊர் எல்லை கடத்தி அழைத்துச் சென்றேன். அதுவே என் வெற்றிக்கும் காரணமாக அமைந்து விட்டது! அடுத்த மாதமே தங்கராசு மருதாயி கலியாணம் ரொம்ப ரொம்பச் சிறப்பாக நடந்தேறியது. இருவரும் இன்னும் அமோகமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நான் கிராமத்திலிருந்து திரும்பும் வழியில் தங்கராசு என்னைப் பார்த்து விட்டான். வற்புறுத்தி இருத்தி, கணவனும் மனைவியும் எனக்கு இரண்டு நாட்கள் ராஜோபசாரம் நடத்தி வைத்துத்தான் புறப்பட அனுமதித்தார்கள்" என்றார்.

ஏப்ரல் ௯ முதல்

...சென்னை...

வெலிங்டன் ☆ ஸ்ரீ கிருஷ்ணா·உமா

மற்றும் தென்னாடெங்கும்







ஸ்ரீ புரொடக்ஷன்ஸ்

# நல்ல தீர்ப்பு



டைரக்ஷன் : T. பிரகாஷ் ராவ்

திரைக் கதை : வசனம் :

முரசொலி மாறன். M.A.

சங்கீதம் : ...ஒலிப்பதிவு...

S.M. சுப்பையா ☆ கமல் கோஷ்

ஸ்டுடியோ : வாஹினி-விஜயா





...தயாரிப்பு...

சுந்தர்லால் நஹாதா

ஸ்ரீ புரொடக்ஷன்ஸ். சென்னை




## — அறிமுகம் —

கண்களைப் படைத்த கடவுள், அவற்றைப் பார்ப்பதற்காக மட்டுமே படைக்கவில்லை; உறக்கத்துக்கும் சேர்த்தே படைத்திருக்கிறார். ஊனக் கண்களை இழந்து, பார்க்கும் சக்தியையே பறி கொடுத்தவர்களுக்குக்கூட உறக்கம் அவசியமாகிறது.

பரிபூர்ண உடல் நலத்துக்கு நிம்மதியான உறக்கம் தேவை என்று வைத்திய சாஸ்திரம் கூறுகின்றது. உறக்கம் யாருக்கும் அவசியம். அதிலும் குழந்தைகளுக்கு அது மிக மிக அவசியம். எனவே குழந்தைகளுக்கு உறக்கத்தை ஊட்டுவதற்கென்றே தாய்க்குலம் "ஆராரோ"ப் பாட்டைக் கூட உருவாக்கியுள்ளது. ஆஹா! அந்தப் பாட்டில்தான் எத்தனை இனிமை! அன்பை இன்சொல் அமுதமாக அப்பாட்டிலே இழைத்தல்லவா புகட்டுகிறாள் தாய்! அதன் இன்பத்திலே தன் உபாதைகளையெல்லாம் மறந்து நிம்மதியாக உறங்கி விடுகிறது குழந்தை.

நோயால் அவதிப்படுபவர்களுக்கு நோய் நீங்க மருந்தோடு உறக்கமும் அவசியமாகின்றது. தூக்க மாத்திரைகளோ, "மார்பியா" போன்ற மயக்க மருந்துகளோ, ஏதேனும் ஒன்றைச் செலுத்தி நோயாளிக்கு உறக்கத்தை உண்டுபண்ணுகின்றனர் இன்றைய வைத்தியர்கள்.

தவிர, உறக்கமானது மன உளைச்சல்களையும் போக்கக் கைகண்ட மருந்தாக உதவுகின்றது. உடலில் எவ்வாறு பலவித நோய்கள் தோன்றுகின்றனவோ, அவ்வாறே மனத்தையும் பலவித நோய்கள் பிடிக்கின்றன. சோகம், கோபம், தாபம், கவலை, காதல் இப்படிப் பலப்பல.

உடல் நோய்களைப் போலவே மனநோய்களிலும் சில விரைவில் குணமாகிவிடுகின்றன; சில நாள்படக் குணமாகின்றன; சில குணமாவதே இல்லை. அப்படிப்பட்ட தீராத மன நோயால் பிடிக்கப்பட்டவர்கள், ஒரு தாற்காலிக சாந்தியாவது தங்களுக்குக் கிடைக்கலாகாதா என்று ஏங்கித் துடிக்கிறார்கள். அந்தத் தாற்காலிக சாந்தியை அவர்களுக்கு அளிக்க வல்லது ஒன்றே ஒன்றுதான்—உறக்கம்; கண் உறக்கம்.

இப்படிக் குணமாகாத, குணமாக்க முடியாத மனநோயால் — காதல் மனநோயால் அவதிப்படும் ஒரு பெண்ணின் வாழ்க்கையைச் சித்திரிப்பதுதான் இந்த நாவல். "கண்கள் உறங்காவோ?" என்பது அவள் எழுப்பும் ஓலக்குரல்தான்.

தமிழ் வாசகர்களுக்குத் தரமான கதைகளைத் தருவதில் தனிப் புகழ்பெற்ற "கல்கி"ப் பத்திரிகையில், இன்றையத் தமிழ் எழுத்துலகுக்கே ஒரு புது வழி வகுத்துக் கொடுத்த பேராசிரியர் "கல்கி" அவர்களின் பேனா வண்ணம் சிறந்தோங்கிய அதே பத்திரிகையில், ஒரு நல்ல கருத்துடைய கதையைத் தமிழ் வாசகர்களுக்கு எழுதும் வாய்ப்புக் கிடைத்ததற்காக நான் பெருமை கொள்ளுகிறேன். அந்த வாய்ப்பை எனக்கு அளித்த "கல்கி" நிர்வாகிகளுக்கு என் மனமார்ந்த நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறேன்.

"மாயாவி"

### அத்தியாயம் 1

## வீணா வருகிறாள்!

அது அழகிய சிறு கிராமம். அதன் பெயரில் கூட ஓர் அழகு; ஓர் இனிமை — கேசவபுரம். நகரத்தின் வசதிகளும், கிராமத்தின் சூழ்நிலையும் நிறைந்தது அவ்வூர். அமைதி நிலவும் தெருக்கள், நிழல் அளிக்கும் மரங்கள், பசுமை கொஞ்சும் வயல்கள், நீர் சுழித்தோடும் ஆறு, உயர்ந்தெழுந்த கோபுரத்துடன் பக்தியூட்டும் கோவில், ஊர் எல்லையில் ரயில்வே ஸ்டேஷன். அதற்குச் சிறிது தூரத்துக்கு அப்பால் மலைத் தொடர். அங்கே புதிதாக உருவாகிக் கொண்டிருந்த பாசன அணை ஒன்று. அது கேசவபுரத்தை இன்னும் செழிப்பாக்கப் போகிறது.



இத்தனையும் கொண்ட அவ்வூரிலே, நடுத் தெருவில் உள்ள அழகான இரட்டைமாடி வீடு ஒன்றில் ஒருநாள்:—

கண கண வென்று மணி ஒலித்தது. சச்சிதானந்தம் பிள்ளை கர்ப்பூர ஆரத்தி எடுத்தார். அவர் வாய் திருப்புகழ் பாசுரம் ஒன்றை ஓதியது. எதிரே, முருகன் படத்தை நோக்கிக் கரம் குவித்து நின்றாள் மாலா-அவள் சச்சிதானந்தத்தினுடைய அக்கா மகள்.

மணிச் சத்தம் கேட்டதும் அடுக்களையில் சமையல் வேலையில் ஈடுபட்டிருந்த சச்சிதானந்தத்தின் மூத்த சகோதரி தைலம்மாள், தனது பருத்த உடலைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு 'குடு-குடு' வென்று ஓடி வந்தாள். "ஏன் தம்பி, சூடன் காட்டுதுக்கு முன்னாடி ஒரு குரல் கொடுக்கக்கூடாது" என்று கேட்டவாறு அவள் தன் மகள் மாலாவின் அருகே வந்து நின்று கொண்டாள். "செந்திவேல் முருகா! திருமலையப்பா! நீயே துணை" என்று தைலம்மாளின் வாய் முணுமுணுத்தது; கைகள் கன்னத்தில் போட்டுக் கொண்டன.

சச்சிதானந்தம் பிள்ளை ஆரத்தியை முடித்துத் தட்டைக் கீழே வைத்தார். கர்ப்பூரத்தைக் கண்களில் ஒற்றிக் கொண்டார். படத்தின் முன்னிருந்த தட்டிலிருந்து திருநீறு எடுத்துத் தாம் பூசிக்கொண்டு, சகோதரிக்கும் மருமகளுக்கும் கொடுத்தார். பிறகு முகமும் கன்னங்களும் தரையில் பட மும்முறை வணங்கி எழுந்தார். மார்புவரை உயர்த்திக் கட்டிக் கொண்டிருந்த மேல் துண்டை அவிழ்த்துத் தோளில் போட்டுக் கொண்டு, "என்ன சொன்னே, தைலம்மா?" என்று மிகுந்த அமைதியுடன் வினவினார்.

"இல்லே, நான்தான் உன்னே சோலி பார்த்துக்கிட்டிருக்கேன்னு தெரியுமில்லே. பூசை ஆகுதபோது நீயோ, இவளோ ஒரு குரல் கொடுத்தா என்னான்னு கேட்டேன்" என்றாள் தைலம்மாள்.

சச்சிதானந்தம் பதில் சொல்வதற்குள் மாலா 'களுக்' கென்று சிரித்து விட்டு, "நீ பூசைக்கு வருகிறதற்காகத்தானே அம்மா, மாமா மணி அடித்து அறிவிப்புச் செய்கிறாங்க" என்றாள்.

"இவ பேசற பேச்சைக் கேட்டியா தம்பி? நீஎன்ன சாமியை உசுப்பி பூசை-நைவேத்தியம் கொடுக்க மணி அடிக்கிறியா, இல்லே என்னை உசுப்பவா?"

"ரெண்டுக்குந்தான்னு வைச்சுக்கிடேன்" என்று கூறிவிட்டு முறுவலித்தார் சச்சிதானந்தம்.

"அது என்ன மாமா அப்படிச் சொல்லிட்டீங்க? கடவுள்தான் கண நேரங் கூடக் கண் உறங்காமல் நம்மைக் காத்து வருகிறவராச்சே. அவரையா நாம் உசுப்ப வேண்டும், நம் பிரார்த்தனையைச் செலுத்த?" என்று வாதாடினாள் மாலா.

"போடி பைத்தியம், அதெல்லாம் சும்மா சொல்லுவாங்க ஒரு சொல்லுக்கு. அதுக்காகச் சாமி உறங்காமலும், சாப்பிடாமலும் இருக்குமின்னு அர்த்தமில்லே" என்றாள் தைலம்மாள்.

சச்சிதானந்தம் சொன்னார்: "கடவுள் தூங்கத்தான் செய்வார் தைலம்மா. ஆனால் அந்தத் தூக்கம் மெய்மறந்த தூக்கமாக இராது. அவருடைய உடல் தூங்கினாலும் உள்ளம் தூங்காது. கண்கள் மூடினாலும் கருத்து விழித்துக் கொண்டிருக்கும்."

"இது என்ன தம்பி புது வேதாந்தமா இருக்கு நீ பேசறது" என்று வியப்புடன் கூறினாள் தைலம்மாள்.

"வேதாந்தம் ஒன்றும் இல்லை தைலம்மா, உலகத்திலே உள்ள . . . முறை, நீயும் நானும் என்ன செய்கிறோமோ, அதைத்தான் கடவுளும் செய்கிறார். இதோ உனக்கு ஒரு மகள் இருக்கா. எனக்கும் ஒருத்தி இருக்கா, கண்ணை , இருக்கா உன் மகள். எங்கேயோ தொலை தூரத்திலே இருக்கா என் மகள். இருந்தாலும் உண்ணும்போதும், உறங்கும் போதும், என்றைக்காவது நாம் அவர்களை நினைத்துக் கொள்ளாமல் இருக்கிறோமா? அவர்கள் நல் வாழ்வைப் பற்றிச் சிந்திக்காமல் இருக்கிறோமா? அது போலத்தான் கடவுளுக்கு இந்த உலகத்து ஜீவராசிகள் எல்லாம் குழந்தைகள். ஆகையால் உண்டாலும், உறங்கினாலும், அவர்கள்மீது அவர் வைத்திருக்கும் கருத்தாகிய கண்கள் ஒருபோதும் உறங்கி விடுவதில்லை."

"அது என்னமோ தம்பி, நீ வேதாந்தி. வேதாந்தமா என்னமோ சொல்லுறே. எனக்கு......"

தைலம்மாளின் பேச்சுத் தடைப்பட்டது. வாசலிலிருந்து "ஸார்! ஸார்!" என்று குரல் வந்தது.

"யார் அப்பா?" என்று கேட்டுக் கொண்டே பூசை அறையிலிருந்து வெளியே வந்தார் சச்சிதானந்தம். தைலம்மாளும் மாலாவும் அவரைப் பின் தொடர்ந்தனர்.

வெளித் திண்ணையில் காக்கி உடையணிந்த ஒருவன் நின்று கொண்டிருந்தான். தெருவில் சிவப்பு சைக்கிள் ஒன்றும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. இதையெல்லாம் பார்த்ததுமே வந்திருப்பவன் தந்திச் சேவகன் என்பது அம்மூவருக்கும் தெரிந்து விட்டது.

உடனே அவர்கள் உள்ளத்தில் இனமறியாத ஒரு பரபரப்பு. சச்சிதானந்தம் அவசரம் அவசரமாகத் தந்தியைக் கையெழுத்திட்டு வாங்கியபோது தைலம்மாள், "திருமலையப்பா! நல்ல சேதி கொடு, ஆண்டவனே!" என்று வேண்டிக் கொண்டாள்.

கவலையுடன் தந்தியை உடைத்துப் படித்த சச்சிதானந்தத்தின் முகம் மலர்ந்

தது. அந்த மலர்ச்சி தைலம்மாள் மற்றும் மாலாவின் முகங்களுக்கும் உடனே தாவியது. "என்ன தம்பி?" என்று ஆறுதலோடு கேட்டாள் தைலம்மாள்.

"வீணு வருகிறுள் அக்கா!" உள்ளத்தின் மகிழ்ச்சி அவருடைய சொல்லிலே மலர்ந்தது.

ஆனால் தைலம்மாளின் மலர்ந்த முகம் இதைக் கேட்டதும் சுருங்கியது. சச்சிதானந்தம் அதைக் கவனிக்கவில்லை. அவர் கவனத்தை மாலா கவர்ந்து விட்டாள். "வீணு அக்காளா மாமா? என்றைக்கு?" என்று அவள் ஆவலோடு கேட்டாள்.

"நாளைக் காலை வண்டியிலே அம்மா. இந்நேரமெல்லாம் பட்டணம் வந்து சேர்ந்திருப்பாள்."

"ஏன் தம்பி, அதென்னமோ பரீட்சை தேறின பிறகுதான் அனுப்புவாங்கன்னு சொன்னியே. தேறிட்டாளாமா?" என்று கேட்டாள் தைலம்மாள்.

"தேறிவிட்டாள் அக்கா! எம். பி. பி. எஸ். பட்டம் பெற்ற டாக்டராகத்தான் அவள் வருகிறுள்."

"ஆமாம்! பொம்புள்ளை டாக்டராகவும் நர்ஸாகவும்ஆகி வாழ்ந்தா போ. என்னமோ அவங்களுக்கு ஒரு பைத்தியம். நம்ம நாட்டு வளமை தெரியாதவங்க."

"இது என்னம்மா அசட்டுத்தனமான பேச்சு?" என்று தாயை இடைமறித்தாள் மாலா. "என்னைத்தான் ஏழாங் கிளாசுக்கு மேலே படிக்க வேண்டாம்னு பட்டிக்காடாகவே நிறுத்திட்டே. மதனி யாவது பெரிய படிப்பு படிச்சிட்டு வராங்களேன்னு சந்தோஷப்பட்டுக்கிட்டிருக்கேன். நீ என்னுன்னு..."

தாயின் முகம் திடீரென்று விகாரமாவதைக் கண்டு மாலா நிறுத்திக் கொண்டாள். ஆயினும் தைலம்மாள் அதற்குள் வெடித்துவிட்டாள். "என்ன சொன்னே? யாரு...?" என்ற அவள் கேள்வியில் ஓர் எரிமலையின் குமுறல் ஒலித்தது.

"இல்லேம்மா. வாய் தவறிப் போய்..." மாலா நடுநடுங்கிக் கொண்டே பதில் அளித்தாள்.

"சரிதான் பேச்சை விடுங்க. இந்தச் சமயத்திலே அந்த நினைவையெல்லாம் ஏன் கொண்டுக்கிட்டு வர்றீங்க? உள்ளே போங்க ரெண்டு பேரும்" என்று அங்கே மூண்டெழுவிருந்த அக்னியைச் சமனம் செய்தார் சச்சிதானந்தம். ஆயினும் தமது கட்டளைக்குட்பட்டு உள்ளே திரும்பிக் கொண்டிருந்த சகோதரியின் விழிக் கடையில் கோத்திருந்த நீர்த் திவலையைப் பார்த்த போது அவர் உள்ளத்திலிருந்தும் ஏக்கப் பெருமூச்சு ஒன்று வெளிவந்தது.

ஆனால் சச்சிதானந்தம் அதை வளர விடவில்லை. அவர் தமது அறைக்குச் சென்று சட்டையை மாட்டிக் கொண்டு கூடத்துக்கு வந்தார். பூசைக்காக வைக்கப்பட்டிருந்த பொருள்களை எடுத்துச் சென்றுகொண்டிருந்த மாலாவை நோக்கி, "நான் புஷ்பவன மாமா வீட்டு வரை போய் விட்டு வருகிறேன், அம்மா!" என்று கூறிவிட்டுக் கிளம்பினார்.



"சமையல் முடிஞ்சு போச்சு, தம்பி! சாப்பிட்டுட்டுப் போயிடு. அங்கே போனு நேரம் ஆயிடும்" என்று அடுக்களையிலிருந்து குரல் கொடுத்தாள் தைலம்மாள்.

"இல்லே, அக்கா! இதோ வந்துடுவேன். வீணு வருவதைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லிட்டு வர எத்தனை நேரமாகும்?"

"அதுக்கென்னடா தம்பி, இத்தனை அவசரம்? சாப்பிட்டுட்டுப் போய்ச் சொன்னு தலை முழுகியா போயிடும்?" என்று தைலம்மாள் சிறிது அதிகாரம் கலந்த குரலில் கூறியவாறு கையில் குழம்புக் கரண்டியுடன் அடுக்களையிலிருந்து கூடத்துக்கே வந்து விட்டாள்.

"நீ இப்பொத்தான் குழம்பு ஆக்கிக்கிட்டிருக்கே போலிருக்கு!" என்று அவள் கையிலிருந்த கரண்டியிலிருந்து வீசிய பச்சைப் புளி மணத்தை நுகர்ந்து கொண்டே சொன்னுர் சச்சிதானந்தம்.

"ஆமாம், அது ஆக்கத்தான் பொழுது தொலையாதாக்கும். புளி ஊத்திட்டேன். ஒரு கொதி கொதிச்சுடிச்சின்னு ஆயிப் போச்சு. சித்த இருந்து சாப்பிட்டுட்டுப் போ தம்பி. அங்கே போனியின்னு அவரு கொஞ்சத்திலே விடமாட்டாரு."

"யாரு தைலம்மா? யாரைக் கொஞ்சத்திலே விடமாட்டாரு?" என்று கேட்ட வண்ணம் அச்சமயம் புஷ்பவனம் பின்னையே அங்கு வந்து விட்டார்.

"வாங்க, வாங்க" என்று சச்சிதானந்தம் பிள்ளையும், "வாங்க தம்பி. ஒங்களுக்கு நூறு வயசுதான்" என்று தைலம்மாளும் அவரை வரவேற்றனர்.

"என்ன விஷயம் அத்தான்? அக்காளும் தம்பியும் அடிபிடி போட்டுக்கிட்டிருக்கீங்க?" என்று கேட்டார் புஷ்பவனம்.





நேஷனல் எக்கோ தொழிற்சாலையின் பிளாஸ்டிக் பிரிவைப் பம்பாய் ராஜ்ய தொழில் மந்திரி திரு எஸ். கே. வெங்கடே மார்ச் 9-ந் தேதி திறந்து வைத்தார். நேஷனல் எக்கோ தொழிற்சாலையின் ஜெனரல் மானேஜர் திரு எச். வி பேஜர், தலைவர் திரு ஏ டி. ஷராப் தொழில் மந்திரி ஆகியவர்களைப் படத்தில் காணலாம்.

"இல்லே; உங்க வீட்டுக்குத்தான் புறப்பட்டுக்கிட்டிருந்தேன். தைலம்மா 'சாப்பிட்டுட்டுப் போ தம்பி' என்றாள். அதுக்குள்ளே நீங்களே வந்துட்டீங்க."

"ஆமாம், தம்பி! நீங்களும் இவனும் சேர்ந்து பேசத் தொடங்கிட்டீங்கன்னா ஒங்களுக்குத்தான் சோறு-தண்ணி, வீடு-வாசல் எல்லாம் மறந்து போயிடுதே."

"அப்படீன்னா நாங்க வீடுவாசலைக்கூடக் கவனிக்காமல் வெட்டிப் பேச்சு பேசறவங்க என்கிறீங்க. அப்படித்தானே?"

"அட நீங்க என்ன தம்பி, அதுக்குள்ளே கோவப்பட்டுக்கிறீங்க? சோத்தைத் தின்னுட்டுப் போறதுக்காக அவன்கிட்டே ஒரு பேச்சுக்குச் சொன்னா? அது என்னமோ ஊரிலே இல்லாத அதிசயம் போலே ஒங்ககிட்டே உடனே சொல்லலேன்னா தலை வெடிச்சுப் போயிடுமாம் இவனுக்கு."

"என்ன விஷயம் அத்தான்? தைலம்மாள் என்னமோ பொடி வைச்சுப் பேசறாங்களே?" என்று சச்சிதானந்தத்தைக் கேட்டார் புஷ்பவனம்.

"அவள் பொடி வைக்காத விஷயம் தான் என்ன இருக்குது தம்பி? வாங்க, அப்படித் திண்ணையிலே இருந்து பேசலாம். நீ போ அக்கா; சமையல் முடிந்ததும் கூப்பிடு" என்று கூறிவிட்டு, புஷ்பவனத்தின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு கூடத்திலிருந்து கிளம்பினார் சச்சிதானந்தம்.

அந்தக் கிராமாந்தர வீட்டின் வெளித் திண்ணை விசாலமானது. தெருவை ஒட்டித் தரையிலிருந்து மூன்றடி உயரத்தில் வழவழப்பாக சிமெண்டு பூசிக் கட்டப்பட்டிருந்தது அது. மேல் துண்டால் தெருப் புழுதி படிந்திருந்த தரையைத் தட்டி விட்டு, "உட்காருங்க தம்பி!" என்றார் சச்சிதானந்தம். தாமும் அமர்ந்தார். பிறகு "மகன் வருகிறான் நாளைக்கு" என்றார் உள்ளப் பூரிப்புடன்.

"விஜயா? காசிப்பூரிலிருந்தா? படிப்பு முடிஞ்சு போச்சு தாமா?"

"ஆமாம், பாஸ் பண்ணிட்டானாம்."

"யார் கடுதாசி எழுதி யிருக்கிறாங்க? மகாராஜாவா?"

"இல்லே, அவனே தான். இப்போத்தான் தந்தி வந்தது. அதைச் சொல்லத்தான் அங்கே புறப்பட்டுக் கிட்டிருந்தேன்!"

"தேவலாமே! நல்ல ஒற்றுமைதான். நான் கூட அதுமாதிரி ஒரு செய்தி சொல்லத் தான் புறப்பட்டு வந்தேன். நம்ம சுந்தரத்துக்கும் வேலை ஆயிடிச்சாம்! இப்பத்தான் எனக்கும் தந்தி வந்தது."

"சந்தோஷம். எங்கே வேலே? பட்டணத்திலேதானா?"

"இல்லே, இல்லே. ஆண்டவன் புண்ணியத்திலே வீட்டோட இருந்துக்கிட்டே அவன் வேலைக்குப் போயிட்டு வரலாம். நம்ம புங்களூறு பாசனத் திட்டத்திலே சூப்பர்வைசிங் இன்ஜினியராய்ப் போட்டிருக்காங்களாம்."

"அடடா! ரொம்ப நல்லதாப் போச்சு."

"அவனும் நாளைக்கு வரதாகத்தான் தந்தி கொடுத்திருக்கான்."

"காரிலேதானே?"

"ஆமாம். பின்னே என்ன? அதுதான் ஒண்ணு. அவனுக்குப் பட்டணத்தையும் நம்ம கேசவபுரத்தையும் வீட்டுக் கொல்லையும் வாசலுமா ஆக்கியிருக்குதே."

"சுந்தரம் அதிர்ஷ்டக்காரனுங்க. அவனுக்கு லாட்டரியிலே கார் விழுந்தபோதே நான் சொல்லலே? நீங்க என்னவோ அப்போ ஒத்துக்கிடலே. இப்போப் பாருங்க, எடுத்த எடுப்பிலே சூப்பர்வைசிங் இன்ஜினீயர் வேலை. அதிலேயும் உள்ளூரிலே...."

"சாப்பிட வர்றீங்களா மாமா?" என்று கேட்டுக் கொண்டு அச்சமயம் மாலா அங்கு வந்தாள்.

"வா அம்மா! நீயில்லா கேட்டு சந்தோஷப்படணும். நம்ம சுந்தரத்துக்கு வேலை ஆயிடிச்சாம் மாலா. நம்ம ஊர் அணையிலேயே" என்றார் சச்சிதானந்தம்.

"நிசம்மாவா மாமா?" என்று கண்கள் அகலவிரிய புஷ்பவனத்திடம் வியப்புடன் கேட்டாள் மாலா.

"ஆமாம், அம்மா! நாளைக்கு வருகிறான் இங்கே."

மாலாவுக்குத் தலைகால் புரியாத சந்தோஷம். "அம்மா! அம்மா! நம்ம சுந்தர அத்தானுக்கு வேலை கிடைச்சுப் போச்சாம் அம்மா!" என்று கூவிக் கொண்டே அவள் உள்ளே ஓடினாள்.

# கண்மணியே கண்வளராய்...

திருவிழா முடிந்து விட்டது. கார் பறந்து செல்லுகிறது. அவ்வளவு வேகத்திலும் ஆடாமல் அசையாமல் போகிறது. பின் சீட்டில் ஒரு குழந்தை தூங்கிக் கொண்டிருக்கிறது. அதன் தூக்கத்திற்குப் பங்கம் வரக்கூடாதென்று காருக்குக் கூடத் தெரியும்போலும்!

விசைச் சக்கரத்தைப் பிடித்து தந்தை வண்டியை ஓட்டிச் செல்லுகிறார். அவருடைய நோக்கங்களை யெல்லாம் ஏற்கெனவே எதிர்பார்த்தது போல வண்டியின் சக்கரங்கள் லாகவமாகச் சுழன்று செல்லுகின்றன. அவர் அப்படியே ஆச்சரியத்தில் மூழ்குகிறார். "எனக்குக் கல்யாணமான வருஷம் இந்த மோட்டாரை வாங்கினேன். ஆமாம்! ஏழு வருஷங்களுக்கு முன்! மேல் பளபளப்பு போய் விட்டது. வண்டியின் தோற்றமும் நவீனமாக இல்லை. இருந்தாலும் புது வருஷத்திய 'மாடல்' ஒன்றுக்கு இதை மாற்றிக் கொள்ளுங்கள் என்று யார் சொன்னாலும் நான் அதற்குத் தயாராக இல்லை" என்று அவர் மனம் பெருமிதத்துடன் எண்ணி பூரிப்படைகிறது.

அவர் எண்ணியது முற்றிலும் சரியே. மோட்டார் என்பது அழகான ஒரு வாகனம் மட்டுமல்ல. அத்துடன் இன்பகரமான பல நினைவுகளும் இணைந்திருக்கின்றன. அதனால்தான் எங்களிடம் மோட்டார் வாங்குபவர்கள், அதற்காக நாங்கள் எடுத்துக்கொள்ளும் சிரத்தையைக் கண்டு, மற்ற மோட்டார்கள் எல்லாம் மெலிந்து காயலான் கடைக்குச் சென்றாலும் எங்களிடம் வாங்கிய வண்டி மட்டும் தொந்தரவு துவுமின்றி ஆனந்தமாக ஓடிக்கொண்டிருக்கும் என்ற நம்பிக்கையுடன் இருக்கிறார்கள். வாடிக்கைக்காரர்களின் இந்த நம்பிக்கைதான் எங்களுடைய வளர்ச்சியைப் போஷித்து வந்திருக்கிறது.

பெருகி வரும் தென்னிந்திய மோட்டார்த் தொழிலின் பல்வேறு தேவைகளை டி. வி. எஸ். ஸ்தாபனம் தன் பல கிளைகள் மூலம் இன்று பூர்த்தி செய்து வருகின்றது.



டி. வி. எஸ். ஸ்தாபனங்கள்: டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிட். மதுரை, திருச்சி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர் மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ், பெங்களூர் ★ ஸதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை ★ சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ் ★ சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்., புதுக்கோட்டை மதராஸ் ★ மதராஸ் மோட்டார் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட், மதராஸ் சுந்தரம் பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ் ★ இந்தியா மோட்டார் பார்ட்ஸ் & ஆக்ஸெஸரீஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ் ★ சுந்தரம்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை.

## டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிட்., மதுரை



வாத்தியார்: பசங்களா! பரீட்சை வந்து விட்டது. ஏதேனும் வேணு மென்றால் கேளுங்கள்.

மணிப்பயல்: கேள்வித்தாள்களை எங்களுக்கு முன்கூட்டியே காண்பித்து விட்டால் தேவலை!

"சந்தோஷத்தைப் பார்த்தீங்களா?" என்று புன்சிரிப்பு வழியப் புஷ்பவனத்திடம் சொன்னார் சச்சிதானந்தம்.

புஷ்பவனத்தின் முகத்திலும் புன்னகை மலர்ந்தது.

* * *

அன்று முழுவதும் சச்சிதானந்தம் ஒரே மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியிருந்தார். ஆம்! சிறு வயதிலேயே தாயை இழந்து விட்ட அவருடைய ஒரே மகன் வீணுவை எட்டு வருஷங்களுக்கு முன்பு நிர்ப்பந்தம் காரணமாக அவர் விட்டுப் பிரிய நேர்ந்தது. சுமார் ஆயிரத்து ஐந்நூறு மைல்களுக்கு அப்பால், வடநாட்டில் எங்கோ ஒரு சமஸ்தானத்தில் இருந்தான் அவன். இரண்டு மூன்று தடவைகள் அவர்தான் அங்கே போய் அவனைப் பார்த்து வந்திருக்கிறாரேயன்றி அவன் ஒரு தடவைகூடக் கேசவபுரத்துக்கு வந்ததில்லை. ஏன்? அவன் அறிவடைந்த பிறகு முதல் தடவையாக இப்பொழுதுதான் சொந்த ஊருக்கு வருகிறான். அதிலும் நிரந்தரமாக. இந்நிலையில் ஒரு தந்தையின் மனம் பூரித்துப் போகக் கேட்பானேன்?

அன்றிரவு அவரால் சில நிமிஷங்கள் கூடத் தூங்க முடியவில்லை. அப்பொழுது வசந்தகாலம். சச்சிதானந்தம் பிள்ளையின் வீடு தெருக்கோடியில் தெற்கு நோக்கியிருந்தது. அவர் வெளித் திண்ணையில் தான் படுத்திருந்தார். கடந்த எட்டு வருஷங்களாக அதுதான் அவர் படுக்கும் இடம். மழை நாளில் சாரல் அடித்து அவரைக் கிளப்பினாலன்றி உள்ளே வந்து படுக்க மாட்டார்.

"'குளு-குளு'ன்னு இருக்குது. இதை விட்டு உள்ளே படுத்துப் புழுங்கிக்கிட்டு இருப்பானா மனுஷன்!" என்பார் அவர். ஆம், வேர்வை பிழியும் கடும் வேனிலில் கூட அந்தத் திண்ணையில் மெல்லிய அலையாக இளங்காற்று வீசிக் கொண்டிருக்கும். அதுவும் இப்பொழுது வசந்த காலமாதலால் தென்றல் அருகிலிருந்த பன்னீர் மரங்களின் மீது மோதி, அவற்றில் பூத்திருந்த மலர்களின் நறுமணத்தைச் சுமந்து வந்து வீசிற்று. தெருக்களெல்லாம் மோனத் தவத்தில் ஆழ்ந்திருந்தன. தூரத்திலிருந்த ரயில்வே ஸ்டேஷனில் ஏதோ ஒரு குட்ஸ் வண்டி 'ஷண்டிங்' நடந்து கொண்டிருந்தது போலும்; அதன் சத்தம் மட்டும் கிராமத்தின் ஆழ்ந்த அமைதிக்கு இடையிடையே பங்கம் விளைவித்தது. இருந்தாலும் தூங்குகிறவர்களுக்கு அது ஒன்றும் இடையூறாக இருக்கவில்லை. ஆனால் சச்சிதானந்தத்தால்தான் தூங்க முடியவில்லையே! கடந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் ஆகிய மூன்று 'பாத்தி'களிடையே இன்பமாகக் 'கிளித்தட்டு' அல்லவா விளையாடியது அவர் உள்ளம்.

காலை எட்டரை மணிக்குத்தான் வீணு வரும் வண்டி. கேசவபுரம் ரயில்வே ஸ்டேஷனுக்கும் சச்சிதானந்தத்தின் வீட்டுக்கும் ஒன்றரை மைல் தூரம்கூட இருக்காது. ஆயினும் காலை ஐந்தரை மணி முதலே அவர் ஸ்டேஷனுக்குப் போகத் தம்மைச் சித்தப்படுத்திக் கொள்ளத் தொடங்கி விட்டார். மாலாவும் அவருடன் வருவதாகச் சொல்லியிருந்தாள். ஏழு மணிக்கெல்லாம் வண்டிக்காரன் மாடசாமியை அவசரப்படுத்தி வண்டி கட்டிக் கொண்டு வரச் செய்து, ஏழே கால் மணிக்கெல்லாம் அவரும் மாலாவும் ஸ்டேஷனுக்கு வந்து விட்டனர்.

வெயிட்டிங் ரூமிலிருந்த சாய்வு நாற்காலியில் படுத்து நிமிஷங்களைக் கணக்கிட்டுக்கொண்டிருந்தார் சச்சிதானந்தம். ஸ்டேஷனில், உள்ளூர்க்காரர்களும் வெளியூர்க்காரர்களுமாக, அவரைப் போல் இன்னும் எத்தனையோ பேர்கள், யார் யாரையோ வரவேற்கவும், பிரயாணம் செல்லவும் வந்து குழுமியிருந்தனர்.

சட்டென்று ஸ்டேஷனில் ஒரே பரபரப்பு: ஒரே இரைச்சல். "என்ன நடந்து விட்டது? ஜெப்படியா? இல்லை, யாருக்காவது ஏதாவது......? வா மாலா, நாமும் போய்ப் பார்க்கலாம்" என்று வெயிட்டிங் ரூமிலிருந்து சச்சிதானந்தம் வேகமாக வெளியே வந்தார்.

ஸ்டேஷன் மாஸ்டரின் அறையின் முன் கூட்டம் கூடியிருந்தது. 'குய்யோ-முறையோ' என்று ஆண்களும் பெண்களுமாகப் பலர் அழுது கொண்டிருந்தனர். ஸ்டேஷன்மாஸ்டர் உரத்த குரலில் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் பிறர் எழுப்பிய கூக்குரலில் அவர் கூறியது யாருக்கும் கேட்கவில்லை. கூட்டத்தை விலக்கிக் கொண்டு அவர் அருகில் சென்று விசாரிப்பதும் கடினம். ஆகையால் அருகில் நின்ற ஒருவரிடம் "என்ன ஸார்! என்ன நடந்து விட்டது?" என்று வினவினார் சச்சிதானந்தம்.

"சென்னை பாஸெஞ்ஜர் தடம் புரண்டு விட்டதாம், ஸார்!"

"ஆ!" என்று அலறினார் சச்சிதானந்தம்.

"ஐயோ!" என்று வீரிட்டாள் மாலா.

அந்த வண்டியில்தான் வீணு வருவதாகத் தந்தி வந்திருந்தது! (தொடரும்)




"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்" என்பது ஒரு பழமொழி. அதன் கருத்தை நேருக்கு நேராகக் காண விரும்பினால் உலகப் பிரசித்தி பெற்ற ஹாஸ்ய நடிகரான சார்லி சாப்ளின் தயாரித்து வெளியிட்டிருக்கும் "லைம் லைட்" என்ற ஆங்கிலப் படம் பார்க்க வேண்டும்.

சார்லி சாப்ளினை அறியாதவர்கள் யாரேனும் இருந்தால் அவர்களுக்குச் சிரிக்கவே தெரிந்திராது என்று தைரியமாகக் கூறலாம். சார்லி சாப்ளினைத் தெரிந்தவர்களுக்கு அவருடைய கறுக்கு மீசையைத் தெரியாமல் இராது. இந்தப் படத்தில் அவர் கறுக்கு மீசையில்லாமல் தோன்றுகிறார். ஏழு வருஷங்களுக்குப் பிறகு சார்லி சாப்ளின் இந்தப் படத்தைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்.

கத்திச் சண்டையில்லை; ரயில் பிரயாணம் இல்லை; குதிரை சவாரி இல்லை; வீட்டை விட்டுக் கண்ணீரும் கம்பலையுமாக வெளியேறும் ஆண், பெண் பாத்திரங்கள் இல்லை; அதிசயப் படும்படியாக இந்தப் படத்தில் வில்லன் இல்லை; ஆவேசச் சொற்பொழிவுகளும் இல்லை. பின்பு என்னதான் இருக்கிறது?

......கதை இருக்கிறது; கருத்து இருக்கிறது; புனிதமான காதல் இருக்கிறது; உணர்ச்சிக் கொந்தளிப்பு இருக்கிறது; எதற்கும் மேலாகத் தியாகம் இருக்கிறது.

சாப்ளினே கதை எழுதி, படத் தயாரிப்புப் பொறுப்பையும் ஏற்று, திரைக் கதை தயார் செய்து, இசை, நடனம் ஆகியவற்றையும் தாமே ஆக்கித் தந்து, டைரக்ஷனும் செய்திருக்கிறார்!

நூற்று முப்பத்தாறு நிமிஷங்களில், வெள்ளித்திரையில் வேகமும் உணர்ச்சியும் கொண்ட கதை நிகழுவது பெரிய அதிசயம் இல்லையா?

நடனமாடும் பெண் ஒருத்தி வாழ்வை வெறுத்து, விஷம் உண்டு தற்கொலையில் ஈடுபடுகிறாள். கிழ நடனக்காரன் ஒருவன் (சாப்ளின்) மயங்கிக் கிடந்த அவளுக்குத் தக்க சமயத்தில் சிகிச்சை செய்வித்து, அவளுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையும், உற்சாகமும் அளித்து மீண்டும் மேடையில் ஆடும்படி செய்கிறான். அந்தப் பேருதவி, நடனப் பெண்ணை அவனிடம் காதல் கொள்ளச் செய்கிறது. ஆனால் அக் காதலைக் கிழ நடிகன் ஏற்கவில்லை. அவளை மனமாரக் காதலித்த இளம் நாடகக் கவிஞனிடம் அவளை விட்டு விட்டு விலகிக் கொள்ளுகிறான். தன்னுடைய காதலால் அவளது மேடைப் புகழ் பாழாவதை அவன் விரும்பவில்லை. ஹாஸ்ய உணர்ச்சியும், தத்துவ ஞானமும் கொண்ட மேடைக் கலைஞனின் வாழ்வில் காதல் குறுக்கிட்டுச் சலனம் ஏற்படுத்துவதைப் படம் நன்கு எடுத்துக் காட்டுகிறது. நாடகக் கவிஞனின் பாத்திரத்தை ஏற்று, சார்லி சாப்ளின் மகன் சிட்னி சாப்ளின் நன்றாக நடிக்கிறார்.

கிழ நடிகன் உற்சாகத்தில் மேடையிலிருந்து 'ஆர்க்கெஸ்ட்ரா' டமாரத்தில் விழுந்து இறக்கும் காட்சி நெஞ்சைப் பிழிந்து விடுகிறது.

நடன நங்கையாக நடிக்கும் க்ளாரா ப்ளூம் சினிமாவுக்கு ஒரு புது முகம்; ஓர் அதிசயப் பெண். சார்லிசாப்ளின் அவளை நாடக மேடையில் கண்டு அவளது திறமையை அறிந்து சினிமாவில் சேர்த்து அவளை ஒரு நட்சத்திரமாக்கி விட்டார். ப்ளூமின் திறமை வாய்ந்த நடிப்பை "லைம் லைட்"ல் நன்கு காண முடிகிறது. உணர்ச்சி பொங்கும் அவரது விழிகள் என்னவெல்லாமோ பேசுகின்றன.

"லைம்லைட்" பார்ப்பவர்கள் ஒரு நல்ல படம் பார்த்தோம் என்ற திருப்தியைப் பரிபூரணமாகப் பெறலாம்.

## "ஏனப்பா இந்த வேஷம், சீதாராம்? உன் அழகான பொய்த்தாடி இப்படி கோரமாக

"உஸ்ஸ்...பலமாகப் பேசாதே. இந்தப் பாழும் புதிய சூட்டு படுமோசமாகப் போய்விட்டதப்பா. மானேஜிங் டைரக்டர் பார்த்தால் என் வேலைக்கே ஆபத்து வந்தாலும் வந்துவிடும்."

"என்ன, உனக்கு முன்னே பின்னே பின்னி துணி பற்றியே தெரியாதா? பின்னி மில்லில் துணியை ஒவ்வொரு கட்டத்திலும் 'குவாலிடி கண்ட்ரோல்' (தரப் பரீட்சை)* செய்தல்லவா தயாரிக்கிறார்கள்."

"'குவாலிடி கண்ட்ரோலா?' அப்படின்னா என்ன?"

"இந்த காலத்திய நவீன யந்திரங்களெல்லாம் நூலையும் துணியையும் அதிவேகமாக தயாரிப்பதால் சில சமயங்களில் கண்ணுக்குத் தெரியாத குறைகள் துணிகளில் ஏற்பட்டு விடுகின்றன. இவற்றை ஒவ்வொரு கட்டத்திலும் கண்டுபிடித்து நிவர்த்தி செய்ய பின்னி மில்லில் தனி லாபரெடரி ஒன்றை நிறுவியிருக்கிறார்கள். இதனால்தான் பின்னி 'சூட்டிங்'குகளெல்லாம் நீடித்து நிகரற்று விளங்குகின்றன."

"நல்ல தகவலைச் சொன்னாயப்பா. எனக்கு இப்போதுதான் உயிர் வந்தது. வா, உடனே பக்கத்திலுள்ள பின்னி துணிக்கடைக்குப் போவோம்"

*பிரத்யேகமாக அமைக்கப் பட்டுள்ள இந்த சாதனம் பருத்தியில் உள்ள குறைகளை 500 மடங்கு அதிகப்படுத்திக் காண்பிக்கிறது.

ஒரு துணியின் தரம் அதற்காக உபயோகிக்கப்படும் பருத்தியையே பெரிதும் பொறுத்துள்ளது. பின்னி துணிகளிலெல்லாம் உயர் ரக பருத்தியே உபயோகமாகிறது. அதனால்தான் பின்னி துணிகள் என்றும் நீடித்து சேவை புரிகின்றன.



பின்னி கம்பெனிகள் ஒவ்வொரு வருஷமும் சுமார் 9 கோடி கஜம் துணியை உற்பத்தி செய்கின்றன. அவை தோற்றுவித்துள்ள பல ரகங்களில் கீழ்க்கண்டவை சில.

ஷர்ட்டிங் - காக்கி டிரில் - வெளுக்கப்பட்ட மற்றும் சாயம் தோய்த்த டிரில்கள்
டவல்கள் - சுருக்கம் விழாத சூட்டிங்குகள் - டஸ்ஸோர்கள் - யூனியன் துணிகள்
பட்டுப் புடவைகள் - கம்பளிகள்

**BINNY–a great name in textiles**

**பின்னி—துணி உலகில் ஒரு இணையற்ற பெயர்**

முகத்தைப்
மறைத்திருக்கிறதே"



பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட்



# கங்காமிருதம்

எஸ். ஒய். கிருஷ்ணசாமி



எங்கள் கிராமத்துக் கோனார்கள் நாடெங்கும் புகழ் பெற்றவர்கள். பால், தயிர், நெய் விற்று ஜீவனம் செய்து வந்தனர். அவர்கள் குடியிருந்தது ஆற்றுக்கு அக்கரை. எங்கள் தெருவிலிருந்து பார்த்தால் அவர்களுடைய சிறு வீடுகளும் அதற்கப்பால் கண்ணுக்கெட்டிய வரை பச்சைப் பசேல் என்று நெல் வயல்களும் தெரியும். அவர்கள் கண்ணனுக்கு அன்பர்கள். அவர்கள் குலத்தில் தானே தாமரைக் கண்ணும் கருமுகில் நிறமும் பொருந்திய பரமன் அவதாரம் செய்து யமுனைக் கரையில் லீலைகள் பல செய்தார். ஆனால் ஒன்று; பரம்பரை பெரிதென்று வியாபாரத்தில் ஏமாறுவது எங்கள் ஊர் கோனார்களுக்குக் கிடையாது. அக் காலத்துப் புலவர்கள் பாடியவாறு தயிர்ப்பானை சுமந்து மருங்கசையத் தெருவில் அசைந்து கொண்டு வரும் இடைச்சி மங்கையர் பேதை கோபிகளைப் போல் ''தயிரோ தயிர்'' என்பதற்குப்பதிலாக ''கோவிந்தா, கோவிந்தா'' என்றெல்லாம் தன்னை மறந்து கதறமாட்டார்கள்; இந்தப் பைத்திய மெல்லாம் வியாபாரத்துக்கு இடைஞ்சல் என்பதை அவர்கள் நன்கு அறிந்தவர்கள். சிறு குழந்தை சிரிப்பைக் கண்டு மெய் சிலிர்த்துவெண்ணெயும் கொடார். அவர்கள் விற்ற தயிரைப் போல் அவர்கள் மனமும் நீரின்றிக்கெட்டியாயிருந்தது. ஆனால் அவர்கள் வெண்ணெயோடு சோற்றைச் சேர்த்து மாந்தரை ஏமாற்றும் நவீன வித்தைகளைப் பயிலாதவர்.

கோனார்கள் வேலையில் இச்சையற்றவர்கள். திண்ணைமீது உட்கார்ந்து தாம்பூலம் போட்டுக் கொண்டு அவசரமின்றிக் காலத்தைக் கழித்து வந்தனர். அசை போட்டுக் கொண்டே ஊர் வம்பு பேசி ஆனந்தம் அடைவர். எப்பொழுதாவது மாடு வாங்குவதற்குச் சந்தைக்குப் போவர். ஆனால் அதுவும் அனேகமாய் வீட்டுத் திண்ணையில் தான் நடைபெறும். அவர்களுக்குள் சாதிச்சண்டை அடிக்கடி முதிர்ந்து விடும். ஒன்றிரண்டு மாதங்களுக்கு ஒரு சண்டை, காலம் கழிப்பதற்குப் போதுமானது. கோவிலுக்கு மட்டும் தானாகவே ஒவ்வொருவரும் பாலைக் கொண்டு போவர். ''பாலில் நீர் சேர்க்கவில்லை'' என்று கண்ணன்முன் சத்தியம் செய்துவிட்டுச் சந்நிதி வாயிலில் வைத்திருக்கும் அண்டாவில் ஒவ்வொருவரும் பாலைக் கொட்ட வேண்டும். ஆனால் தாறுமாறுமாய் மாடு விலையையும் தீனி விலையையும் ஏற்றி விட்டுத் தனிப் பாலைக் கேட்பது ஆண்டவனுக்குத்தான் அழகா? ஆகவே சத்தியத்தையும் கைவிடாமல் லாபத்தையும் மறந்து போய்விடாமல் முதலிலேயே பால் பாத்திரத்தில் தண்ணீரை விட்டு அதன் மீது பாலைக் கறந்து விடுவார்கள். அவர்கள் சட்டத்தின் போக்கை அறிந்த நிபுணர்கள்!

அக்காலத்தில் சாதாரணமாகவே எல்லோரும் அவசரமின்றி அமைதியாய் நடந்து கொள்வது இயல்பு. பறப்பது பறவைகளே. கோனார்களுக்குள் பசுமாடு வாங்குவதும் விற்பதும் ஒரு சடங்கு. அதற்கு நிபந்தனைகளும் விதிகளும் உண்டு. தொன்று தொட்டு வந்த இவ்வழிகளைக் கோனார்கள் காப்பாற்றி வந்தனர். திடீரென்று விற்பதும் வாங்குவதும் சமுதாயம் ஒப்பாத புது வழி. நேராகப் போய்



பசு வேண்டுமென்றோ, வேண்டுமா வென்றோ கேட்பது தவறு. அதற்குத் தரகர்கள் உண்டு. அவர்கள் மூலமாகத் தான் வியாபாரம் செய்யவேண்டும்.

ராமக் கோனரிடம் ஒரு பசு விற்பனைக்கு இருக்கிறது என்று பராபரியாய்த் தரக னுக்குத் தெரிய வந்தது. பசு வாங்கும் பலரை அவன் அறிவான். கிருஷ்ணக் கோனுருக்குச் சில நாட்களாக ஒரு பசு தேவை. அவன் வசித்து வந்தது அடுத்த கிராமம். அதுவும் கோவில் எல்லைக்கு உட்பட்டதுவே. ஒருநாள் காலையில் தர கன் ராமக்கோனூர் வீட்டுப் பக்கம் போனான். காரியமின்றித் தரகன் திரிய மாட்டான் என்று ராமக்கோன் அறி வான். ராமக்கோன் வீட்டைத் தாண்டி ஏதோ வேலை இருப்பவன் போல் தரகன் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தான்.

ராமக்கோன்: என்ன அத்தி பூத்தாப் போலே இந்தப் பக்கம்?

தரகன்: திரியற ஜன்மங்க, திரியற ஜன்மம். ஆண்டவன் காலிலே சக்கரம் கட்டியிருக்கான்!

ராமக்கோன்: தாம்பூலம் போடுங்கோ.

தரகன்: போட்டாப் போவுது.

இது கச்சேரியில் சுருதி சேர்ப்பதைப் போல் வேலை ஆரம்பத்துக்கு அடிப்படை. சிறிது நேரம் இருவரும் வெற்றிலை புகை யிலை போட்டுக் கொண்டு யோசனையில் ஆழ்ந்திருப்பவர் போல் பாசாங்கு செய் தார்கள். பசு மாட்டைப் பற்றி யார் முத லில் பேசுவது என்பதுதான் ஆலோசனை. ஆத்திரப்படுவது குலத்துக்கே அழகில்லை என்பது அவர் கொள்கை.

ராமக்கோன்: இந்தமாதிரி மழையே பெய்யாட்டா, மேய்ச்சல் பூராவும் காஞ்சு போயிடுமே. எங்கே ஓட்டிக்கிட்டுப் போய் மாடுங்களை மேய்க்கறது?

தரகன்: மின்னே வந்துதே பஞ்சம், அப்போ நான் பையன். எங்க மாமன் மக புருஷன் அந்த வருஷம்தான் தவறிப் போனது. இப்போப்போலே இருக்கு. கோடி வீட்டுக் கோபாலக்கோன் மாடெல் லாம் செத்துப் போய் அவரு வடக்கே போய் ஏதோ ஆபீசிலே தண்ணீர்ப் பந்தல் வேலை ஒத்துக் கொண்டாராம். நம்ப பெரிய குளம் தண்ணியே வத்திடுத் துன்னு பாருங்களேன். மலைக்கு அப் பாலிருந்து திருட்டுப் பசங்க எல்லாம், நம்ப பசுங்களை வாங்கிட்டுப் போறாங்க.

ராமக்கோனும் இந்தப் பழைய நிகழ்ச் சிகள் ஞாபகம் வந்தவனாய்த் தலையை அசைத்து ஆமோதித்தான். என்ன செய் வது. எல்லாம் கடவுள் செயல் என்று இறுதியில் கையையும் விரித்துக் காட்டி னான். இப்படிச் சிலநேரம் கழிந்தது. தரகன் புறப்படும் வேளை வந்தது. 'வர்றேனுங்க' என்று சொல்லி விட்டு மேல் துண்டை உதறினான். "ஆமாம், பாத்தீங்களா, மறந்தே போயிட்டேன். போனவிசை பாத்தபோது மயிலை மாடு சினையா யிருந்ததே. கன்னு போட்டிடுச் சிங்களா?" என்று கேட்டான் தரகன்.

ராமக்கோன்: பசுவும் கன்னு போட் டிருக்கு. இரண்டாவது ஈத்துங்க. நிறை யக் கறக்குது. என்ன செய்வது? கோவி லிலே பணம் சரியாகக் கொடுக்கிறதில்லே. தீனி வெலெ விஷமா ஏறுது. எத்தனை பசுன்னு வெச்சுக் காப்பாத்தறது?

தரகன்: அட என்ன நீங்க இப்படி? நல்ல வெலக்கி வித்துப் பணத்தெ வட்டிக் குப் போட்டுட்டாப் போவுது. நல்ல காலம் வந்தா அசலும் வட்டியுமாச் சேத்து நல்ல பசுவா வாங்கிட்டாப் போவுது. நான் எங்கே போயிட்டேன்?

ராமக்கோன்: அது சரிதான் ஆனு...

தரகன்: உங்களுக்கென்ன கவலை? நேத்து கூடப் பக்கத்து கிராமத்திலெ இருந்து ஒரு பய வந்தான்.

ராமக்கோன்: ஏதோ பாருங்க. வெலை மட்டும் கவனிக்கணும்.

உடனே இருவரும் அருகில் உட்கார்ந்து கொண்டனர். ஒரு துணியை வைத்துத் தங்கள் கைகளை மூடிக்கொண்டனர். துணிக்குள் விலையை ஒருவர் கையில் ஒரு வர் எழுதிப் பேரம் பேசிக் கொண்டனர். இது மாடு விற்கும் பழைய முறை.

பக்கத்துக் கிராமத்துக் கிருஷ்ணக் கோனூர் தான் பசுவை வாங்கப் போவது என்று தெரிய வந்தது. விலை ரூ. 101-1-1 என்று வெகுநேரம் கையைக் கிள்ளிப் பேரம் பேசித் தீர்மானம் செய்துகொண் டார்கள். பசுவை ஓட்டிப் போகும் பொழுது ரூ. 75-1-1 கொடுக்க வேண்டு மென்றும், ஒரு மாதத்துக்குப் பிறகு பாக்கியைக் கொடுத்துவிட வேண்டு மென்றும் ஒப்பந்தம் பேசிக் கொண்ட னர். சொன்னவாறே சில நாட்களுக்

## சிரிக்காதே!

"உங்கள் குடும்பத்தில் யாருக்கேனும் மூளைக் கோளாறு இருந்திருக்கா?"

"என் மனைவி, தான்தான் இந்த வீட்டுக்கு எஜமானி என்று நினைத்துக் கொண்டிருந்தாள். அது மூளை சம்பந்தப் பட்டதுதானே?"

✲

வேலை செய்பவர்: வேலை செய்து, செய்து தூங்கும்போது இரவெல்லாம் வேலை செய்வது மாதிரி சொப்பனம் கண்டேன் சார்!

மானேஜர்: அப்பா! அதுக்கு 'ஓவர் டைம்' கேட்காதே! நமக்குக் கட்டாது!"

✲

"ஏண்டாப்பா நீ ஜெயிலில் இருக் கிறாய்!"

"ஒன்றுமில்லே, ஒருவரைக் கடன் கேட்டேன். [அதுக்கு ஜெயிலில் போட் டாங்க!"

"கடன் கேட்டதற்கா ஜெயிலில் போட்டாங்க? இருக்காது!"

"நான் அவனை கன்னு உதைச்சுக் கேட்டேனுங்க!"

◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊

கெல்லாம் கிருஷ்ணக் கோனான் முதலில் கொடுக்க வேண்டிய பணத்தைச் செலுத்திவிட்டுப் பசுவையும் கன்றையும் ஓட்டிக் கொண்டு போனான். ஆனால் ஒரு மாதம் ஆகியும் பாக்கிப் பணத்தைக் கொடுக்கவில்லை. நொண்டிச் சாக்கு பல கூறிப் பணம் கொடுக்காமல் ஏமாற்றி வந்தான். கொடுத்தானோ, கொடுக்கவில்லையோ, கொடுக்கவில்லை என்று ராமக்கோனான் புகார் செய்தான். தரகனைக் காணவே இல்லை. தன்னுடைய ஜாதி நாட்டாண்மைக்காரரிடம் போய்த் தன்னுடைய பிராதைச் சொன்னான்; ஆனால் கோனார்களுக்குள் ஒவ்வொரு கிராமத்துக்கும் வேறு நாட்டாண்மை. அடுத்த ஊரில் எங்கள் ஊர் நாட்டாண்மைக்காரருக்குச் செல்வாக்குக் கிடையாது. அவர்கள் கிருஷ்ணக்கோன் நடத்தையை எப்படியும் ஆமோதிப்பார்கள்.

இந்த நிலையில் ராமக்கோன் என்ன செய்வது என்று தவித்தான். இறுதியில் கண்ணனே கதி என்று கோவில் அர்ச்சகரிடம் சென்று நடந்ததைச் சொன்னான். அர்ச்சகர் ஆலோசனை செய்தார். அடுத்த நாள் அதிகாலையில் கிருஷ்ணக்கோனைக் கேட்டார். பூராவும் கொடுத்தாகிவிட்டது என்றான். மூன்று தலைமுறைகள் ராமனை வைதான். இதற்கு ஒரே வழி இரு சார்பாரையும் கோவிலுக்கு வரவழைத்துக் கடவுள் முன்னிலையிலாவது உண்மை பேசுகிறார்களா என்று பார்ப்பதென்று தீர்மானித்தார்.

கோனார் சண்டை கோவிலில் தீர்ப்பு என்று ஊரெங்கும் செய்தி பரவியது. மாலை சுமார் மூன்று மணிக்குக் கோவிலில் கோபுர வாசல் மண்டபத்தில் கூட்டம் கூடியது. அர்ச்சகர் அக்கிராசனம் வகித்து ஆரம்பத்தில் சில நல்ல வார்த்தைகளைச் சொன்னார். ''கடவுள் எங்கும் இருக்கிறார். அவரை ஏமாற்ற முடியாது. அவர் நாம் இரகசியத்தில் செய்யும் செயலுக்குச் சாட்சி. நம் மனத்தில் இருப்பதை உள்ளங்கை நெல்லிக்கனி எனக்காண்பார்'' என்று பலவாறு உண்மையின் பெருமையை எடுத்துக் காட்டினார்.

ராமக்கோனும் கிருஷ்ணக் கோனும் அர்ச்சகர் மூலமாகப் பேசிக்கொண்டனர்.

ரா: பங்குனி மாதம் அமாவாசைக்கு ஏழாவது நாள் என் மயிலைப் பசுவையும் கன்றையும் விலைக்கு வாங்கினானா, இல்லையா, கேளுங்க.

அர்ச்சகர் எதிர்ப்பக்கம் தலையைச் சாய்த்தார்.

**கிருஷ்ணக்கோன்:** யாரு இல்லேங்கிறாங்க? முழுப் பூசனிக்காயைச் சோத்திலே மறைக்கிறது எங்களுக்கு வழக்கமில்லே.

அர்ச்சகர் தலை ராமன்பக்கம் சாய்ந்தது.

**ராமக்கோன்:** எனக்கு எத்தனை ரூபாய் கொடுத்தானுங்க?

அர்ச்சகர் தலை எதிர்ப் பக்கம்.

**கிருஷ்ணக்கோன்:** என்ன கொடுப்பாங்க? ஒத்துண்ட வெலை கொடுத்தேன்.

ராமக்கோன் துண்டை உதறிக் கொண்டு எழுந்தான். ''இருபத்தி ஐந்து ரூபாய் பாக்கியா இல்லையா'' என்றான்.

கிருஷ்ணக்கோனும் துள்ளி எழுந்தான். ''பாக்கி, கீக்கி என்கிற பேச்செல்லாம் என்கிட்ட வேண்டாம்'' என்றான்.

ஜனங்களுக்குக் குதூகலம் அதிகரித்தது. போகிற ரீதியைப் பார்த்தால் அடிதடிகூட நடக்கலாம் என்ற ஆசை அவர்களுக்கு மிருந்தது. பார்த்தார் அர்ச்சகர். இது ஓயாத சண்டையாகத் திரும்போல் தோன்றியது. இரு சார்பாரும் சம்மதிக்கும்படி ஒரு வழி சொன்னார். கோவிலுக்குள்ளிருந்து ஒரு சிறிய செம்பில் கங்கா ஜலம் எடுத்து வந்தார். '' கங்காமிருதத்தைக் கையில் வைத்துக்கொண்டு பணம் கொடுக்க வேண்டுமென்று ராமன் சத்தியம் செய்யட்டும்'' என்றார். வந்திருந்தவர்கள் இந்தத் தீர்ப்பை ஆரவாரத்துடன் ஒத்துக் கொண்டனர். ராமனும் கிருஷ்ணனும் ஒப்புக்கொள்ள வேண்டி வந்தது.

அர்ச்சகர் கங்கா ஸ்தாலியைத் திறந்தார். ஒரு உத்தரணி ஜலம் ராமக்கோன் கையில் விட்டார். ''என்ன கொடுக்க வேண்டும், சத்தியம் செய்'' என்றார்.

''எனக்குக் கிருஷ்ணன் இருபத்துஐந்து ரூபாய் கொடுக்க வேண்டும்'' என்று சொல்லி ஜலத்தை சன்னதியில் விட்டான் ராமன். கூட்டம் கிருஷ்ணனை நோக்கியது. ஒரு வினாடி திகைத்தவன்போல் வீற்றிருந்தான் கிருஷ்ணன். பெருமூச்செறிந்து தனது மடியிலிருந்து இருபத்தைந்து ரூபாய்கள் எடுத்து அர்ச்சகரிடம் கொடுத்தான். கூட்டத்துக்கு மன வருத்தம். பாண வேடிக்கை பார்க்கப்போன இடத்தில் மழை பெய்ததைப்போல் சும்மா வீடு திரும்ப வேண்டுமென்று தோன்றியது.

அப்பொழுது சரேலென்று கிருஷ்ணன் அர்ச்சகரைக் கூப்பிட்டான். ''சாமி! அந்தக் கங்காஜலத்தை என் கையில் கொஞ்சம் விடுவது'' என்றான். அர்ச்சகர் அவ்வாறே செய்தார். ''இந்த ராமக்கோன் எனக்கு ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும்'' என்று கூறி ஜலத்தைச் சன்னதியில் விட்டான். கூட்டத்தில் கலகலப்பு ஏற்பட்டது. ''இதென்னடா புதுக் கடன்?'' என்றார் அர்ச்சகர். ''அவன் கெடக்கானுங்க, எனக்குக் கொஞ்சம் ஜலம் கொடுங்க'' என்றான் ராமக்கோன். அர்ச்சகர் அவன் கையில் கங்காஜலத்தை முன்போல் விட்டார்!

''இந்தக் கிருஷ்ணக்கோன் எனக்கு நூறு ரூபாய் பாக்கி'' என்று ஜலத்தைச் சன்னதியில் விட்டான் ராமக்கோன். கூட்டம் சிரிக்க ஆரம்பித்தது. அர்ச்சகருக்குக் கோபம் வந்தது. படிப்படியாக ஒருவருக்கொருவர் கொடுக்க வேண்டிய பாக்கி ஆயிரத்தை எட்டி விட்டது. செம்பில் கங்காஜலம் குறையக் குறையக் கடனும் ஏறிக்கொண்டே போயிற்று.

இருவரும் ஏழு தலைமுறைக்கு நரகத்தில் வாழ்வார்கள் என்றார் அர்ச்சகர். குஸ்திச் சண்டைக்குப் பிறகு கலையும் கூட்டத்தைப்போல் கூட்டம் கலைந்தது.

## மலிவான விலையில் அருமையான நூல்கள்

1 கம்பராமாயணம் — புத்தகம் 1

பால - அயோத்தியா காண்டங்கள்

2 கம்பராமாயணம் — புத்தகம் 2

ஆரணிய - கிஷ்கிந்தா காண்டங்கள்

மூலம் முழுதும்—அரும்பத உரை—விளக்க உரை — கதைச் சுருக்கம் வசனத்தில் ஆகியன. வெள்ளைக் காகிதத்தில் ஒவ்வொன்றும் 400 பக்கங்களுக்குமேல்

தனித்தனி ரூ. 2 தபால் செலவு ரூ. 0-87

3 திருக்குறள் — பரிமேலழகர் உரை

மூலம் — பரிமேலழகர் உரை — இரண்டின் கடின சொற்களுக்கு அரும்பொருள் உரை விளக்கத்துடன். 460 பக்கங்கள்

ரூ. 2-00 தபால் செலவு ரூ. 0-87

4 காய்கறித் தோட்டம்

— மு. அருணாசலம்

விவசாயிகள், வீட்டுத் தோட்டம் பயிரிடுவோருக்கு அரிய நூல். சென்னை அரசாங்கப் பரிசு பெற்றது. 300 பக்கங்கள். விளக்கப் படங்களுடன்

ரூ. 1-25 தபால் செலவு ரூ. 0-75

5 அரபுக் கதைகள் - 2

— அ. லெ. நடராஜன்

6 அரபுக் கதைகள் - 3 ,,

7 அரபுக் கதைகள் - 4 ,,

உலகப்புகழ்பெற்ற 1001 இரவுகள் என்ற அரபுக் கதைகளின் தமிழாக்கம். 400 பக்கங்கள். படங்களுடன்

தனித்தனி ரூ. 1-50 தபால் செலவு ரூ. 0-87

•

விவரமான விலைப் பட்டியலுக்கு எழுதுங்கள்

**சக்தி காரியாலயம்**

சென்னை - 6

## ஹெடன்ஸா




## மூல நோய்க்கு

எங்கும் கிடைக்கும்

OCZ-12B-TM

பர்மாவுக்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

**சுந்தரம் அண்டு கம்பெனி**

358, மொகல் தெரு, ரங்கூன்

உ




**திடீர் பாயசம்**

சூடான பாலில் கலந்தவுடன் திடீர் பாயசம்

**தக்காளி சூப்**

வெந்நீர் அல்லது சூடான பருப்பு ஜலத்தில் கலந்தவுடன் திடீர் தக்காளி சூப்

**மிளகு ரசம்**

பேஸ்டு & பவுடர்

கொதிக்கும் தண்ணீரில் கலந்தால் போதும்

எங்கும் கிடைக்கும்

ஸ்டாக்கிஸ்ட்டுகள் தேவை

இப்பொழுது கீழ்க்கண்ட இடத்திலும் கிடைக்கும்

**இந்தியன் இண்டஸ்ட்ரியல் கோ., லிட்.**

ஹைகோர்ட்டுக்கு எதிரில் - - சென்னை-1

# தனிப்பெருந்தலைவன்

**பாத்திரங்கள் :**

பெர்னாந்தோ—காஸ்டில் தேசத்து அரசன்.
உராகா—அரசகுமாரி.
டியேகோ—ரோடரிகோவின் தந்தை (பிரபு)
கோமேஸ—ஷிமேனாவின் தந்தை. (பிரபு)
ரோடரிகோ—கதாநாயகன், ஷிமேனாவின் காதலன். (பிரபு)
சாஞ்சோ—ஷிமேனாமேல் காதல் கொண்டவன். (பிரபு)
அரியாசோ. அலான்சோ—பிரபுக்கள்.
ஷிமேனா—கதாநாயகி, கோமேஸின் புத்திரி.
லேயனோரா—அரசகுமாரியின் தாதி.
எல்விரா—ஷிமேனாவின் தாதி.

**(காட்சி 8 தொடர்ச்சி)**

அரசர் பெர்னாந்தோ: எளிதில் முடிவு கட்டக் கூடியதல்ல இந்த விஷயம். நான் நன்றாய் யோசித்த பிறகு, முழு சபையிலேயே ஆராய்வதற்குரியது. சாஞ்சோ! ஷிமேனாவை அவள் வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போய்விடுங்கள். டியேகோ இந்த அரண்மனையின் எல்லையைத் தாண்டிப் போகக் கூடாதென்று தன் ஆணையின் மேலேயே நிற்கட்டும். அவர் புத்திரனைத் தேடிப் பிடித்து இங்கு கொண்டு வர ஏற்பாடாகட்டும். அனைவருக்கும் எது நீதியோ அதைக் கட்டாயம் வழங்குவேன்.

ஷிமேனா: கொலைகாரன் இறக்கவேண்டும் என்பதே நீதி, பிரபோ!

அரசர் பெர்னாந்தோ: சாந்தப்படுத்திக் கொள், குழந்தாய்; உன் துயரத்துக்கு ஆறுதல் செய்துகொள்.

ஷிமேனா: என்னைச் சாந்தப்படுத்திக் கொள்ளச் சொல்வது என் துயரத்தை இன்னும் பெருக்கியதாகவல்லவா இருக்கிறது!

## அங்கம் 3

### காட்சி 1

*(ரோடரிகோ ஷிமேனாவின் தோழியின் முன்னால் பிரவேசிக்கிறான்.)*

எல்: ரோடரிகோ! அடாது செய்துவிட்டு இங்கும் ஏன் வருகிறீர்கள்? பாபீ!

ரோ: விதி அபாக்கியமாய் இட்ட மார்க்கத்தைத் துயரத்துடன் தொடர்வதற்குத்தான்.

எல்: துக்கத்தில் மூழ்கியிருக்கும் இவ்விடத்துக்கு வருவதற்கு உங்களுக்கு என்ன துணிச்சல்? என்ன புது அகம்பாவம்! கோமேஸைக் கொன்ற பின் அவர் ஆவியையும் எதிர்த்துக் கொல்ல வருகிறீர்களா?

ரோ: அவர் உயிர் தரித்திருப்பது எனக்கு அவமானம்; என் கௌரவத்துக்காக முயற்சி எடுக்க வேண்டி வந்தது.

எல்: குற்றத்தை மறைக்க இறந்தவர் வீட்டிலேயே சரணம் புகுவதா? எந்தக் கொலைகாரனும் அப்படிச் செய்ததாய்க் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

ரோ: என் நீதிபதியிடம் என்னை ஒப்பித்துக் கொள்ளவே வந்தேன். ஆச்சரியத்துடன் அப்படிப் பார்க்க வேண்டாம். மரணத்தைக் கொடுத்தபின் மரணத்தையே தேடுகிறேன். என் காதலே என் நீதிபதி, ஷிமேனாவே என் நீதிபதி. அவள் வெறுப்புக்குப் பாத்திரனானதும் மரணத்துக்கும் பாத்திரனானேன். அவள் வாயால் அதை விதிப்பதையும் அவள் கையாலேயே அதை இயற்றுவதையும் வெகுமதியாய் ஏற்றுக் கொள்ளுவேன்.

எல்: அவள் கண்ணில் படாதேயுங்கள். அவள் கோபத்துக்கு ஆளாகாதேயுங்கள். அவள் ஆத்திரம் தணியாதிருக்கும் வரையில் நீங்கள் அவள் முன் தோன்றாமலிருப்பதே நலம். இங்கிருந்து போய் விடுங்கள். இங்கே நிற்காதீர்கள்.

ரோ: அப்படியல்ல; என்னைத் தண்டிப்பதில் அவளுக்கு எவ்வளவு கோபம் ஏற்பட்டாலும் அது தகும். என்னைப் பார்த்துக் கோபம் இரட்டித்தால்தான் என் மரணம் ஏற்படும் என்றால் அதுவே சரி.

எல்: கண்ணீரில் குளித்தவாறே ஷிமேனா அரண்மனைக்குப் போனாள். நல்ல துணையுடனே திரும்புவாள். உங்களுக்கு நல்ல வார்த்தை சொல்லுகிறேன், ரோடரிகோ! உடனே ஓடிப் போய் விடுங்கள். நீங்கள் போனால்தான் என் கவலை தீரும். இங்கு உங்களைப் பார்த்தால் மக்கள் என்ன சொல்லுவார்கள்? தந்தையைக் கொன்றவனை வீட்டுக்கு வர அனுமதித்தாள் என்றும் அவதூறு வரும். அவள் துயரம் இன்னும் பெருகும். அவள் வரும் சமயம், அதோ வந்து கொண்டேயிருக்கிறாள்...ரோடரிகோ! அவள் மானத்தைக் காப்பாற்றவாவது நீங்கள் ஒளிந்துகொண்டு விடுங்கள்.

### காட்சி 2

*[சாஞ்சோ, ஷிமேனா, எல்விரா]*

சாஞ்: ஆம், அம்மணி! உங்களுக்கு இரத்த பலி வேண்டவே வேண்டும். உங்கள் கோபம் நியாயமானது. உங்கள் சோகம் உண்மையானது; சமாதான வார்த்தைகளோ, ஆறுதல் வார்த்தைகளோ சொல்ல நான் யத்தனிக்கவில்லை. ஆனால் என் சேவையை ஏற்றுக் கொள்வீர்களானால், இதோ என் கத்தியிருக்கிறது, குற்றவாளியைப் பழி வாங்க. நீங்கள் பழி வாங்க என் காதலைச் சாதனமாய் வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் ஆணை என் தோளுக்குப் பலம் தரும்.



ஷி: ஐயோ! எவ்வளவு துர்ப்பாக்கியசாலி நான்!

சாஞ்: அம்மணீ! மன்றாடுகிறேன். என் சேவையை அங்கீகரியுங்கள்.

ஷி: நீதி வழங்குகிறேன் என்று சொன்ன அரசருடைய கோபத்துக்கு இடமாகுமே அது.

சாஞ்: அரச நீதி மந்தமானது என்பது உங்களுக்குத் தெரியாததன்று. அதன் மெத்தனத்தில் அடிக்கடி குற்றமே மறந்து போவதுண்டு. மத்தியிலே கண்ணீர் பெருகியவாறே நிற்கும் உங்கள் ஆணையை மேற்கொண்டு நான் ஆயுதம் பிரயோகித்தால், மார்க்கமும் நிச்சயம், தண்டனையும் அவனுக்குக் கிடைக்கும்.

ஷி: அதைக் கடைசி ஏற்பாடாக வைத்துக் கொள்வோம். அதற்கு அவசியமிருந்தால், என்மேல் அநுதாபத்தை யொட்டிய உங்கள் தீர்மானமும் உறைத்திருந்தால், அப்பொழுது எனக்காகப் பழி வாங்க உங்களுக்குச் சுதந்திரம் உண்டு.

சாஞ்: அதுவே எனக்கும் பெரும் பாக்கியமாகும்; அந்த ஆசையுடனேயே இப்பொழுது விடைபெறுகிறேன்.

## காட்சி 3.

*[ஷிமேனு, எல்வீரா]*

ஷி: தடையின்றி என் துக்கத்துக்கு வழி விட்டு மனம் திறந்து உனக்குத் தெரிவிப்பதற்கு இப்பொழுதுதான் எனக்கு நேரம் வாய்த்தது. என் தந்தை போய் விட்டார், எல்வீரா; அவரை மாய்த்தது ரோடரிகோ யுத்தத்தில் உருவின முதற் கத்தி. என் கண்ணீர்ப் பிரவாகத்துக்கு ஓர் முடிவைக் காணவில்லை. என் உயிரில் பாதியான ஒருவன் மற்றொரு பாதியைச் சமாதியில் புகுத்தி விட்டான். அதன் விபரீதம், விட்டுப் போனவருக்காக எஞ்சியிருப்பவன்மேல் பழி வாங்கும் கடமையை ஏற்படுத்தி விட்டது.

எல்: அமைதி ஏற்படுத்திக் கொள்ளுங்கள், அம்மணீ!

ஷி: இவ்வளவு பெருந் துக்கத்தில் அமைதியைப் பற்றி நீ பேசுவது எவ்வளவு அசம்பாவிதம்? துக்கத்துக்குக் காரணமானவனை வெறுக்காவிட்டால் அந்தத் துக்கம் எப்படி அடங்கும்? ஆனால் குற்றவாளி மேல் அன்பு நிற்க, குற்றத்துக்குப் பரிகாரம் தேடுவதிலும் எல்லையில்லாத துன்பமல்லவா?

எல்: எவரால் தந்தையைப் பழி கொடுத்தீர்களோ, அவர் மேலா இன்னும் உங்களுக்கு அன்பு?

ஷி : அன்பு என்று சொன்னால் போதாது; அவனையே மனக் கோயிலில் வழிபடுகிறேன். ஆனால் ஆசையும் கோபமும எதிரொலியாய் நிற்கின்றன. பகைவனுக்குள்ளே பார்த்தால் காதலன்! ரோடரிகோ மேல் எவ்வளவு கோபம் இருந்தாலும் என் இதயத்தில் என் தந்தையுடன் அவன் போராடிக் கொண்டே யிருக்கிறான். தாக்குதல், பின்வாங்குதல், ஒரு சமயம் பலம், ஒரு சமயம் பலவீனம், ஒரு சமயம் வெற்றி— இவ்வாறு கோபத்துக்கும் காதலுக்கும் நடக்கும் கடின யுத்தத்தில் என் மனத்தைச் சிதற அடிக்கிறான் — ஆனால் என் இதயத்தில் விலைப்படவில்லை. காதலுக்கு எவ்வளவு சக்தி யிருந்தாலும் அதை என் கடமைக்குக் குறுக்கே நிற்க விடப் போவதில்லை. என் கௌரவம் காட்டும் மார்க்கத்திலேயே இடறி விழுந்து விடாமல் விரைவேன். ரோடரிகோ மிகவும் அன்புக்குரியவன், அவனுடைய அன்பு என்னை வசிகரிக்கவே செய்கிறது; ஆனால் நான் யார் என்பதை மறக்கவில்லை; இறந்து போன என் தந்தையையும் மறக்கவில்லை.

எல் : அப்படியானால் ரோடரிகோ மேல் நடவடிக்கை எடுப்பதாய்த்தான் யோசனை செய்கிறீர்கள் போலிருக்கிறது.

ஷி : ஆ! அதுவும் கொடிய யோசனை ஆயிற்றே! அப்படி நடவடிக்கை எடுப்பது எவ்வளவு கடூரமான நிர்ப்பந்தம்! அவன் தலையை வாங்க வேண்டும் என்று கேட்கிறேன். ஆனால் அப்படி நடந்துவிடுமோ என்று பயப்படுகிறேன். அவன் இறந்தால் நானும் இறப்பது நிச்சயம்— ஆனாலும் தண்டனை செலுத்த வேண்டும் என்றே விருப்பம்.

எல் : இவ்வளவு ஆபத்தான யோசனை எதற்கு அம்மணி; இப்படி ஒரு சாஸனத்தை ஏற்படுத்திக் கொள்ளாதீர்கள்.

ஷி : என்ன சொல்கிறாய்! என்னை அணைந்தாற் போலவே இறந்த தந்தையின் இரத்தம் பழி வாங்கென்று கதறி நிற்க நான் அதைக் காதில் வாங்காதிருப்பதா! ஏதோ சில இன்ப நினைவுகளுக்காக என் கடமை வியர்த்தமாகக் கண்ணீர் சிறிது வடித்ததோடு தீர்ந்தது என்று நினைப்பதா?

எல் : நான் சொல்வதை நம்புங்கள், அம்மணி! உங்களுக்கு இவ்வளவு அருமையாயிருக்கும் காதலர் விஷயத்தில் கோப ஆர்வத்தைத் தணித்தால், அதற்காக ஒருவரும் குற்றம் சொல்ல மாட்டார்கள். நீங்கள் ஏற்கெனவே செய்தது போதும்; அரசரைப் பார்த்தாகி விட்டது; அதற்கு மேல் வற்புறுத்த வேண்டாம்.

ஷி : நீ சொல்வது சற்றும் அடுக்காது என் கீர்த்தியேயல்லவா இதைப் பொறுத்து நிற்கிறது. நான் பழி வாங்குவது தப்பாது. அன்புணர்ச்சியில் ஒரு விதமான சமாதானத்தைத் தேடலாம்! ஆனால் அது கண்ணியமுள்ளவர்களுக்கு வெட்ககரமான சாக்குப் போக்கேயாகும்.

எல் : ஆனால் ரோடரிகோ மேல் உங்களுக்குக் காதல் இருந்து கொண்டே யிருக்கிறதே, அவர் எப்படி மனமொவ்வாதவராவர்?

ஷி : அதுவும் உண்மைதான்.

எல் : பின் நீங்கள் என்னதான் செய்வதாக யோசனை?

ஷி : என் கீர்த்தியை நிலைநாட்டி என் மனச் சங்கடத்தைத் தீர்த்துக் கொள்வேன். அவன் மேல் நடவடிக்கையைத் தொடர்வேன்; அவனை இழப்பேன்; அதன்பின் நானும் உயிர் துறப்பேன்.

*(திடீரென்று ரோடரிகோவே அந்த இடத்தில் பிரவேசிக்கிறான்)*

## காட்சி 4

*[ரோடரிகோ, ஷிமேனு, எல்விரா]*

ரோ : நடவடிக்கையைத் தொடரவேண்டிய சிரமமே உங்களுக்கு வேண்டாம். இதோ என் உயிரை வாங்கும் கௌரவத்தைத் தடையின்றி இப்போதே ஏற்றுக் கொள்ளுங்கள்.

ஷி : எல்விரா! எங்கிருக்கிறோம் நாம்? என்ன பார்க்கிறேன் நான்? என்னுடைய வீட்டில் ரோடரிகோவா! என் முன்னால் ரோடரிகோவா!

ரோ : என் இரத்தத்தைச் சிந்துவதில் யோசனை வேண்டாம்; நான் மறுத்து நிற்கவில்லை. நான் ஒழிந்து நீங்கள் பழி தீர்த்துக் கொண்டதின் ருசியை அனுபவியுங்கள்.

ஷி : ஐயோ!

ரோ : நான் சொல்வதைக் கேளு.

ஷி : என் உயிர் நீங்குகிறதே!

ரோ : இன்னும் ஒரு நிமிஷம் எனக்குப் பேச அனுமதி கொடு.

ஷி : போ, எனக்கு இறப்பதற்கே அவகாசம் வேண்டும். பேசுவதற்கல்ல.

ரோ : நாலே வார்த்தை; அதன் பின் இந்தக் கத்தியாலேயே எனக்குப் பதில் கொடு.

*[கத்தியை உறையிலிருந்து எடுக்கிறான்]*

ஷி : என் தந்தையின் ரத்தம் தோய்ந்திருக்கும் அந்தக் கத்தி!

ரோ : என் ஷிமேனு...

ஷி : அருவருப்பான அந்த ஆயுதத்தை விலக்கி வை; என் கண்முன் அது உன் குற்றத்தையும் உன் வாழ்க்கையையும் நிந்தித்ததாய் நிற்கிறது.

ரோ : இல்லை ; அது உன் வெறுப்பை வளர்த்து, உன் கோபத்தைப் பெருக்கி என் தண்டனையைத் துரிதப்படுத்தக் காரணமா யிருக்கட்டும்.

ஷி : அதில் படிந்திருப்பது என் இரத்த மாயிற்றே.

ரோ : அதை என் இரத்தத்துக்குள் பாய்ச்சி உன்னுடைய இரத்தத்தின் சுவட்டை மறை.

ஷி : ஆ! என்ன கொடுமையான சாதனம்! தந்தையைத் தன் முனையினால் கொன்றவனே என்னைத் தன் தோற்றத்தினாலே கொல்லுகிறதே. மறைத்து வை அதை. எனக்குப் பார்க்கச் சகிக்கவில்லை.

ரோ : சரி, உன் விருப்பப்படியே. *(கத்தியை உறைக்குள் போடுகிறான்.)* ஆனால் உன் கையால் என் பாழும் உயிரை மாய்த்துக் கொள்ளும் யோசனையை விட்டு விட்டேன் என்று நினைக்க வேண்டாம். உன் மேல் இருக்கும் அன்பினால் நான் செய்த நற்காரியத்துக்குப் போய்ப் பச்சாத்தாபம் காட்டுவேன் என்று எண்ண வேண்டாம். உன் தந்தையின் படபடப்பால் என் தந்தைக்கும் எனக்கும் பெருத்த அவமானம் ஏற்பட்டது. கண்ணியமானவரைக் கன்னத்தில் அறைவது எவ்வளவு பெருங் குற்றமென்பது உனக்குத் தெரியாததல்ல. குற்றம் என்னையும் பாதித்ததால் இயற்றியவரைத் தேடினேன், பார்த்தேன், பழிவாங்கி என் தந்தையின் கௌரவத்தையும் என் கௌரவத்தையும் மீட்டினேன். அது போன்ற சந்தர்ப்பம் மறுபடியும் வந்தால் அப்படியேதான் மறுபடியும் செய்வேன். எனக்கும் என் தந்தைக்கும் எதிராக உன் மேல் உள்ள அன்பு போராடாமல் இல்லை. அடைந்த அவமானம் எவ்வளவு பெரிதா யிருந்தும், உனக்குத் துயரத்தைக் கொடுக்கும்படி நான் பழி வாங்குவதா, அல்லது அவமானத்தைத் தரித்தே நிற்பதா என்ற ஆராய்ச்சியில் இறங்கினேன் என்றால் அந்த அன்பின் சக்தியைப் பார்த்துக் கொள்ளேன். நானும் அவசியத்துக்கு அதிகம் படபடக்கிறேனா, பலவந்தத்தை நினைக்கிறேனா என்ற அனுமானம் எழுந்தது. உன் சௌந்தரியமே தன் பக்கம் என் தீர்மானத்தை இழுத்திருக்கலாம் ; ஆனால் உன் வசீகரக் கணையை யெதிர்த்து மற்றொரு யோசனை உடனே எழுந்தது. அதாவது, கௌரவத்தை இழந்தவன் உனக்குத் தகுதியற்றவன் ; உன் இருதயத்தில் எனக்கு இடம் வைத்திருந்தாலும், நான் பெருந்தன்மையாய் இருக்கும்போது என்னைக் காதலித்த நீ, நான் அவமானத்தில் நிலை நின்றால் என்னை வெறுக்கவே செய்வாய்; என் காதல் சொல்லும் வழியைக் கைப்பற்றினால் என்னை உனக்குத் தகுதியற்றவனாக்கி நீ என்னை உன் மனத்தால் வரித்ததும் கேவலம் என்றாக்கும். உனக்கு இழைத்த குற்றம் என் அவமானத்தைத் துடைப்பதற்கு மட்டும் அல்ல, உனக்கு நான் தகுதியுள்ளவன் என்பதை நிரூபிப்பதற்கும் கூடத்தான். ஆனால் கௌரவத்தின் கடனைத் தீர்த்தேன், தந்தையின் கடனைத் தீர்த்தேன் என்ற ஏற்பாடு, இப்பொழுது உன்னைத் திருப்தி செய்ய வேண்டும். என் உயிரை உன்னிடம் சமர்ப்பிக்கவே இங்கு வந்திருக்கிறேன். முன் கடமையைச் செய்த பின் இப்பொழுது செய்ய வேண்டிய இரண்டாவது கடமை அதுவே. தந்தையின் மரணத்தை நினைத்து நீ ஆயுதபாணியாய் நின்றிருக்கிறாய். உன் கோபத்துக்குப் பாத்திரமான நான் தப்பக்கூடாது என்பதே என் விருப்பம். உன் தந்தையின் இரத்தத்தைப் பெருக்கியதைத் தன் கீர்த்தியாக மதிக்கும் என்னை அந்த இரத்தத்துக்காகத் தீரத்துடன் பலி வாங்கு.

ஷி : ஆ! ரோடரிகோ! உன் எதிரியாய் விட்டாலும் நீ அவமானத்தைத் தீர்த்துக் கொண்டதற்கு உன்னைக் குற்றம் சொல்ல மாட்டேன் என்பது உண்மைதான். என் துக்கம் எப்படி வெடித்து வந்தாலும், என் கஷ்டத்துக்காகக் கண்ணீர் பெருக்குகிறேனே யொழிய உன்னைப் பழிக்கவில்லை. அடைந்த பெரும் அவமானத்தினின்றும் கௌரவத்தை மீட்கப் பெருந்தன்மையும் தீரமும் தூண்டிய ஆர்வம் பொங்குவது நியாயமே. கண்ணியமுள்ளவன் செய்ய வேண்டிய கடமையையே செய்தாய் நீ. ஆனால் அப்படிச் செய்ததில் என் கடமையையும் நீ கற்பித்தாய். உன் பராக்கிரமம் கொடுத்த வெற்றியே எனக்குப் பாடமாயிற்று : அது உன் தந்தையைப் பழி வாங்கிற்று, உன் கீர்த்தியைத் தாங்கிற்று ; இப்பொழுது அது போலவே தான் என் கவனம் — ஆ! கஷ்டம் — என் தந்தைக்குப் பழி வாங்க, என் கீர்த்தியைத் தாங்க. ஆனால், ஐயோ! அதில் சம்பந்தப்பட்டவன் நீ என்று நினைக்கும் போது என்ன நிராசை! என் தந்தை இயற்கையாய் இறந்திருந்தால் அதற்கு ஒரே ஆறுதல் உன்னைப் பார்த்ததனாலல்லவா ஏற்பட்டிருக்கும். உன் பிரியமான கையினால் என் கண்ணீரைத் துடைக்கும் அருமையையும் பெற்றிருப்பேன். ஆனால் அவர் தவறிப் போன பிறகு இப்பொழுது நீயும் தவறிப் போயாகவே வேண்டும். என் கௌரவத்துக்காக என் காதலை அடக்கியாக வேண்டும். இந்தப் பயங்கரமான கடமையின் முயற்சிக்கு என்னை நிர்ப்பந்திக்கிறது. உன் மேல் இருக்கும் அன்பினால் உன்னைத் தண்டிப்பதில் பின்வாங்குவேன் என்று எண்ண வேண்டாம். அந்த அன்பு உனக்காக எவ்வளவு மன்றாடினாலும், என் கண்ணியம் உன்னுடையதற்குச் சமானமாயிருக்க வேண்டும். எனக்குக் குற்றம் இயற்றி எனக்குத் தகுதியுள்ளவன் என்று நீ காட்டிக் கொண்டாய் ; உனக்கு மரணமியற்றி உனக்குத் தகுதியானவள் நான் என்று காட்டிக் கொள்ள வேண்டும்.

ரோ : உன் கௌரவம் இடும் அந்த உத்தரவை அனுசரிப்பதில் காலதாமதம் செய்யாதே. இரையாக வேண்டியது

என் தலை; அதை நானே உனக்குச் சமர்ப்பிக்கிறேன். சிறந்த நோக்கத்துக்குத் தகுந்த பலியா யெடுத்துக் கொள். உத்தரவும் சரி, நிறைவேற்றலும் சரி, என் மனத்துக்கு உசிதமாகவே யிருக்கும். உத்தியோக முறையாய் நீதி தேடுவது காலவிளம்பமாகும்; உன் கீர்த்திக்குத் தாமதம் என் சங்கடத்துக்கு நீடிப்பு. நீ இயற்றும் அழகிய மரணமானால் சந்தோஷத்துடன் இறப்பேன்.

**ஷி:** நான் விவகாரத்தில் வாதியேயன்றித் தலைவாங்கும் வேலையாளல்ல. நீ தலையைக் கொடுத்தால் அதை நான் வாங்குவதற்கு என்ன உரிமை? நான் உன்னைத் தாக்கினால், நீ தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும்; உன்னிடமிருந்தல்ல, மற்றவரிடமிருந்தே நான் உன் தலையைப் பெற வேண்டும். உன் தண்டனையைத் தொடருவது என் கடமை, உன்னை நானே தண்டிப்பதல்ல.

**ரோ:** அன்பு உன்னை வழி விலகச் செய்யக் கூடாது; உன் பெருந்தன்மை என்னுடையதற்குச் சமானமா யிருக்க வேண்டும்; நான் சொல்வதை நம்பு, ஷிமேனா, தந்தைக்குப் பழி வாங்க மற்றவர் உதவியை நீ தேடினால் அது சமானமாகாது; என் கையாலேயே என் தந்தைக்குப் பழி வாங்கினேன். உன் கையாலேயே உன் தந்தைக்குப் பழி வாங்க வேண்டும் நீ.

**ஷி:** எதற்காக இந்தப் பிடிவாதம்? உதவியின்றி நீ தனியாகப் பழி வாங்கினாய், எதற்காக எனக்கு உன் உதவியைத் தருகிறாய்? உன் கொள்கை சரிதான்; ஆனால் அதன்படி என் நிர்வாகத்தில் நீ பங்கெடுத்துக் கொள்ள இடமில்லை. அதை நடத்த எனக்குப் போதுமான தைரியம் உண்டு. என் தந்தைக்கோ, என் கௌரவத்துக்கோ, உன் அன்பினாலோ உன் நிராசையினாலோ ஆக வேண்டியது ஒன்றுமில்லை.

**ரோ:** என்ன கண்டிப்பான கௌரவம்! என் கோரிக்கையை நிறைவேற்ற மாட்டாயா ஷிமேனா? இறந்த தந்தைக்காக ஆத்திரம் கொள். அல்லது நம் அன்பை நினைத்து இரக்கம் கொள். இந்த அபாக்கியமான உன் காதலனுக்கு உன் வெறுப்பைத் தாங்கி உயிர்தரிப்பதை விட உன் கையால் இறப்பது எவ்வளவோ ஆறுதல்.

**ஷி:** ரோடரிகோ! நான் வெறுக்கவில்லையே உன்னை.

**ரோ:** வெறுப்பது உன் கடமை.

**ஷி:** என்னால் வெறுக்க முடியவில்லையே!

**ரோ:** அபவாதத்துக்கும் பழி மொழிகளுக்கும் அஞ்ச வேண்டாமா? நான் செய்த குற்றத்துக்குப் பின்னும் உன் காதல் நிலைநிற்கிறது என்று தெரிந்தால் பொய்யும் அசூயையும் நிறைந்த உலகம் என்ன சொல்லும்! ஊர்வாய் திறவாத வாறு, மேல் விவாதமின்றி, எனக்கு மரணத்தைக் கொடு, உன் கீர்த்தியைக் காப்பாற்றிக் கொள்.

**ஷி:** உன்னை உயிருடன் விட்டு வைப்பது என் கீர்த்திக்கு இன்னும் பிரகாசமாகும். நீ எனக்குப் பெரியவனாயிருந்தும் உன்மேல் நியாயம் தொடருகிறேன் என்பதையே பார்த்து, என்னை வெறுப்பவர்கள் கூடப் புகழுரை வானளாவக் கூற வேண்டுமென்பதே என் விருப்பம். போதும், ரோடரிகோ! அன்புக்கு இன்னும் தகுந்தவனான உன்னை இழந்தேயாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் எவ்வளவு கஷ்டம் என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறது, நீ என்முன் நிற்பது. ஆகையால் போய் விடு; இரவின் மறைவிலேயே விரைந்து போய் விடு. உன்னை இங்கு வர அனுமதித்தேன் என்பதே அபவாதத்துக்கு இடமாகும்; என் கற்புக்கே பழிச்சொல் வர இடம் கொடுக்காதே.

**ரோ:** மரணத்தையே இன்னும் வேண்டி நிற்கிறேன்.

**ஷி:** நீ போய்விடு என்று சொன்னேனே.

**ரோ:** இறுதியாகக் கேட்கிறேன். !பின் என்னதான் உன் முடிவு?

**ஷி:** அன்பு உடன் சென்று என் கோபத்தை எவ்வளவுதான் கலைத்தாலும் என் தந்தைக்குப் பழி வாங்க இயன்ற முயற்சியெல்லாம் எடுக்கவே செய்வேன்; ஆனால் அந்தக் குரூரமான கடமையில் எவ்வளவு கண்டிப்பாயிருந்தாலும் என் ஒரே விருப்பம் இந்த முயற்சியெல்லாம் வீணாக வேண்டும் என்பதுதான்.

**ரோ:** காதலின் விசித்திரமே!

**ஷி:** துயரத்தின் சிகரமே!

**ரோ:** நம் தந்தைகளால் நமக்கு எவ்வளவு துன்பம்? எவ்வளவு சோகம்?

**ஷி:** ரோடரிகோ, இப்படியெல்லாம் நடக்கும் என்று யார் நம்பியிருக்கக்கூடும்?

**ரோ:** யார் சொல்லியிருக்கக் கூடும்?

**ஷி:** நமது ஆசையின் நிறைவேற்றம் இவ்வளவு சமீபித்து இப்படி நழுவி விடுவதுமுண்டா?

**ரோ:** துறைமுகத்தை அணுகும் தறுவாயில் எதிர்பாராத புயல் எழுந்து கப்பலைக் கவிழ்த்து விடுமா?

**ஷி:** என்ன மரண வேதனைகள்!

**ரோ:** என்ன பயனற்ற பச்சாத்தாபம்!

**ஷி:** ஆரம்பித்து விட்டாயே மறுபடியும். சுருக்கென்று தைக்கின்றன வார்த்தைகள்; போ, போ, நான் கேட்கப் போவதில்லை.

**ரோ:** விடைபெற்றுக் கொள்கிறேன், நீ நீதி தொடர்ந்து என் உயிரைப் பறிக்கும் வரையும் நான் நடைப்பிணமாகவே யிருப்பேன்.

**ஷி:** அப்படிப் பறித்தாலும், நான் ஆணையிடுகிறேன், அதற்குப் பின் ஒரு நிமிஷம் கூட நான் உயிர் தரியேன். போய் வா. மறுபடியும் எச்சரிக்கிறேன், நீ போவதை ஒருவரும் பார்க்க வேண்டாம்.

**எல்:** அம்மணி! ஈசன் நமக்கு எவ்வளவு கஷ்டங்களை விதித்தாலும்......

**ஷி:** தொந்தரவு செய்யாதே. இரவின் நிசப்தத்தில் என் துக்கத்தை நினைத்துக் கொண்டு நான் ஏகாந்தமாய் இருப்பதற்கு விடு.

(தொடரும்)

## முதல் அத்தியாயம்

# நடனம் ஆடினாள்

கண்களுக்கு இதமான தண்ணொளியும் மட்டிப்பால் வத்தியின் இன்மணமும் அந்தச் சிங்காரக் கூடமெங்கும் நிறைந்திருந்தன. உஷா மின்னல்கொடி நெளிவதுபோல் ரத்தினக் கம்பளம் விரித்த கண்ணாடித் தரைமீது லயம் பிசகாமல் ஆடிக் கொண்டிருந்தாள். பார்த்துக் கொண்டிருக்கும்போதே பம்பரம் மயங்குவதுபோல் இருந்தது, அவளுடைய நடனம். வட்டக் கரிய விழிகள் இரண்டும் வண்டெனச் சுழன்று வந்தன. மென் கழுத்து வெட்டி நொடித்தபோதெல்லாம் அவளுடைய நீண்ட குழற் பின்னல் உயிரையே சுண்டிச் சொடுக்கி இழுத்தது. கடைசல் பிடித்த கைகளும் கைவிரல்களும் குவிந்து வளைந்து மலர்க் கணை கணைத் தொடுத்தன.

நட்டுவனார் சொக்குப் பிள்ளை அந்தக் குழந்தையின் ஆட்டத்தில் அப்படியே சொக்கித்தான் போனார். தம்மையறியாமல், "பலே, பலே!" என்று தாளத்தை ஓங்கிப் போட்டார்.

"தாம் தித் தாம்......தை......தா......தை டை தக தாம்......"

உஷாவின் சிவந்த இதழ்களிலே அந்தச் சொற்கள் ஊர்ந்து தவழ்வது போலத் தெரிந்தன. வசந்த மலர் தென்றலில் அசைந்தாடுவது போலவே அவளுடைய தளிர்மேனி வளைந்தாடிக் கொண்டிருந்தது. சொல்லுக் கட்டின் வேகம் அதிகமாக ஆக, பொல்லென்று பூவாணம் உதிர்வதுபோல் அபூர்வமான புதுப் புதுப் பிடிகளை அவள் அடுக்கடுக்காகப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

சோபாவில் உட்கார்ந்துகொண்டிருந்த ஸ்ரீமதி பரமசிவத்துக்கு இருப்புக்கொள்ளவில்லை. தானே போய் நின்று தாளகதிக்கு ஏற்ப ஆடுவது போல் மேல் மூச்சு வாங்கியது. பக்கத்தில் அமர்ந்திருந்த மிஸஸ் மீனாட்சிக்குத் தன் தவிப்பைக் காட்டிக் கொள்ளாமல் நடன ஆசிரியர்



இந்தப் பக்கம் திரும்ப மாட்டாரா என்று காத்துக் கொண்டிருந்தாள்.

ஆசிரியரும் மாணவியும் ஆட்டத்திலே லயித்து ஒன்றிப் போயிருந்தார்கள். வர வர, அவர்களுடைய உற்சாகம் இணைத்துக் கொண்டு போயிற்றே தவிர, குறைவதாகக் காணவில்லை. விட்டு விட்டுக் கேட்டாலும் தொட்ட இடமெல்லாம் குழைவாகவும் இனிமையாகவும்தான் இருந்தது ஸ்ரீமதி பரமசிவத்துக்கு. ஆயினும் உஷாவுக்கு முத்துப் போல் வேர்வை அரும்பியதைக் கண்ட அவளுக்கு ஆறாகவே வேர்த்து ஊற்றியது. தலைக்கு மேலே சுற்றும் விசிறியினால் கூட அவளுடைய புழுக்கத்தைத் தணிக்க முடியவில்லை. அதே சமயத்தில் அவளுக்குப் பெருமையும் பிடிபடவில்லை. மிஸஸ் மீனாட்சி திறந்த கண்களை இமைக்காதவாறு அந்த நடனத்தை அங்காந்து ரசித்துக் கொண்டிருந்தாள்.



மிஸஸ் மீனாட்சி பல அரங்கேற்ற நடனங்களுக்குச் சென்றிருக்கிறாள். அவள் கணவர் தலைமை வகித்த சமயங்களில் முன் வரிசையில் அமர்ந்து பார்த்திருக்கிறாள். அவற்றின் குணச் சிறப்புக்களை ஓரளவு ரசித்தும் இருக்கிறாள். ஆனால் பயிற்சி முறைகளைப் பற்றி அவளுக்கு எதுவும் தெரியாது. அந்த அரும் கலை எத்தனை நுணுக்கம் வாய்ந்தது. அதற்கு எத்தனை சாதகம் வேண்டியிருக்கிறது என்பதெல்லாம் இப்போதுதான் அவளுக்குச் சிறிது சிறிதாகப் புலனாயிற்று. பச்சிளம் பெண்ணொருத்தி இத்தனை விஷயங்களையும் எப்படிப் புரிந்து கிரகித்துக் கொள்ள முடியும்?

மீனாட்சிக்கு வெறும் பிரமிப்பு மட்டுமில்லை; உஷாவைப் பார்க்கும்போது அவளுக்கு ஓர் ஏக்கமும் கிளர்ந்தெழுந்தது. பஞ்ச பாண்டவர்களைப் போல் அவளுக்குப் பிறந்த ஐந்தும் பிள்ளைகள். ஆசைக்கு ஒரு பெண் பிறக்கக் கூடாதா என்று அவள் எத்தனையோ முறை ஏங்கியிருக்கிறாள். அந்த ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்ள அவள் தன் கடைசிப் பிள்ளைக்குக் கவுன் தைத்துப் போட்டு, பூச்சூட்டி அலங்கரித்து, பெண்ணைப் போலச் சிங்காரித்து அழகு பார்த்திருக்கிறாள். இப்பொழுது அந்தப் பிள்ளைக்குப் பொட்டு வைத்துக் கொள்ளக் கூடப் பிடிக்கவில்லை; காரணம் மற்றவர்கள் செய்த பரிகாசம் அவனுக்கு மறக்கவேயில்லை. உஷாவைப் பார்க்கும்போதெல்லாம் அவளுக்குத் தன் பிள்ளையின் பெண் வேஷம்தான் மனக் கண் முன் வந்து நின்றது. அவன் மட்டும் அவள் எதிர்பார்த்ததைப் போலப் பெண்ணாகப் பிறந்திருந்தால் ஒரு நடன ஆசிரியரை அமர்த்தி இந்த நாட்டியமெல்லாம் கற்று வைப்பது என்ன பெரிய காரியம்! அதுவும் நீதிபதி ராமசுந்தரத்தின் பெண் என்றால் எத்தனை பேர் 'நான், நீ' என்று கற்றுத் தர முன் வருவார்கள்?

அதையெல்லாம் இப்போது எண்ணிப் பயனில்லை என்பது மிஸஸ் மீனாட்சிக்கு நன்றாகத் தெரிந்தே இருந்தது. ஆனால் அதற்கு ஒரு மாற்று உண்டு என்று இந்தச் சமயத்தில்தான் அவளுக்கு ஓர் எண்ணம் பிறந்தது. அந்த எண்ணத்திலேயே அவள் இப்போது லயித்திருந்தாள். அவள் ஸ்ரீமதி பரமசிவத்தின் தவிப்பைச் சிறிதும் அறிந்து கொள்ளவேயில்லை. இருவரும் ஒருவரையொருவர் நடுவில் பார்த்துக் கொண்டபோது தங்கள் மன ஓட்டத்தை மறைக்கப் புன்சிரிப்புச் சிரித்தார்கள்.

நீதிபதி ராமசுந்தரம் சிறந்த கலா ரசிகர் என்று பேர் வாங்கியவர். தம் திறமையும்தான் அவர் மனைவி மூலம் அவருக்கு எட்டட்டுமே என்று நட்டுவனார் சொக்குப் பிள்ளை தம் வரிசையையெல்லாம் காட்டத் துணிந்து விட்டார். அவருக்கே உஷாவின் சூடிகையும் திறமையும், பிரமிப்பையும் பெருமையையும் தந்தன. தாம் கற்று வைத்த வித்தை யௌவனத் துடிப்போடு, புது மெருகோடு அவளிடமிருந்து வெளிப்படுவதைக் கண்டு அவர் தம்மையே மறந்து விட்டார்; சிறிது நேரத்தில் தம்மைச் சுற்றியிருப்பவர்களையும் மறந்து விட்டார். சுருதியோடும் லயத்தோடும் ஒன்றிய உஷாவின் நடனத்திலுள்ள அருமைப்பாடு ஒன்றுதான் அவர் நினைவில் நிறைந்து நின்றது. தம்முடைய லட்சியக் கனவைப் பூர்த்தி செய்து தர வந்த கலாவல்லியாகவே உஷா அவர் கண்களுக்குத் தோன்றினாள். அஞ்சித குஞ்சித நிலைகளைக் காட்டி நின்ற உஷா அவருடைய உபாசனைத் தேவியாகவே அவருக்குக் காட்சியளித்தாள்.

"வாத்தியார் சார்!"

சொக்குப் பிள்ளையின் செவிகளில் ஸ்ரீமதி பரமசிவத்தின் பரிதாபமான அழைப்பு விழவில்லை. ஆனால் அவளும் விடுவதாக இல்லை.

"வாத்தியார் சார்! உங்களைத்தான்! குழந்தை களைச்சுப் போயிட்டுது, சார்!"

சொக்குப் பிள்ளை திரும்பிப் பார்த்தார். அவருடைய செங்காவி ஏறிய உதடுகளில் புன்னகை ஊர்ந்து வந்தது. கைத்தாளம் பிசகாதவாறு அவர் தலையை அசைத்தவாறே சற்றுப் பொறுத்திருக்கும்படி ஸ்ரீமதியைப் பார்த்துச் சைகை காட்டினார்.

"தகதிமி, தத்திமி, தகஜிணு, தஜ்ஜிணு"

ஸ்ரீமதி பரமசிவம் பொறுமை யிழந்து சோபாவை விட்டு எழுந்தாள். பிறகு சட்டென்று உட்கார்ந்து கொண்டாள். "அப்போ சூடாகக் காப்பி கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

"ம்ம்...ம்ம்..."

சொக்குப் பிள்ளை இரண்டே விஷயங்களில் மட்டும்தான் சொக்கிப் போகக் கூடியவர். ஒன்று சம்பிரதாய சுத்தமான நாட்டியம்; இரண்டாவது கைச் சூடு பொறுக்காத மணமுள்ள காப்பி. வெற்றிலைப்பாக்குக்கூட அவருக்கு இரண்டாம் பட்சம்தான். அதிலும் பாரிஸ்டர் பரமசிவத்தின் வீட்டுக் காப்பி என்றால் சாஸ்திர பூர்வமான நாட்டியம்கூட அதற்கு அடுத்தபடிதான். இந்த இரண்டிலும் தம்மை மறந்து சொக்கிப் போகக் கூடியவர் என்பதை எதிர்பார்த்து அவருக்கு அந்தப் பெயர் அமையவில்லை. சொக்கலிங்கம் என்ற அம்பலவாணனின் திருநாமம்தான் அவருக்கு அவ்வளவு பொருத்தமாக உருமாறியிருந்தது.

ஸ்ரீமதி பரமசிவத்துக்கு அவருடைய குணம் நன்றாகத் தெரியும். அவர் பணத்தை மட்டும் கருதி உஷாவுக்கு நாட்டியம் கற்றுத் தரப் படியேறி வரவில்லை. ஐந்தாறு தடவைகள் அவளும் பாரிஸ்டரும் நேரில் போய் வற்புறுத்தி அழைத்ததற்குப் பிறகுதான், "ஆகட்டும்; பார்க்கலாம்!" என்று அவர் ஒப்புக் கொண்டார். அவர்களுக்கு உண்மையில் அந்தக் கலையில் ஈடுபாடும் மதிப்பும் இருக்கின்றனவா என்று சோதித்துப் பார்க்கவே அப்படி முதலில் அலைக்கழித்தார்.

"நான் என்னுங்க, அந்தக் காலத்து மனுஷன். இப்போ புதுசு புதுசா எத்தினியோ பேரு சொல்லித் தர இருக்காங்களே!" என்று தட்டிக் கழித்தார்.

ஆனால் பாரிஸ்டரும் ஸ்ரீமதி பாரிஸ்டரும் சொக்குப் பிள்ளையின் பெருமையைப் பற்றிக் கேள்விப் பட்டிருந்தார்கள். அவர் அநேகமாகக் கற்றுத் தருவதை நிறுத்தி விட்டார் என்று தெரிந்தது. அவருடைய பெயரைச் சொல்லிக் கொண்டு கண்ட கண்ட நடனங்களை யெல்லாம் கலந்து, அந்தப் புராதனமான கலையை எல்லாரும் பாழ்படுத்தி வருவதை அறிந்தே அவர் மனம் கசந்து போயிருந்தார். ஆனால் பிறருக்கு அரிதாகி விட்ட பொருளைப் பெறுவதில்தானே யாருக்குமே நாட்டம் ஏற்படுகிறது? ஸ்ரீமதி பரமசிவம் அவரை எப்படியாவது உஷாவுக்குக் கற்றுத் தருவதற்கு அமர்த்தி விடுவது என்று ஒரே பிடிவாதமாக நின்றாள்.

உஷாவின் குறுகுறுப்பான முகத்தையும் அங்கலட்சணங்களையும் கண்ட நட்டுவனார், பாரிஸ்டர் தம்பதியை ஒரு முறை ஏறிட்டு நோக்கினார்.

"நம்ப குழந்தைகளா, இது?"

"ஆமாம், ஆமாம்!" என்றாள் ஸ்ரீமதி பரமசிவம்.

அவர் மிகவும் சாதாரணமாகத்தான் அந்தக் கேள்வியைக் கேட்டார். அதற்கு விடையளிப்பதற்குள் பாரிஸ்டர் மனைவிக்கு மூச்சுத் திணறியது. குழந்தை உஷா அத்தனை லட்சணமாக இருந்தாள். இறைவனுடைய படைப்பில் எத்தனையோ விசித்திரங்கள் என்பதுபோல், சொக்குப் பிள்ளை பெருமூச்சு விட்டவாறு, "ஆகட்டுங்க; ஒரு நல்ல வேளை பார்த்து வண்டியை அனுப்புங்க!" என்று ஒப்புக் கொண்டு விட்டார்.

"உங்களுக்கு எவ்வளவு சேர வேண்டுமோ......?"

"அது கிடக்கட்டுங்க! இந்த வித்தைக்கெல்லாம் பணம் ஒரு கணக்கு இல்லீங்க. நம்ப விருப்பத்தைப் பொறுத்தது. இதெல்லாம் பிரியத்தின்பேரில் செய்யவேண்டியது. நீங்க கொடுக்க வறதும் சரி, நான் சொல்லித் தருவதும் சரி......" என்று அவர்களை அனுப்பி வைத்தார் நட்டுவனார் சொக்குப் பிள்ளை.

"உஷாவைப் பார்த்ததுமே ஒப்புக் கொண்டு விட்டார், பார்த்தீர்களா? என் செல்லக் கண்ணுக்குச் சொல்லித் தர யார்தான் மாட்டேன் என்பார்கள்?" என்று ஸ்ரீமதி பரமசிவம் குழந்தை உஷாவின் கன்னத்தை வழித்து திருஷ்டிக் கழிக்க நெட்டி முறித்தாள்.

"உம்!" என்று மனைவியைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார் பாரிஸ்டர்.

சொக்குப் பிள்ளை வந்து சொல்லிக் கொடுக்க ஒப்புக் கொண்டதனாலேயே அவர்களுடைய அந்தஸ்து ஒரு பிடி உயர்ந்து விட்டதாகத் தோன்றியது. பாரிஸ்டர் தம்பதி எல்லா விஷயங்களிலும் கொடுத்து வைத்தவர்கள் என்றே அவர்களுக்குத் தெரிந்தவர்கள், வேண்டியவர்கள் எல்லாரும் சொல்லி வந்தார்கள். மிஸஸ் மீனாட்சிகூட இதைப் பலமுறை ஸ்ரீமதி பரமசிவத்திடமே சொல்லி விட்டாள்.

"எங்க ரமேஷ் பிறந்தவுடன்தான் அவருக்கு ஜட்ஜ் வேலை ஆயிற்று. உஷாவுக்கும் பத்து வயதுதான்; அவனுக்கும் அவ்வளவுதான் ஆகிறது. பார்க்கப் போனால் அவன் ஆறு மாதங்கள் பெரியவன். அதனாலே நீங்க சம்மதிக்காட்டாலும் நான் விடப் போகிறதில்லே. உஷா எங்க ரமேஷுக்குத்தான்!" என்றாள் மிஸஸ் மீனாட்சி.

ஸ்ரீமதி சொர்ணம்பாள் பரமசிவத்துக்கு இதைக் கேட்டதும் பெருமை அள்ளிக்கொண்டு போயிற்று. ஆயினும் அவள் அதைக் காட்டிக் கொள்ளாமல், "அவனுக்கு முந்தி இருக்கிற நாலு பேருக்கு ஆனபிறகுதானே இந்தப் பேச்சு!" என்றாள்.

"அந்த வயசு ஆகிறதுக்குள்ளே அவர்களுக்கு ஆகாமலா போய்விடப் போகிறது? அப்படியே ஆகாவிட்டாலும் ரமேஷுக்குமுன்னால் கல்யாணம் செய்து விட நான் தயார்!" என்றாள் மீனாட்சி.

சொர்ணம்பாளுக்குச் சிரிப்புத்தான் வந்தது. அந்தச் சிரிப்பிலே வேடிக்கையும் கலந்திருந்தது; பெருமிதமும் பொங்கி நின்றது. "எனக்கும் சம்மதம்தான். எங்க உஷாவிடம் உங்களுக்கு எத்தனை பிரியம் என்பது எனக்குத் தெரியாதா, என்ன?" என்றாள்.

சொக்குப் பிள்ளைக்குக் காப்பி வந்த போது சொர்ணம்பாள் வேலைக்காரியைப் பார்த்து, "பொன்னி! நம்ப சம்பந்தி அம்மாவை மறந்திட்டியே! அவங்க காப்பி சாப்பிடமாட்டாங்கன்னு தெரியுமில்லே! ஜில்லுன்னு ஒரு 'லெமன்' கொண்டு வந்து கொடு!" என்று உத்தரவிட்டாள்.

மிஸஸ் மீனாட்சிக்கு அந்தப் பேச்சே குளிர்ச்சியாக இருந்தது. "இதோ பார், பொன்னி! அதெல்லாம் இப்போ ஒண்ணும் வேண்டாம். நீ சும்மா இரு! இல்லாவிட்டால் அவுங்களுக்கும் சேர்த்துக் கொண்டு வா!" என்றாள்.

உஷா நடனப் பயிற்சிக்கான உடையில் நின்று கொண்டிருந்தாள். ஆசிரியர் காப்பியைமுடிக்கும் வரையில் அவள் கால் கடுக்க நிற்பானேன் என்று எண்ணிய மீனாட்சி, "ஏம்மா, நிற்கிறே! வாத்தியார் காப்பி குடிக்கட்டுமே. அதுவரையில் இப்படி வந்து உட்காரும்மா!" என்று செல்லமாக அழைத்தாள்.

ஆனால் சொர்ணம்பாளுக்கு அவள் உட்காரமாட்டாள் என்பது தெரியும். அதனால் அவள் சொல்வதையே விட்டு விட்டாள். உஷா சிரித்த முகம் மாறாமல் தலையசைத்து மறுத்தபோது, சொர்ணம்பாளுக்கு வயிற்றை என்னவோ செய்வது போலிருந்தது. குளிர்ச்சியான பானம் உள்ளே போனதுமே இலேசாக ஒரு புரட்டல் உண்டாயிற்று.

எல்லாவற்றையும் சொக்குப் பிள்ளை கவனித்துக் கொண்டுதான் இருந்தார். உஷா அழகில் மட்டுமல்ல; குணத்திலும் பெற்றோரிடமிருந்து வேறுபட்டிருப்ப தாகத்தான் அவருக்குத் தோன்றியது. வித்தையிலும் வித்தை கற்பிக்கும் ஆசானிடமும் அத்தனை பக்தி எல்லா ருக்கும் ஏற்பட்டு விடாது என்பது அவருடைய அனுபவம். அது உள்ளத் தின் ஆழத்திலிருந்து வர வேண்டிய ஒன்று. அப்படி உள்ளவர்களுக்குத்தான் வித்தை பலிக்கிறது.

“ஜட்ஜி அம்மாளுக்குல்லே சொல் றேன். ஜட்ஜி ஐயாவுக்குத் தெரிஞ் சிருக்கும். மனுஷங்களைப் போல் கலையும் அதிருஷ்டம் செய்திருக்கணும் அம்மா. அப்பத்தான் நம்ப உஷாவைப் போல் உள்ள குழந்தைகள் அதைக் கற்றுக் கொள்ள வருவாங்க! அது லட்சத்திலே ஒரு குழந்தை! லட்சம் பேரு காசுக்காக வும் இன்னொண்ணுக்காகவும் அதைக் கொலை செய்தாலும் இதைப்போல் ஒரு குழந்தை இருந்திட்டாப் போதும். அது பிழைத்து விடும்!” என்றார். பிறகு சொர் ணம்பாளைப் பார்த்து, “எத்தனையோ தவசு செய்திருந்தாத்தான் இதைப்போல் ஒரு குழந்தை நம்ம வயிற்றிலேபிறக்கும்” என்றார் சிறிது புகழ்ச்சியாக.

மிஸஸ் மீனாட்சியின் முன்னிலையில் கட்டுவனார் பேசிய மொழிகள் அமுத மாகத்தான் இனித்தன, சொர்ணம்பா ளுக்கு. அது தெவிட்டித்தானோ என் னவோ, அவளுக்கு உண்டான புரட்டல் இன்னும் சிறிது அதிகமாயிற்று. அவளுடைய வேதனையைக் கண்ட மீனாட்சி, “என்ன அம்மா, ஏன் குமட் டல் வருகிறது? லெமன் எஸ்ஸென்ஸ் அதிகமாகப் போய் விட்டதோ?” என்று அக்கறையோடு விசாரித்தாள். அவள் கேட்கும்போதே ஸ்ரீமதி சொர்ணம்பாள் பரமசிவத்துக்கு இன்னும் இரண்டுமுறை குத்திக் கிளறியது. அவள் கையிலிருந்த கிளாஸைக் கீழே வைத்துவிட்டு, “வாத்தி யார் சார்! இன்றைக்குப் பாடம் இத் துடன் போதும்!” என்று பீங்கான் குழா யைப் பார்க்கப் போனாள்.

“குழந்தை இவ்வளவு நேரம் ஆடினது அவங்களுக்குப் பொறுக்கலை. பெத்த வயிறுச்சே. சங்கடம் பண்ண ஆரம்பிச் சுட்டுது!” என்று சொல்லிவிட்டு வாத்தி யார் எழுந்தார்.

உஷா பதறிப் போய் ஓடிவந்து தாயைக் கட்டிக் கொண்டாள். மிஸஸ் மீனாட்சி அவளைச் சிறிது நேரம் படுத்து ஓய்வு எடுத்துக் கொள்ளச் சொல்லி விட்டு, விடைபெற்றுக் கொண்டு சென்றாள்.

குளுகுளுவென்று விசிறி சுற்றிக் கொண்டுதான் இருந்தது. ஆயினும் சொர்ணம்பாளுக்கு அந்தக் குமட்டல் அடங்கவில்லை.

இரண்டாம் அத்தியாயம்

## உலகம் சுழன்றது!

லேடி டாக்டர் ஸ்ரீமதி ராஜபூஷணம் அரை மணி நேரம் கழித்து, கதவைத் திறந்துகொண்டு புன்முறுவலோடு வெளி யில் வந்தாள். பாரிஸ்டர் பரமசிவம் கவலை தோய்ந்த முகத்தோடு குறுக்கும் நெடுக்குமாக உலவிக் கொண்டிருந்ததை நிறுத்திவிட்டு அவள் முகத்தை ஆவலோடு பார்த்தார். ராஜபூஷணம் தூய வெள்ளைத் துணியால் ஈரக் கையைத் துடைத்துக் கொண்டு, “அம்மாளுக்கு இப்போது என்ன வயதாகிறது?” என்று கேட்டாள்.

எடுத்த எடுப்பிலேயே இப்படிக் கேட் டதும் பாரிஸ்டருக்கு யோசனையாகப் போய் விட்டது. லேடி டாக்டரின் முகத் தில் புன்னகை மட்டும் அரும்பியிரா விட்டால் அவருக்குப் பெரிய அதிர்ச்சியே ஏற்பட்டிருக்கும். அவர் தம் தொழிலில் மிகவும் திறமைசாலி என்று பெயரும் புகழும் வாங்கியவர்தான். எந்தக் கேள் வியை விட்டால் எதிர்பார்த்த விடை வெளிப்படுமோ, அப்படிப்பட்ட கேள்வி களாகத் தொடுப்பதில் அவருக்கு நிகர் யாருமே இல்லை என்றுகூடச் சொல்ல லாம். இந்த இருபத்தைந்து ஆண்டுகளில் நிறைந்த செல்வத்தைப் போலவே அனு பவமும் பெற்றிருந்தார் அவர். அந்த அனு பவத்தின் விரிவை அவருடைய தலை நரை யைக் கொண்டே மதிப்பிட்டு விடலாம். அப்படிப்பட்டவருக்குக் கூட லேடி டாக் டர் ராஜபூஷணத்தின் கேள்விக்குக் கார ணம் விளங்கவில்லை.

அவருக்கும் அவருடைய மனைவிக்கும் ஆறு வயதுதான் வித்தியாசம். அதனால் அவர் அதிகப் பிரயாசையின்றி, “நாற் பத்தி நாலு ஆகிறது!” என்றார்.

ராஜபூஷணத்தின் புன்முறுவல் மேலும் விரிந்தது. லேடி டாக்டர்கள் கூச்சப் பட்டால் கட்டுப் படியாகுமா? மனிதர்க ளுடைய விசித்திரங்களை எண்ணி வியந்து கொண்டிருப்பதுதான் சாத்தியமா?

“ஒன்றும் பயப்பட வேண்டியதில்லை; நீங்கள் மகிழ்ச்சியடையக் கூடிய விஷயம் தான்!” என்றாள் அவள்.

கதவைத் திறந்ததுமே உள்ளே ஓடிச் சென்ற உஷாவை ஒருமுறை எட்டிப் பார்த்து விட்டு, “அப்படி என்றால்...? எனக்குத் தெளிவாகப் புரியவில்லையே!” என்றார் பரமசிவம்.

“இதுகூடவா புரியவில்லை?” என்று வேடிக்கையாகச் சிரித்தாள் லேடிடாக்டர் ராஜபூஷணம்.

பாரிஸ்டருக்குத் தெளிவு உண்டாவதற் குப் பதில் குழப்பம்தான் உண்டாயிற்று. அவருக்கு அது எப்படிப் புரியும்? ஸ்ரீமதி



ராஜபூஷணம் அவசரப்பட்டு எதையோ தம்மிடம் சொல்ல வருகிறாள் என்ற சம்சயம் ஏற்பட்டது அவருக்கு.

அவருடைய குழப்பத்தை முகக் குறிப்பிலிருந்தே கண்டு கொண்ட ராஜபூஷணம், "அது சரி; உஷாவுக்கு இப்போது என்ன வயதாகிறது?" என்று கேட்டாள்.

"பத்து முடிந்து பதினொன்று பிறந்திருக்கிறது!"

"அதற்குப் பிறகு குழந்தைகளே இல்லையோ?"

"ஏன், உங்களுக்கே தெரியாதா, ராஜபூஷணம்? உஷாவுக்கு ஒரு வயது ஆனதிலிருந்தே இங்கே நீங்கள் வந்துகொண்டிருக்கிறீர்களே!"

"இல்லை; ஒருகால் வெளியூர் போயிருக்கிறபோது......"

"அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை. ஒன்றுமே இல்லை!" என்று வேகமாகத் தலையை அசைத்தார் பரமசிவம்.

"ஆனால் இப்போது நிச்சயம்தான். இது வெறும் வயிற்றுக் குமட்டல் அல்ல; மூன்றாவது மாதக் கர்ப்பமாகத் தோன்றுகிறது!"

இதைக் கேட்டதும் பாரிஸ்டருக்கு அந்த ஹால், அங்குள்ள பொருள்கள், அந்த லேடி டாக்டர் உள்பட எல்லாமே தலைகீழாகச் சுற்றுவது போல் இருந்தது. ஒரு கண நேரம் அவர் அந்த அதிர்ச்சியிலிருந்து மீளவேயில்லை. மிகவும் நிதானமாக அவர் பக்கத்தில் கிடந்த சோபாவில் உட்கார்ந்துகொண்டு ராஜபூஷணத்தின் சிரிக்கும் கண்களையே கூர்ந்து பார்த்தார். பத்து வருஷங்களுக்குள் அந்த அழகிய முகம் வைரம் பாய்ந்திருப்பது அவருக்கு நன்றாகத் தெரிந்தது. முகத்தை அவள் வெகு துல்லியமாகத்தான் வைத்துக் கொண்டிருந்தாள். ஆயினும் கன்னக் கதுப்புகளிலே ஒரு தடிப்பு ஏறி யிருந்தது. கண்களுக்குக் கீழே எந்தக் 'காலத்திலோ வெடித்த பருக்கள் தேய்ந்து வழுவழுப்பாக மறைந்திருந்தன. 'பத்து ஆண்டுகளில்தான் பெண்கள் எப்படி முதிர்ந்து விடுகிறார்கள்! அப்படியிருக்கும்போது இவளைவிட அதிக வயதுள்ள சொர்ணம் உண்மையில் தாயாக முடியுமா, என்ன? இதற்கு ஒரு வயது என்பது இல்லையா? இது எப்படிச் சாத்தியம்? அதிலும் சொர்ணத்துக்கு இது எவ்வாறு சாத்தியம்? இல்லை, இல்லை; ராஜபூஷணம் அநுபவமுள்ளவள்தான். ஆயினும் தான் எத்தனையோ 'வழக்குகளில், சின்ன விஷயங்களில் தவறி விடுவதில்லையா? பெண்களுக்கு வயிற்றுப் புரட்டல் என்றால் உடனே கர்ப்பம் என்று முடிவு கட்டி விடுவதா? எத்தனை படித்திருந்தாலும் பெண், பெண்தானே! நிச்சயம் ராஜபூஷணம் அவசரப்பட்டுத்தான் இப்படித் தவறாகச் சொல்கிறாள்! கர்ப்பத்தை வாயுக்கட்டி என்று சொல்லும் டாக்டர்களைப் போல் இவளும் வாயுக்கட்டியைக் கர்ப்பம் என்று தவறாகச் சொல்லி விடலாம், இல்லையா?' பாரிஸ்டர் பரமசிவம் தலையசைத்தார்.

"ஏன், உங்களுக்கு நம்பிக்கை உண்டாகவில்லையோ? இதற்கெல்லாம் யாராலும் காரணம் கூறமுடியாது, சார். இது மனித அறிவை மீறிய விஷயம். குறைந்தது எண்பது நாட்களாவது இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. பொன்னியை என்கூட அனுப்புங்கள். கையோடு ஒரு மருந்து கொடுத்து அனுப்பி வைக்கிறேன்!" என்று சொல்லி விட்டு, லேடி டாக்டர் ராஜபூஷணம் தோல் பெட்டியைச் சரியாக வைத்து மூடினாள்.

"டாக்டர்!......இதைப் பற்றிச் சொர்ணத்திடம் சொன்னீர்களா?"

"சொல்லி விட்டேன். அவர்களுக்கும் நம்பிக்கை இருந்தால்தானே!"

பொன்னி தோல் பெட்டியை எடுத்துக் கொண்டு ராஜபூஷணத்துடன் வெளியே சென்றாள். பாரிஸ்டர் தயக்கத்தோடு தலையை இரு கைகளாலும் அழுத்திப் பிடித்துக்கொண்டே சொர்ணம்பாளுடைய கட்டிலுக்கு அருகே போய் நின்றார். உஷாவின் அழகிய முகத்திலே ஒரு மெல்லிய கண்ணீர்க் கோடு ஓடிக் காய்ந்திருந்தது.

அவர் அன்போடு அதைத் துடைத்துக் கொண்டே, தம்முடைய மனைவியைப் பார்த்து, "ராஜபூஷணம் சொல்லி விட்டுப் போனதைக் கேட்டாயா?" என்றார்.

அவள் முகத்தை வேறு புறமாகத் திருப்பிக் கொண்டு, "சரி சரி!...இதையெல்லாம் பற்றி அவனுக்கு என்ன தெரியும்? எதையோ போய்ப் படித்து விட்டு எதையோ வந்து சொல்லுகிறான். அவன் சொல்லுவதை இங்கே யார் கேட்கப் போகிறார்கள்? பில் அனுப்பினால் செக் கொடுப்பதோடு |சரி. பாவம், உஷாக் கண்ணை அழைத்துக் கொண்டு போங்கள்! அது என்னமோ என்று பயந்து போயிருக்கிறது!" என்றாள்.

"நான் ஒண்ணும் போக மாட்டேன்!" என்று சிணுங்கினாள் உஷா.

"சாப்பிட வேண்டாமா, கண்ணு?"

"எனக்கு ஒண்ணும் வேண்டாம்!"

"அம்மாவுக்கு ஒன்றுமில்லையடா, கண்ணு! நீ எழுந்து வந்தால்தானே அம்மா சிறிது தூங்குவாள்?" என்று பாரிஸ்டர் பரமசிவம் உஷாவை வற்புறுத்தி மெல்ல அழைத்துச் சென்றார்.

மறுநாள் அதிகாலையில் சொர்ணம்பாளைப் படுக்கையில் காணவில்லை. பாரிஸ்டர் பரபரப்புடன் எழுந்து அவளைப் பார்க்கச் சென்றபோது அவள் உஷா கண் வளருவதைப் பார்த்துக் கொண்டே நின்றிருப்பதைக் கண்டார்.

"சொர்ணம்!"

அவள் இலேசாகத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"இங்கே வந்து என்ன செய்கிறாய்? உடம்பு எப்படி இருக்கிறது?"

சொர்ணம் அவரைத் தாண்டிக் கொண்டு வெளியே சென்று, "அதெல்லாம் ஒன்றுமில்லை. மிஸஸ் ஜேம்ஸ் ரொம்பக் கெட்டிக்காரி என்று கேள்வி. அவளைப் போய்ப் பார்த்தால் என்ன?" என்று கேட்டாள்.

"அதற்கென்ன? பார்க்கலாமே!"

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ளவே அவர்களுக்குக் கூச்சமாக இருந்தது. நினைத்துப் பார்க்கவே இது கேலிக் கூத்தாக இருந்தது. 'இத்தனை வயதுக்கு மேல் இப்படி எங்கும் நேர்ந்ததாகக் கேள்விப்பட்டதே யில்லை' என்று அவர்கள் எண்ணினார்கள்.

ஆனால் மிஸஸ் ஜேம்ஸ், கைநாடியைப் பார்த்ததுமே உறுதியாகச் சொல்லி விட்டாள். முறைப்படி பரிசோதனை செய்த பிறகு, "உங்களுக்கு இதற்கு முந்தி ஒரு குழந்தை இருக்கிறபோது இதில் என்ன சந்தேகம் வந்து விட்டது?" என்று முடிவைச் சொல்லி விட்டாள். மிஸஸ் ஜேம்ஸ் அவளுடைய வயதைப் பற்றிப் பேச்சே எடுக்கவில்லை. இந்தக் காலத்தில் எதுவும் அதிசயமல்ல என்பது போலவே அவள் நடந்து கொண்டது பாரிஸ்டர் தம்பதிக்குச் சிறிது உறுத்தலாகத்தான் இருந்தது.

"இன்னும் சந்தேகம் இருக்கிறதா? வேறு யாரையாவது பார்க்க வேண்டுமா?" என்று கேட்டார் பாரிஸ்டர்.

"அதெல்லாம் இனிமேல் எங்கும் வரமாட்டேன்!" என்றாள் சொர்ணம்பாள்.

பாரிஸ்டருக்கும் சரி, சொர்ணம்பாளுக்கும் சரி, இது ஒரு புறம் உண்மையான மகிழ்ச்சியைத் தந்தாலும் மறுபுறம் பெரிய சிக்கலாகிவிடும் போலப் பட்டது. இத்தனை வயதுக்குமேல் வயிறும் பிள்ளையுமாக இருக்கும் தோற்றத்தைக் கற்பனை செய்து கொண்டதுமே அவர்களுக்கு அவமானம் பிடுங்கித் தின்றது. ஊரெல்லாம் அவர்களைப் பார்த்து உள்ளூறச் சிரிப்பது போன்ற உணர்ச்சி.

அவர்கள் வீடு திரும்பும்போது குன்றித்தான் போயிருந்தார்கள். பொன்னியும் அவள் கணவன் குப்பனும் உஷாவுக்குத் தேறுதல் சொல்லிக் கொண்டிருந்ததைக் கண்டு அவர்கள் குற்றவாளிகளைப் போலத் தலையை குனிந்து கொண்டார்கள். அம்மாவும் அப்பாவும் இப்படித் தன்னை விட்டு விட்டு வெளியே சென்றது முதல் வெண்டிப் போயிருந்த உஷா, தாயைக் கண்டதும், "அம்மா!" என்று மகிழ்ச்சியோடு ஓடிச் சென்றாள்.

"ஐயையோ! என்மேல் வந்து விழாதே!" என்று பயந்து கூவியவாறே இரண்டு எட்டுப் பின்வாங்கி ஒதுங்கிக் கொண்டாள் சொர்ணம்பாள். திடீரென்று தன்னுடைய நிலையில் பலத்த மாறுதல் ஏற்பட்டு விட்டதாக அவள் எண்ணிக் கொண்டு விட்டாள்.

உஷா இதை எதிர்பார்க்கவில்லை. ஆசையோடு ஓடிச் சென்ற அவள் அப்படியே இடறியடித்துக் கொண்டு விழுந்தாள்.

"குழந்தை ஆசையாக ஓடி வரும்போது நகர்ந்து ஒதுங்கிக் கொண்டால் என்ன அர்த்தம்?" என்று பாரிஸ்டர் பாய்ந்து சென்று உஷாவைத் தூக்கினார். குழந்தையின் நெற்றிப் பொட்டிலிருந்து ரத்தம் வடிந்து கொண்டிருந்தது.

பொன்னியும் குப்பனும் பதறிப் போய் அவளை அவரிடமிருந்து வாங்கித் தாங்கிக் கொண்டபோது, அவர்களுடைய பங்களாவினுள்ளே புத்தம் புதிய கார் ஒன்று நுழைந்து வருவதைக் கண்டார்கள். அதிலிருந்து இளம் வாலிபன் ஒருவன் இறங்கிப் படியேறி வந்தான்.

அவனைக் கண்டதுமே பாரிஸ்டர், "குழந்தையை அழைத்துக் கொண்டு போங்கள்!" என்று சொல்லி வந்தவனைப் பார்க்க ஓடினார். (தொடரும்)

## ஓங்குக சுடர்

பெ. தூரன்

உள்ளத்தில் என்னவோ
  ஒளிந்து நிற்குது
  ஓசைப் படாமலே—அது

கள்ளத்தில் மேலெழும்
  காட்டுக் குரங்கினைக்
  கட்டுக்குள் வைப்பதாம்

ஐம்புல வேடர்கள்
  ஆட்டக் களிப்பிலும்
  அயர்வுப் போதினிலும்—சிறு

சம்புக வழிதேடித்
  தாவிக் குதித்தெழும்
  தாழிருட் பேய்களையே

ஜாடையிற் கூட்டியே
  மாயக் குகைதள்ளி
  வல்லிரும் பாணியிட்டு— ஒரு

கண்டமும் வாராமல்
  காக்கும் சுடரது
  காலத்தும் ஓங்குகவே!

குறிப்பு: அடி மனத்திலே இழிந்த இச்சைகளாகிய அரக்கர்களும் பேய்களும் அழுந்திக் கிடக்கின்றன. அவை மேலெழுந்து தலைவிரித்தாடச் சமயம் பார்த்துள்ளன. ஏதோ ஒன்று நமக்குள்ளே மறைவாக இருந்து அவற்றைத் தடுத்து நிறுத்துகிறது. அந்த ஒன்றின் வலிமை குறையக் கூடாது; குறைந்தால் வாழ்க்கையிலே வீழ்ச்சி காண்கிறோம். அதன் வலிமை ஓங்க வேண்டும் என்பது புத்தாண்டுப் பிரார்த்தனை. ஐம்புல வேடர்—பஞ்சேந்திரியங்கள். சம்புகவழி—குள்ளநரி தந்திரம் வல்லது. ஆகவே சம்புக வழியென்பது தந்திரமாகக் குள்ளநரி போன்று பதுங்கிச் செல்லும் வழியாகும். மாயக்குகை - அடிமனம்.

## சித்திரையாள் வாராள்!

" கரன் கோபால் "

முல்லையினை முத்தமிட்டு மோகவெறி கொண்டு
  சில்லென்று இளந்தென்றல் தேகத்தை வருட
பல்லிளிக்கும் இளந்தென்றல் பளபளத்து அசைய
  செல்லமுடன் குயிலழைக்கச் சித்திரையாள் வாரான்!

நடுக்குகின்ற குளிரினிலே நலமிழந்த உயிர்கள்
  மிடுக்குடனே தலைநிமிர்ந்து வேகமுடன் நடக்க
இடுக்கணுற்ற முகத்திலெலாம் இன்முறுவல் வெடிக்க
  இடுக்கிடும்பேர் விகாரிபெற்ற சித்திரையாள் வாரான்!

காலமெனும் முதலாளி கணப்பொழுதைக் கொண்டு
  கோலமுருக் கொண்டபல ஆண்டுகளால் அளக்க
ஞாலமெனும் முதலாளி நயமுடனே விழுங்க
  சீலமுடன் விளம்பியேகச் சித்திரையாள் வாரான்!

நாதசுர ஒலிமிதக்க நறுமலரும் மணக்க
  காதலர்கள் உள்ளத்தைக் கள்ளமுடன் கிள்ள
பூதலமே அதிர்வதுபோல் கோயில்வெடி முழங்க
  ஆதரவாய் வசந்தனுடன் சித்திரையாள் வாரான்!

விஜயா-M

# புத்தாண்டு பிறப்பு !

தமிழழகன்

★

புதியதோர் ஆண்டு பிறந்ததடி ; – காலப்
புதுமையே மூண்டு சிறந்ததடி !

எதிலுமோர் ஊக்கம் எழுந்ததடி ;— திசை
எங்குமே ஆக்கம் விளைந்ததடி !

காவியக் கோவிலும் காணுதடி !— அவர்
காரிய மேகவி பேணுதடி !

ஓவியம் சிற்பம் உயருதடி —கலை
ஒவ்வொன்றும் தெய்வீகம் ஆகுதடி !

கோலக் குயில்களும் கூவுதடி ;—மலர்க்
கொத்தை மரங்களும் தூவுதடி !
காலைக் கடல்களித் தாடுதடி ; - தெய்வக்
கற்பனை வான்இங்கு கூடுதடி !

கிளிகள் பழக்குலை கோதுதடி : தென்னங்
கிளையையே தென்றலும் மோதுதடி !

தளிர்களும் ஆடி அசையுதடி ;—காற்றின்
தந்திரத் திற்கது இசையுதடி !

ஆடி அருவியும் ஓடுதடி ;—அது
அம்மானைப் பாட்டுதான் பாடுதடி !

கூடி நாணலும் குழையுதடி ;—நுரை
கோத நாரையும் நுழையுதடி

வேம்பூவின் பூமணம் வீசுதடி ;—இள
வேனில்பண் வண்டுமேபேசுதடி !

ஆம்பலும் கையிதழ் கூப்புதடி ;—உடன்
அன்பர் கரமுமே கூப்புதடி !

புத்தாண்டு புத்தாண்டு வந்ததடி ;— நலம்
பூரிக்க இவ்வாண்டு வந்ததடி !

உய்த்தாண்டும் வாழுவோம் உண்மையடி :—நம(
ஊர்க்கும் உலகுக்கும் நன்மையடி !

○✲○

# கடவுளருள் வேண்டுவமே !

என். எஸ். சிதம்பரம்

பொலிவுடனே பிறந்திடுமோர்
புத்தாண்டு விகாரிதனில்

நலிவுதரும் இடர்நீங்கி
நல்வளங்கள் மிகஓங்கி

மலிந்துபொருள் விலையிறங்கி
மழைபொழிந்து பயிர்விளைந்து

கலியோட நலம்கூடக்
கடவுளருள் வேண்டுவமே!





சடையவர்ம பராந்தக பாண்டியன் காலமானபின் அவன் கோப்பெருந்தேவி வானவன் மாதேவியும், இளவரசன் இராசசிம்மனும் ஆதரவின்றி விடப்படுகின்றனர். வடதிசை யரசர்களின் தொல்லைக்கு அஞ்சி இராசசிம்மன் எங்கோ ஓடி விடுகிறான். மகாராணி மகாமண்டலேசுவரரின் ஆதரவில் தென்பாண்டி நாட்டில் தங்கியிருக்கிறார். சோழன் முதலிய வடதிசையரசர்கள் - குமார பாண்டியனையும், வானவன் மாதேவியையும் அழித்துவிடப் பலவித முயற்சிகள் செய்கின்றனர். மகாமண்டலேசுவரர் குமார பாண்டியனை இரகசியமாக மாறுவேடத்தில் அழைத்து வந்து தம்மோடு தங்கச் செய்து கொள்ளுகிறார். அவர் பெண் குழல்மொழி குமாரபாண்டியனோடு நெருங்கிப் பழகுகின்றாள். தளபதி வல்லாள தேவன் மகாமண்டலேசுவரர் மேல் சந்தேகப் படுகிறான். கூற்றத் தலைவர் கூட்டத்துக்காக மகாமண்டலேசுவரர் அரண்மனை சென்றிருக்கும்போது இடையாற்றுமங்கலத்தில் அரசுரிமைப் பொருள்களும், இளவரசனும் காணாமற் போய் எங்கும் திகைப்புப் பரவுகிறது. மகாமண்டலேசுவரரின் ஒற்றனான நாராயணன் சேந்தன் பல தந்திரங்கள் செய்கிறான்.

ஈழநாட்டுப் படைத்தலைவர் சக்கசேனபதியுடன் அரசுரிமைப் பொருள்களை எடுத்துக் கொண்டு இலங்கை செல்லும் வழியில் செம்பவழத் தீவில் மதிவதனி என்ற பெண்ணைச் சந்தித்துக் காதல் கொள்கிறான் இராசசிம்மன். அவள் நினைவு அழியாமல் அவனுள்ளே பதிகிறது.

தென்பாண்டி நாட்டில் போருக்கான அறிகுறிகள் வட எல்லையாகிய கரவந்தபுரக் கோட்டத்தில் தென்படுகின்றன. கொடும்பாளூரில் பகையரசர்கள் கூடிப் பாண்டி நாட்டின் மேல் படையெடுக்க உடன்படிக்கை செய்து கொள்கின்றனர். அருள் மயமான வானவன்மாதேவியின் உள்ளத்தில் கவலை இருள் சூழ்கிறது. குமாரபாண்டியனைத் தேடி வருவதற்காகத் தன் மகள் குழல்மொழியையும், சேந்தனையும் கப்பலில் அனுப்பி, அவர்களுடன், தன் தங்கையும் மாறுவேடத்தில் போகுமாறு ஏற்பாடு செய்கிறான் தளபதி. மகாமண்டலேசுவரரின் சாமர்த்தியம் பல அற்புதங்களைச் செய்கிறது. தளபதி, ஆபத்துதவிகள் தலைவன் முதலியவர்களுக்கு அவர்மேல் காரணமின்றிப் பொறாமை ஏற்படுகிறது. மகாமண்டலேசுவரர் மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொணர முயல்கிறார் பொன்மனைக் கூற்றத்துக்கழற்கால் மாறனார். அவர் முயற்சி பலிக்கவில்லை. கடற்காய்ச்சலோடு இலங்கையை அடைகிறான் இராசசிம்மன். எல்லாத் துன்பங்களுக்கும் நடுவே மதிவதனியின் நினைவு அவனுக்கு இன்பமளிக்கிறது. சாந்தம் நிறைந்த மகாராணியோ அரண்மனையில் தம் புதல்வனின் எதிர்காலத்தைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கிறார்.

### முதல் அத்தியாயம்

## நாளைக்கு நாண்மங்கலம்!

*கடலின் அடி மூலையும், தொடுவானமும், ஒன்றுபடுகிற இடத்தில் அளவும், பரப்புமற்ற பொன்னிறத்துப் பேரொளிப் பெரு மலர் ஒன்று பல்லாயிரம் சோதிக் கதிர்களை நீட்டிக் கொண்டு மேலெழுந்தது! அந்த ஒளியின் எழுச்சியில் கடல் நீர் மாணிக்கக் குழம்பென மாறிச் செம்மை ஒளிர மின்னியது. அலைகள்*

* **இத்தொடர்கதையில் இலங்கையின் தொடர்புடையனவாக வரும் செய்திகளுக்கான சில ஆதாரங்கள்** J. E. Tennent. **எழுதிய** 'Ceylon an account of the Island Physical, Historical Tapographical' **என்ற நூலின் இரு தொகுதிகளிலிருந்தும் அறிந்து கொண்டவை. இக்கதையில் வரும் காசிபனை ஐந்தாம் காசிப மன்னன்** Kasyapa V **என்று சரித்திரம் கூறும். இதில் வரும் சில ஊர்களையும் வழிகளையும் கூட மேற்கண்ட நூலின் முதல் பாகத்திலுள்ள புராதன இலங்கையின் வரை படம் கொண்டு விளக்கமாக அறியலாம்.**






கரையில் மோதும் ஒலியும், ஊழியர்கள் கப்பலை இழுத்து நங்கூரம் பாய்ச்சும் போது பாடும் ஒருவகைப் பாட்டின் கூட்டமான குரல்களும் கேட்டன. வைகறைக் காலத்தின் சீதமென்காற்று உடலைத் தழுவித் தண்மை பூசிச் சென்றது. கடற் பறவைகளின் குரல்களும் கேட்டன.

குமாரபாண்டியன் இராசசிம்மன் உறக்கம் கலைந்து புரண்டு படுத்தான். கண் இமைகள் கனத்துப் போய் விழிகளுக்குள் எரிச்சலாக இருந்தது அவனுக்கு.

"இளவரசே! எழுந்திருங்கள்; கரை வந்து விட்டது" என்று மெல்லத் தட்டி எழுப்பினார் சக்கசேனாபதி. குமார பாண்டியன் கண்களைத் திறந்தான்.

அடடா! என்ன அற்புதமான காட்சி அவன் கண்களுக்கு



முன் விரிகிறது! நீலக்கடல் முடியுமிடத்தில் தரைமேல் ஒரு பசுமைக் கடல் தென்படுகிறதே! கரைக்கு மேல் கண் பார்வை எட்டிப் பிடிக்கிற தொலைவு வரை அடர்ந்தியான பசுமைக் காடு தெரிகிறது. கரைமேல் பிரயாணத்துக்கு ஏற்ற முறையில் அலங்கரிக்கப்பட்ட இரண்டு உயர்ந்த சாதிக் குதிரைகளோடு காலைந்து வீரர்கள் நின்று கொண்டிருப்பதையும் இராசசிம்மன் பார்த்தான்.

"சக்கசேனாபதி! காசிபமன்னர் வர வில்லைபோலிருக்கிறது! யாரோ வீரர்கள் தான் குதிரையோடு வந்து காத்திருக் கிறார்கள். இவர்கள் எப்படி இவ்வளவு கணக்காக நாம் இன்று வருவோமென்று தெரிந்து கொண்டார்கள்? நாம் இந்தத் துறையில் இறங்குவோ மென்று இவர் களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான் குமார பாண்டியன்.

"நான் இங்கிருந்து புறப்படும்போதே இரண்டு மூன்று நாட்களைக் குறிப்பிட்டு அதில் ஏதாவது ஒரு நாள் வருவதாகச் சொல்லிவிட்டுத் தான் இடையாற்று மங்கலத்துக்கு உங்களைச் சந்திக்க வந் தேன். எந்த இடத்தில் இறங்குவதென்று அப்போது நான் உறுதி செய்யாததால் மாதோட்டம், புத்தளம் இரண்டு இடங் களிலும் தொடர்ந்து இரண்டு மூன்று நாட்கள் குதிரைகளும் ஆட்களும் காத் திருக்குமாறு ஏற்பாடு செய்து விட்டு வந்தேன். காசிப மன்னர் இன்றைக்கு அநுராதபுரத்தில் இருப்பார். நாம் அநு ராதபுரத்தில் அவரைச் சந்திக்கலாம். அடடா! உங்களிடம் நான் முன்பே சொல்ல மறந்து விட்டேனே? நாளைக்குக் காசிபமன்னரின் பிறந்த நாள். **வெள்ளணி விழா**வாகிய நாண்மங்கலத் திருநாளைக் கொண்டாட அநுராதபுரத்தில் பிரமாத மான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக் கும். தம்முடைய வெள்ளணி விழா வன்று பௌத்த பிட்சுக்களையெல்லாம் அவர்கள் இருப்பிடம் சென்று வணங்கி ஆசிபெற வேண்டுமென்றுதான் கோநகர மாகிய பொலன்னறுவையில் கொண் டாடவேண்டிய விழாவை அநுராத புரத்துக்கு வந்து கொண்டாடுகிறார்."

"சக்கசேனாபதி! அந்த ஒரு நாளி லாவது உள்ளும் புறமும், வெள்ளையாகத் தூய்மையோடு இருக்க எண்ணிப் பிறந்த நாளை வெள்ளணி விழாவாக அமைத் திருக்கும் நம் முன்னோர் மரபு எவ்வளவு அற்புதமானது பார்த்தீர்களா? வாழ் நாளெல்லாம், பொய்க்காக வாழ்ந்தாலும் அந்த 'ஒரு நாளாவது உண்மைக்காக வாழு' என்று அறிவுறுத்துவது போலல் லவா அந்தப் பெயரை வைத்திருக் கிறார்கள்!" என்று சிரித்துக்கொண்டே கூறினான் இராசசிம்மன்.

"இளவரசே! தென்பாண்டி நாட் டுக் குரியவர் என்பதை நீங்கள் தமிழைப் பற்றிப் பேசும்போதெல்லாம் நிரூபித்து விடுகிறீர்கள். நேற்றுக் கப்பல் மேல் தளத்தில் நின்று கொண்டு பாடிய கவிதையோ உங்கள் நாவன்மையையும் எனக்குப் புரிய வைத்து விட்டது. உங்கள் கவித்திறனைப் பற்றி இதுவரை காசிப மன்னருக்குத் தெரியாது. தெரிந்தால் மிகவும் பெருமைப்படுவார்."

அவர்கள் இப்படிப் பேசிக் கொண் டிருக்கும்போதே கப்பல் முழுமையாக நங்கூரம் பாய்ச்சப்பட்டுக் கரையை அணுகியிருந்தது.

"இங்கிருந்து அநுராதபுரம் வரையில் நாம் குதிரையில்தான் போக வேண்டும். கடற் காய்ச்சலோடு உங்களால் குதிரைப் பயணம் செய்ய முடியுமா என்று நான் தயங்குகிறேன்" என்று கூறி அருகில் நெருங்கிக் குமார பாண்டியனின் நெற்றி யையும், மார்பையும் தொட்டுப் பார்த் தார் சக்க சேனாபதி.

"அது ஒன்றும் எனக்கு அவ்வளவு சிரமமான காரியமில்லை. பசுமையும், வனப்பும், குளிர்ச்சியும் நிறைந்த இந்தக் காட்டு வழியில் பயணம் செய்யும்போது கடற் காய்ச்சலையே மறந்து விடுவேன் நான். உங்கள் நாட்டின் வனங்களில் வழிநெடுகப் பௌத்த ஆலயங்களும், பிட்சுக்களின் சாது சங்கங்களும் நிறைய இருக்குமே. அன்புள்ள இடங்களும், அன்பு நிறைந்த மனிதர்களும் இருக்கும் போது துன்பங்களை யாராவது பொருட் படுத்துவார்களா?"

"அப்படியானால் இறங்கி வாருங்கள். அதோ குதிரைகளை வைத்துக் கொண்டு நம்மை எதிர்பார்த்துக் காத்திருக்கின் றார்கள். நாம் போகலாம்."

"நாம் போவது சரி; கப்பல் அறைக்குள் இருக்கும் பாண்டி நாட்டு அரசுரிமைப் பொருள்களை முதலில் பத்திரமாகக் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டுமென் பதை மறந்து விட்டீர்களா?"

"அதைப்பற்றித் தங்களுக்குக் கவலையே வேண்டாம். இளவரசே! கப்பல் ஊழியர்

நாண்மங்கலம், வெள்ளணி விழா, என்பன அரசன் பிறந்த நாளைக் குறிக்கும்

ஆதாரம்: புறப்பொருள் வெண்பாமாலை - பாடாண் படலம் 212-ம் கொளு

எண்ணிலாத கேசத் தைலங்கள் இருப்பினும் எளிதாக உங்கள் கேசத்திற்குக் கருமையூட்டுவது "லோமா" ஒன்றே

என்கிறார் கண்ணியமான விற்பனையாளர்






# லோமா

இது சாயச் சரக்கல்ல; கேசக் கருமைக்கும் கேச அலங்காரத்திற்கும் உகந்த உன்னதமான அழகு சாதனம். தரத்திலுயர்ந்த கேசத் தைலங்களில் இருக்க வேண்டிய விசேஷப் பொருள்கள் லோமா விலும் அடங்கியுள்ளன.

ஏகபோக ஏஜெண்டுகள்:

**எம். எம். கம்பாட்வாலா, அகமதாபாத் 1.**

ஏஜெண்டுகள்

**வி. நரோத்தம் அண்ட் கோ., பம்பாய்-2.**

TAM.MPS

சென்னை ஏஜண்டுகள் ஜே. பாலபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜண்டுகள் . சிகுல் கதீர் & கோ., 41 & 43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11

களும், நம்மை வரவேற்க வந்திருக்கும் ஈழநாட்டு வீரர்களும் அவற்றைப் பாதுகாப்பாக எடுத்துச் சென்று அரண்மனையில் சேர்த்து விடுவார்கள். அதற்கு நான் சொல்லி ஏற்பாடு செய்து விடுகிறேன்" என்று சக்கசேனாபதி உறுதிமொழி கூறியதும்தான் குமாரபாண்டியனுக்கு மனச் சமாதானம் ஏற்பட்டது.

கப்பலிலிருந்து இறங்கி ஈழநாட்டு மண்ணில் கால் வைக்குமுன் கடைசியாகத் திரும்பிப் பார்த்தான் இராசசிம்மன். கடந்து வந்த கடல் ஆர்ப்பரவம் செய்து கொண்டிருந்தது. நீலமென்று அந்தப் பெரிய கடல் முழுதும் தன் தாய் வடித்த கண்ணீரோ என அவன் மனத்தில் ஒரு பிரமை எழுந்தது. துயரத்தை மனத்துக்குள்ளேயே அடக்கிக் கொண்டு மேல் தளத்திலிருந்து கீழே சென்று சக்கசேனாபதியுடன் கரையில் இறங்கினான்.

"சக்கசேனாபதி! இந்த இடத்தில் கடல்துறை மிக அழகாக இருக்கிறதே! இதற்கு முன் சிலமுறை உங்கள் நாட்டுக்கு வந்திருந்தும் இதைப் பார்க்கும் வாய்ப்பு எனக்கு ஏற்படவே இல்லையே!" என்று அந்தப் பகுதியின் அழகைப் பார்த்து வியந்து வினவினான் இராசசிம்மன்.

"இதுவரை பார்க்க வாய்ப்பில்லாமற் போனதால்தானே இப்போது உங்களால் இதைப் பார்த்து வியக்க முடிகிறது. இளவரசே! இந்தப் புத்தளம் துறைக்குப் பழைமையான பெயர் தமனன் தோட்டம்' என்பதாகும். உங்கள் நாட்டில் கடற்கரைத் துறைகளெல்லாம் பாலைவனம் போல் மணல்வெளிகளாகவோ, வறண்ட பனைமரக் காடுகளாகவோ இருக்கின்றன. ஆனால் இங்கே கடற்கரையிலும் பசுமை வளம் இருக்கும் துறைகள் உண்டு. அதனால்தான் அவற்றை மா(ந்)தோட்டம், தமனன் தோட்டம் என்றெல்லாம் வளமாகப் பெயர் சூட்டி அழகாக அழைக்கின்றோம் நாங்கள்."

"ஏதேது? உங்கள் நாட்டு மண்ணுக்கு வந்து இறங்கியவுடன் தற்பெருமை பேசும் பண்பு உங்களைப் பற்றிக்கொண்டு விட்டதே? உங்கள் இலங்கையை நீங்களே புகழத் தொடங்கி விட்டீர்களே?" என்று சக்கசேனாபதியை வம்புக்கு இழுத்தான் இராசசிம்மன். ஆனால் அவரோ பேச்சை வேறு திசைக்குத் திருப்பினார். "இளவரசே! செம்பவழத் தீவில் ஏதோ ஒரு சோழ நாட்டுக் கப்பலைப் பார்த்ததாக நீங்கள் கூறினீர்களல்லவா? அந்தக் கப்பலைப் பற்றி பெரும் சில சந்தேகங்கள் இன்னும் என் மனத்தில் நீங்காமல் இருந்து கொண்டே பயமுறுத்துகின்றன. எந்த வகையிலாவது சூழ்ச்சி செய்து உங்களைத் துன்புறுத்துவதற்கென்று சோழ நாட்டு ஆட்கள் அந்தக் கப்பலில் மறைவாகப் பின்தொடர்ந்து வருகிறார்களோ என்று நான் சந்தேகப்படுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே குமார பாண்டியனின் முகத்தை உற்றுப் பார்த்தார் சக்கசேனாபதி. அவர் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் இராசசிம்மன் திகைத்தான். அவன் முகத்தில் மருட்சியும், அச்சமும் தென்பட்டன. சக்கசேனாபதியால் அவ்வளவு சரியாக எப்படி அனுமானிக்க முடிந்தது என்றே அவன்



"என்ன சார்! காகிதப்பூ வாங்கிண்டு போறேளே!"
"என் ஒயிப் ட்ரெஸ் பண்ணிண்டு கிளம்பறதுக்குள்ளே நிஜப்பூ வாடிப் போயிடுமே."



"படங்களில் நடிச்சுக்கிட்டிருந்தீங்களே! விட்டுட்டீங்களா அந்தத் தொழிலை?"
"ஆமாம்! புரொட்யூஸர்கள் பணம் கொடுக்காம ஏமாத்திட்டாங்க!"
"இப்போ என்ன பண்ணறீங்க?"
"படம் ப்ரொட்யூஸ் பண்றேன்!"



இன்ஸ்பெக்டர்: (பழக்கப்பட்ட திருடனைப் பார்த்து) என்னப்பா கைநீளம்! இந்த வாட்டி என்ன எடுத்தே?
திருடன்: கைக்குட்டைங்க!



இன்ஸ்பெக்டர்: என்னய்யா! பத்து நாளைக்கு முந்தி, வீட்டிலே கட்டில், மெத்தை எல்லாம் திருட்டு போயிடுத்துன்னு இப்போவந்து கம்ப்ளெயிண்ட் பண்ணறியே! இத்தனை நாள் என்ன தூங்கிக்கிட்டா இருந்தே?

வியந்தான். தான் தற்செயலாக அந்தச் சோழ நாட்டுக் கப்பலைப் பற்றிக் கூறியதை அவர் ஏன் இன்னும் மறக்காமல் நினைவு வைத்துக் கொண்டு கவலைப்படுகிறார் என்பதுதான் அவனுக்குத் திகைப்பை அளித்தது.

"சக்க சேனபதி! அந்தக் கப்பல் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? நமக்கு இனிமேல் அதைப் பற்றிக் கவலை இல்லை. நாம்தான் வரவேண்டிய இடத்துக்குப் பத்திரமாக வந்து சேர்ந்து விட்டோமே!" என்று அவரிடம் பதிலுக்குக் கேட்டான் அவன்.



"அப்படியல்ல, இளவரசே! எப்போது நம் பகைவர்களின் கப்பல் நம்முடைய வழிகளில் தென்பட்டு விட்டதோ, அப்போதே அது கடைசிவரை நம்மைப் பின் தொடரலாம் என்று நாம் சந்தேகப்பட வேண்டியதுதான். அந்தமாதிரிக் கப்பல்கள் எவையேனும் வந்தால் தடுத்து நிறுத்தி அதிலிருக்கும் ஆட்களைச் சிறைப்பிடிக்குமாறு ஏற்பாடு செய்துவிடுவதற்காகத்தான் உங்களைக் கேட்கிறேன்! அந்தத் தடுப்பு ஏற்பாட்டை இப்போதே இங்கேயே செய்து விடுவேன் நான்."

"அந்தமாதிரி ஒரு ஏற்பாடு நீங்கள் செய்ய முடியுமானால் நல்லதுதான்" — என்று அதற்கு ஒப்புக் கொண்டான் குமார பாண்டியன். உடனே சக்க சேனபதி அங்கிருந்த கடல்துறை ஆட்களிடம், "நான் சொல்வதைக் கவனத்தில் வைத்துக் கொள்ளுங்கள்! இந்த இடத்திலோ அல்லது மாதோட்டத்திலோ இறங்குவதற்காக இன்றிலிருந்து இன்னும் சில நாட்களுக்குள் தமிழ் நாட்டுக் கப்பல்கள் எவையேனும் வந்தால் அவற்றைத் தடுத்து நிறுத்தி வைத்துக் கொண்டு எங்களுக்குத் தகவல் அனுப்ப வேண்டும். இந்தக் கட்டளை அவசரமும், அவசியமும் வாய்ந்தது. நினைவிருக்கட்டும்" என்று கண்டிப்பான குரலில் உத்தரவிட்டார். பின்பு குதிரைகளோடு காத்திருந்த ஈழ நாட்டு வீரர்களிடம், "நீங்களும் கப்பல் ஊழியர்களுமாகச் சேர்ந்து கப்பல் அறையில் இருக்கும் பாண்டிய நாட்டு அரசுரிமைப் பொருள்களைத் தக்க பாதுகாப்புடன் அரண்மனையில் கொண்டு போய்ச் சேர்த்துவிட வேண்டும்" என்று வற்புறுத்திக் கூறினார். குமாரபாண்டியனின் வரவை அநுராதபுரத்திலிருக்கும் காசிப மன்னருக்கு முன் சென்று அறிவிப்பதற்காக அவர்கள் இருவரும் புறப்படுவதற்கு முன்பே ஒரு வாலிப வீரன் குதிரையிற் பறந்தான்.

அங்கே பசுமையான தென்னை மரங்களுக்கு நடுவே மிகப் பெரிய தேங்காய்க் குடு பொன்னைறக் குடுமி போடு தலைகீழாகக் கவிழ்த்தது போல் வெண்ணிறத்துடன் கூடிய பௌத்தவிகாரக் கட்டடம் ஒன்று தெரிந்தது. குதிரையில் ஏறிக் கொள்வதற்கு முன்னால் அந்த ஆலயத்துக்குப் போய்க் குமார பாண்டியனும், சக்க சேனபதியும் புத்தர் பெருமானை வணங்கி விட்டு வந்தார்கள்.

மொட்டைத் தலையும் ஒளி நிறைந்த மஞ்சள் நிற ஆடையுமாகக் காட்சியளித்த புத்தபிட்சு ஒருவர் அந்த ஆலயத்தில் இருந்தார். அவர்களை அன்புடன் வரவேற்று. "உங்களுடைய பிரயாணம் சுகம் நிறைந்ததாக இருக்கட்டும்!" என்று புன்னகையோடு வாழ்த்துக் கூறி அனுப்பினார் அவர்.

குதிரைகள் புறப்பட்டன. வெய்யில் படாத காட்டில் விரைவாகச் செல்ல வல்ல சாதிப் புரவிகளில் பயணம் செய்வது காற்றில் பறப்பது போல் இன்பமாக இருந்தது. நண்பகல் நேரத்துக்கு ஒரு காட்டுச் சிற்றூரில் இருந்த பிட்சுக்களின் சங்கம் ஒன்றில் தங்கி நாட் கடன்களையும், உணவையும் முடித்துக் கொண்டனர். பழகிய மனிதருக்கே வழிகள் மறந்து போகக் கூடிய காடு அது! கொஞ்சம் வழி தவறி, இடம் தவறி நடுக்காட்டில் போய் மாட்டிக் கொண்டால் கூட்டம் கூட்டமாகத் திரியும் யானை மந்தைகளில் சிக்கித் திண்டாட வேண்டியதுதான்.

"இளவரசே! இருட்டுகிற சமயத்தில் எந்த ஊர் வருகிறதோ அங்கே தங்கி விட்டு மறுபடியும் காலையில் பயணத்தைத் தொடங்கி அரசருடைய வெள்ளணி விழாவுக்கு அநுராதபுரம் போய் விடுவோம். இந்தக் காடுகளில் இரவுப் பயணம் ஆபத்தானது!" என்றார் சக்க சேனபதி. குமார பாண்டியன் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. "கண்ட இடங்களில் தங்கித் தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டு கிடப்பதைவிட இரவிலும் பயணம் செய்தால் சற்று முன்பாகவே போய் அரசருடைய நாண்மங்கலத்தில் கலந்து கொண்டு வெள்ளணிக் கோலத்தில் அவரைக் கண்டு மகிழலாம்" — என்றான் அவன்.

"இரவில் தங்கி விடுவதற்கு இந்த நாழிகை இருக்கும்போது புறப்பட்டாலும் விழாவுக்கு நாம் போய்விட முடியும். இந்தப் பக்கத்துக் காடுகளின் நிலவரத்தை நன்கு தெரிந்துகொண்டு நான் சொல்லுகிறேன். என் வார்த்தையைத் தட்டாதீர்கள். இரவுப் பயணத்துக்கு இந்தக் காடு ஏற்றதில்லை" என்றார்

I: OSR

மீண்டும் இராசசிம்மனைக் கெஞ்சினார் அவர். அவனோ 'இரவே போக வேண்டும்' என்று பிடிவாதமாக ஒற்றைக் காலில் நின்றான்.

அப்போது மாலை மயங்குகிற நேரம் ஆகியிருந்தது. ஆதிபுரம் என்ற ஊரைக் கடந்து வடகிழக்காக அனுராதபுரத்துக்குச் செல்லும் காட்டுப் பாதையில் அவர்களுடைய குதிரைகள் சென்று கொண்டிருந்தன. அப்போது அவர்கள் சென்று கொண்டிருந்த பகுதி மிக மிக அடர்ந்த பயங்கரமான வனப் பகுதி. **நாகராசப் பெருவனம்** என்று வழங்கும் அந்த இருண்ட காட்டில் அவர்கள் புகுந்த போது கதிரவன் மறைந்தான். ஏற்கெனவே இருந்த இருள் பெருகிக் கனத்தது.

குமார பாண்டியனின் பிடிவாதத்தை எண்ணி மனம் வருந்திய சக்கசேனபதி, "கருணை நிறைந்த எங்கள் புத்தர் பெருமானே! எங்களுக்கு ஒரு துன்பமும் நேராமல் காப்பாற்றுங்கள்" என்று மனத்தில் தியானம் செய்தவாறே குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்தார். காட்டில் அங்கங்கே பிரும்மாண்டமான புத்தர் சிலைகளையும், பௌத்த விஹாரங்களையும் கண்டபோதெல்லாம் திரும்பத் திரும்ப இந்த ஒரே தியானம்தான் ஈழ நாட்டுப் படைத் தலைவரின் மனத்தில் உண்டாயிற்று.

காட்டில் ஓரிடத்தில் பௌத்த விஹாரத்தில் விளக்கேற்றிக் கொண்டிருந்த புத்தபிட்சு ஒருவர் விளக்கோடு ஓடி வந்து அவர்கள் குதிரைகளை வழி மறித்து நிறுத்தினார். விளக்கோடு பதறிப் போய் ஓடி வந்த அவரைக் கண்டு என்னவென்று அறிந்து கொள்ளும் ஆவலுடன் அவர்களும் குதிரைகளை நிறுத்தினார்கள். "பெரியவரே! நான் சொல்வதைக் கேளுங்கள். இந்த இருட்டில் பயணம் வேண்டாம். என்னோடு நீங்களும் இந்த இளைஞரும் இந்தப் பௌத்த விஹாரத்தில் தங்கிவிட்டு அதிகாலையில் போகலாம். நான் கூட அரசரின் வெள்ளணி விழாவைக் காண்பதற்காகக் காலையில் அனுராதபுரம் புறப்படலாமென்றிருக்கிறேன்" என்று சக்கசேனபதியை நோக்கிச் சொன்னார் புத்த பிட்சு. சக்கசேனபதி, இராசசிம்மனின் முகத்தைத் திரும்பிப் பார்த்தார்.

"அடிகளே! உங்களுடைய அன்புக்கு நன்றி. பயத்தை நாங்கள் மறந்து விட்டோம். எங்களுக்கு அவசரமாகப் போக வேண்டும். புதிய இடத்தில் இந்தக் காட்டுக் குளிரில் எங்களுக்கு உறக்கம் வரப் போவதில்லை. ஆகவே எங்களுக்கு விடை கொடுங்கள்" என்று இராசசிம்மனே முகத்திலடித்தாற் போல் மறுத்துப் பதில் சொல்லிவிட்டான் அவருக்கு.

"உங்கள் விருப்பம் அதுவானால் சரி! மறுப்பதற்கு நான் யார்?" என்று வழியை விட்டு விலகி நின்று கொண்டார் புத்த பிட்சு. குதிரைகள் மீண்டும் ஓடின.

"இளவரசே! அந்தப் புத்த பிட்சு வழியில் ஓடி வந்து கூறியதைக் கேட்டீர்களா? இந்தக் காடுகளைப் பற்றி விவரம் தெரிந்தவர்கள் யாரும் நம்முடைய பிரயாணத்தை அனுமதிக்க மாட்டார்கள்" என்றார் சக்கசேனபதி. அதற்குக் குமாரபாண்டியன் மறுமொழி கூறவில்லை. அந்தச் சமயத்தில் தொலைவில் எங்கோ கூட்டமாக யானைகள் பிளிறும் ஒலி காடு முழுதும் எதிரொலித்தது. மேலே தலையில் இடிக்கிறாற் போல மரக் கிளைகள் பின்னிப் பிணைந்திருந்த ஒரு பகுதியில் தேர் வடம் போலப் பெரிய மலைப் பாம்பு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. கூர்ந்து பார்த்து அதைக் கண்டு கொண்டார் சக்கசேனபதி. இராசசிம்மன் அதன் மேலே

இடித்துக் கொள்கிறாற் போலக் குதிரையைச் செலுத்திக் கொண்டு போவதற்கு இருந்தான். நல்லவேளையாகச் சக்கசேனபதி அவனைத் தடுத்து நிறுத்திக் குதிரையை விலக்கிச் செலுத்திக் கொண்டு போகச் செய்தார். வனத்தின் அடர்ந்த பகுதிக்குள் போகப் போகத்தான் தன்னுடைய துணிவு அசட்டுத்தனமானதென்று இராசசிம்மனுக்குப் புரிந்தது. அப்போதே சக்கசேனபதி சொன்னதைக் கேட்டிருக்கலாமென்பதை அவன் உணரலானான். இரண்டாவதாக அந்தப் புத்த பிட்சு வந்து தடுத்த போதாவது கேட்டிருக்கலாமே என்று தன்னையே நொந்து கொள்ளும் நிலை அவனுக்கு ஏற்பட்டது. பயங்கரமான காட்டு மிருகங்களின் கூக்குரல்களெல்லாம் பாதைக்கு மிக அருகில் கேட்கத் தொடங்கின. இருவரும் ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளாமலே குதிரைகளைச் செலுத்திக் கொண்டிருந்தனர். இருள் ஒருவர் முகத்தை மற்றொருவர் பார்க்க விடாமல் செய்தது. 'இளங்கன்று பயமறியாது என்பது சரியாகத்தான் இருக்கிறது. அப்போதே கண்டித்துச் சொல்லித் தடுக்காமல் உடன் புறப்பட்டது என் தவறு!' என்று சக்கசேனபதி சிறிது சினத்தோடு நினைத்தார். அவருடைய கண்களின் பார்வை கூர்மையாகி எதிரே வழியையே உற்றுப் பார்த்துக் கொண்டு வந்தன.

'இன்னும் சிறிது தொலைவு சென்றால் தென் கிழக்கே விசிதபுரத்திலிருந்து அநுராதபுரத்துக்கு வரும் சாலையொன்று காட்டுச் சாலையோடு ஒன்று கூடும். அந்த இடத்துக்குப் போனதும் இளவரசரைக் கடுமையாகக் கண்டித்து விசிதபுரத்துக்குக் குறுக்கு வழியாக அழைத்துப் போய்விட வேண்டும்' என்று மனத்துக்குள் திட்டமிட்டிருந்தார் சக்கசேனபதி. விசிதபுரத்தில் ஆயிரம் பிட்சுக்களை உறுப்பினர்களாகக் கொண்ட மகா பௌத்த சங்கம் ஒன்று உண்டு. அந்தச் சங்கத்தின் தலைவர் தத்துவசேன அடிகளைச் சக்கசேனபதிக்கு நன்கு தெரியும். அங்கே தங்கிவிட்டு விடிந்ததும் அநுராதபுரப் பயணத்தைத் தொடரலாமென்பது அவர் திட்டமாயிருந்தது. ஆனால் அந்தத் திட்டப்படி எதுவும் நடைபெறவில்லை. முற்றிலும் வேறான பயங்கர நிகழ்ச்சி ஒன்று நடந்தது.

காட்டுச்சாலையும், விசிதபுரத்துச் சாலையும், சந்திக்கிற இடம் வந்தபோது இடிமுழக்கம் போல யானைகள் பிளிறும் ஒலிகளும், மரக்கிளைகள் முறிகிற சத்தமும் காடே கிடுகிடுக்கும்படி எழுந்தன.

“இளவரசே! குதிரையை நிறுத்துங்கள்...” என்று கூச்சலிட்டார் சக்கசேனபதி. குதிரைகள் நின்றன. எதிரே வழியை மறிக்கிறாற்போல் பத்திருபது கருங்குன்றுகள் நீண்ட தந்தங்களை ஆட்டிக் கொண்டு நின்றன. அந்த யானைகளின் தந்தங்கள் அவ்வளவு இருட்டிலும் 'பளிச்'சென்று தெரிந்தன. சக்கசேனபதி, “பேசாமல் நான் செய்வது போல் செய்யுங்கள்” என்று இராசசிம்மனிடம் கூறிவிட்டுக் குதிரைமேல் எழுந்து நின்றார். அப்படி நின்றவுடன் மேலே தாழ்வாக இருந்த ஒரு மரக்கிளை அவர் கைகளுக்கு எட்டியது. அதைப் பற்றிக் கொண்டு மரத்தில் ஏறினார் அவர். இராசசிம்மனும் அதே வழியைப் பின்பற்றி அதே மரத்தில் ஏறினான். யானைகளின் மதம் மரக்கிளைகளைச் சாடிக் கொரண்டிருந்தது. “உயிரைப் பற்றி உறுதியாக நம்புவதற்கில்லை. குலதெய்வங்களைத் தியானித்துக் கொள்ளுங்கள்! விதி இருந்தால் பிழைப்போம்” என்று நடுங்கும் குரலில் குமாரபாண்டியனுக்குச் சொன்னார் சக்கசேனபதி. தங்கள் உயிர்களைப் பற்றி அவர்கள் நம்பிக்கை இழந்து விட்ட அந்தச் சமயத்தில் விசிதபுரத்துச் சாலையில் ஒரு பெரிய ஆச்சரியம் நிகழ்ந்தது.

(தொடரும்)

## அருள் வாக்கு

வட நாட்டில் சுப்ரமண்யக் கடவுளைக் கார்த்திகேயன் என்றும் குமாரஸ்வாமி என்று அழைக்கின்றனர். தமிழ் நாட்டிலோ முருகன், குமரன், சுவாமிநாதன் என்று பல பெயர்களுடன் விளங்குகிறார். திருமாலின் மருமகனாக விளங்குவதால் அருணகிரிநாதர் மரு..கன் என்று அன்புடன் அழைக்கிறார். தமிழ் நாட்டின் தவப்புதல்வரான ஞான சம்பந்தர் ஸ்ரீ முருகனின் அம்சமாகவே விளங்கினார். அக்காரணத்தாலேயே பார்வதிதேவியார் ஞானப்பால் ஊட்டினார். அக்கடவுளை தியானிப்பதால் மனிதனுக்கு உலகில் எல்லா பயங்களும் விலகி மோக்ஷமும் கிட்டும் என்பதில் ஐயமில்லை.

—ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சி காமகோடி பீடம்

# இப்பொழுது என் உற்சாகத்திற்கு அளவேயில்லை!

வயிற்றுக் கோளாறு
களின்பொழுது

**ஈனோ**

சாப்பிட்டால்
சீக்கிரமே சுகம்
அனுபவமாகும்!






மிதமாக பேதி ஏற்பட விரும்பினால், காலி வயிற்றில் சிறிது பெரிய டோஸ் ஈனோ அருந்தினால் போதும்

அஜீரணக் கோளாறுகளினால் மந்த உணர்ச்சியும், உற்சாகமின்மையும் ஏற்பட்டாலும், மிதமிஞ்சி புசித்தாலும், ஈனோ சாப்பிட்டு நிவாரணம் பெறுங்கள்! ஈனோ சீக்கிரமே வேலை செய்ய ஆரம்பிக்கும். அது வயிற்றிலுள்ள அமித அமிலங்களை அடக்கி, தேக உஷ்ணத்தைத் தணித்து, உங்களை புத்துணர்ச்சியும், உற்சாகமும் பெறச் செய்யும்!

அருந்துவதற்குச் சுகமான ஈனோ அமித அமிலங்களை அடக்கும் சக்தி வாய்ந்தது. அது சிறு குழந்தைகள் முதற்கொண்டு பெரியவர்கள் வரை குடும்பத்தில் யாவருக்கும் ஏற்றது. வயிற்றுக் கோளாறுகள், அஜீரணம் மற்றும் உற்சாகமின்மையிலிருந்து துரித நிவாரணம் பெற ஈனோ சாப்பிடுங்கள்!

**ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'** உங்களை தெம்புடன் வைக்கும்

'ஈனோ' மற்றும் 'ப்ரூட் ஸால்ட்' என்ற வார்த்தைகள்
ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்
குரூப் லாபரேட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

# நாட்டு வைத்தியம்

## ஸ்ரீ ஹரி

### 98. சித்தர் அருளியவை

சித்தர்கள் தமிழில் இயற்றிய வைத்திய நூல்களிலிருந்து யானைக்கால், அது சம்பந்தமான ஜுரம், வீக்கம் ஆகியவற்றில் உபயோகமாகும் சில நல்ல முறைகள் கிடைக்கின்றன.

இலுப்பை என்றொரு மரம். இதன் பூவைப் பற்றி 'ஆலையில்லா ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை' என்று ஒரு பழமொழியும் இருக்கிறதல்லவா? அந்த இலுப்பையின் பூ யானைக்கால் வீக்கத்தில் பயன்படுகிறது.

1. காய்ந்து போன இலுப்பைப் பூவை வதக்கி இவ் வீக்கத்துக்கு ஒற்றடமிடுவது நல்லது. இதனால் வீக்கமுள்ள இடத்தில் வேர்வை தோன்றும். வீக்கம் குறைந்துகொண்டே வரும்.

2. இப் பூவையே ''உபநாஹம்'' என்ற முறையில் உபயோகிப்பதும் நல்லது. காய்ந்து போன இலுப்பைப் பூவை வதக்கி, வீக்கமுள்ள இடத்தின் மேலிட்டுப் பஞ்சினால் மூடிக் கட்டு கட்டி விடவும். இரவு படுக்கப் போகும்போது இவ்விதம் கட்டி வைத்துக் காலையில் கட்டை அவிழ்த்துச் சுத்தம் செய்துவிடவும். இவ்விதம் செய்வதை உபநாஹம் என்பர். இலுப்பைப் பூவினால் உபநாஹம் செய்வதால் யானைக்கால் வீக்கம் மிகவும் கணிசமாகக் குறையும். சிலருக்கு இரவு படுக்கும் முன் ஒருதரம் கட்டிக் காலையில் கட்டை அவிழ்த்துச் சுத்தமாக்கிச் சிறிது நேரம் காற்றூட விட்டு, மறுபடியும் ஒரு தரம் இதே போல் உபநாஹம் கட்டு கட்டி வைப்பது. இதை மாலை 6-7 மணிக்கு அவிழ்த்து விட்டுச் சிறிது நேரம் காற்றூட இருந்தபின் மறுபடியும் இரவு படுக்கப் போவதற்கு முன் உபநாஹம் கட்டுவது என்று இப்படிச் செய்யவும் வேண்டி வரலாம். இது வீக்கத்தின் கடுமையையொட்டித் தீர்மானிக்க வேண்டியதாகும்.

3. கரிசலாங்கண்ணி என்று ஒரு பூண்டு. இதைக் கரிசனாங்கண்ணி, கரிசாலை, கையாந்தகரை என்று பல பெயர்களால் அழைப்பர். இதில் மஞ்சள் பூ உள்ள ஒரு வகையுண்டு. இதை மஞ்சக் கரிசாலை - மஞ்சக் கரிசலாங்கண்ணி - பொற்றலைக் கையாந்தகரை என்றெல்லாம் அழைப்பர்.

பொற்றலைக் கையாந்தகரையின் இலையைச் சிறிது நல்லெண்ணெய் விட்டுக் கல்கம் போல் அரைத்து யானைக்கால் வீக்கத்தின்மேல் பற்றிடவும். வீக்கம் குறையும்.

4. கழற்சிக்காய் எனப்படும் கச்சக் காயைச் சிலர் கழக்கொடி என்று அழைப்பர். கடையில் விற்கப்படுகிறது. இதன் மேலோட்டை நீக்கி உட்பருப்பை உபயோகித்தல் வேண்டும். கழற்சிப் பருப்பு, சுக்கு, களிப்பாக்கு ஆகியவற்றை முறையே மூன்று, இரண்டு, ஒன்று என்னும் எடையில் எடுத்துக் கோழி முட்டையின் வெள்ளையை விட்டுக் கறுப்புக் கறுங்கல்லில் மை போல் அரைத்துப் பற்றிடுவதால், யானைக்கால் வீக்கம், முக்கியமாகவும் ''தசையண்டம்'' எனப்படும் [யானைக்கால் சம்பந்தமான விரை வீக்கம்] குணமாகும். ''கரைந்து போவதைக் கண்டுள்ளோம்'' என்று நூலில் தெரிவித்துள்ளார்.

5. காக்கணம் என்று ஒரு செடி. இது சிறிதளவு கொடி போலவும் படரும் இயல்பு பெற்றது. இதைக் காக்கணங் கொடி என்றும் சொல்வர். இதில் வெள்ளை நிறப் பூ, நீலநிறப் பூ என்று இரண்டு வகை யுண்டு. வெள்ளை நிறப் பூச் செடிதான் மருந்துக்குச் சிறந்தது. இதன் காய் கொத்தவரைக்காய்போல் இருக்கும். ஆனால் கொஞ்சம் சிறியதாயும் அரிவாளைப் போல் வளைந்ததாயும் இருக்கும். முற்றி நெத்தாகப் போன காயின் விதையை இளம் வறுப்பாய் வறுத்துப் பொடி செய்து உபயோகிப்பது வழக்கம். இதுதான் இவ்வித்துக்களுக்குச் சொல்லியுள்ள சுத்திக் கிரமம். மற்றப்படி ''இளம் வறுப்பாய் வறுத்து'' என்று சொன்னதற்கு வேறு விசேஷ விளக்கம் ஒன்றும் இருக்கிறது. அதை தனிக் கட்டுரையாக எழுதி விளக்குகிறேன்.

இவ்வாறு வறுத்துப் பொடித்த வெள்ளைக் காக்கணஞ் செடியின் வித்தில் ஒன்று முதல் மூன்று சிட்டிகை வரையில் [10 - 15 குன்றி எடை] உட்கொண்டால் நன்கு [தண்ணி தண்ணியாக]ப் பேதியாகும். மாத மொருமுறை இதைக் கொடுத்து வருவது யானைக் காலில் விரும்பத் தக்கது.

குறிப்பு: மிகக் குறைந்த அளவில் உட்கொண்டு, அதனால் ஏற்படும் பலனைக் கண்டு, அடுத்த முறை முதல் வேணுமானால் அளவைச் சிறிது அதிகமாகச் சேர்த்துக் கொள்ளவும்.



குருட்டுப் பிச்சைக்காரன் ஒருவன் தனியாக நின்று கொண்டிருந்தான். யாரோ வரும் சத்தத்தைக் கேட்டு, "ஐயா, பிச்சை போடுங்கள்!" என்றான். வந்தவன் அவனிடம் சென்று "இங்கே நின்று கொண்டிருக்கிறாயே! பிச்சை நிறையக் கிடைக்கிறதா?" என்று கேட்டான்.

"மற்ற இடங்களுக்கு இங்கே பரவாயில்லீங்க. உங்களைப் போல் தர்மருங்க நிறைய இங்கே வர்றாருங்க. கொஞ்சம் சில்லறை நிறையவே இங்கே கிடைக்குது!" என்றான் குருட்டுப் பிச்சைக்காரன்.

"அப்ப கொஞ்சம் நகருங்க" என்று சொல்லிக் கிழே துணியை விரித்துப் போட்டு, "ஐயா, தர்மராஜாங்களே!" என்று கத்திய வண்ணம் குருட்டுப் பிச்சைக்காரன் பக்கத்தில் வந்தவனும் அமர்ந்தான்.

6. மேற்சொன்னவிதம் தயாரித்த வெள்ளை காக்கணன் விதையின் தூள் ஏழு பங்கு, வறுத்துப் பொடித்த இந்துப்புவின் தூள் 7 பங்கு, சுக்குத் தூள் ஒரு பங்கு என நிறுத்தெடுத்த தனித் தனி தூள்களை ஒன்றுபடக் கலந்துவைத்துக் கொள்ளவும். இதில் அரை முதல் ஒரு வராகனெடை வரையில் கொடுக்க நன்றாகப் பேதியாகும்; யானைக்கால் நீங்கும். மேலே தெரிவித்த எச்சரிக்கையை மறுபடியும் நினைப்பூட்டுகிறேன்.

7. கருஞ்சீரகத்தைப் பசுவின் மூத்திரம் விட்டோ அல்லது சிறுவர்களின் சிறுநீர்விட்டோ அரைத்து வீக்கத்தின்மேல் பூசிவந்தால் யானைக்கால் வீக்கம் தீரும்.

8. யானைக்கால் வீக்கத்தின் மேல் சொறி சிரங்குகள் வெடிப்பதும், சில சமயம் படர்தாமரை [எக்ஸிமா] போல் ஏற்பட்டு நமைச்சலும் - சொறிச்சலுமாகி விரணமும் ஏற்பட்டு விடும். துர் நாற்றத்துடன் ஒருவிதக் கசிவும், அந்நீர் படுமிடமெல்லாம் புண்ணாவதும் இப்படியாகப் பெரிய தொல்லையாகி விடுவதுண்டு. இவ்விடங்களில் மட்டும் உபயோகப்படுவது செரட்டைத் தைலம். இதைத் தனித்து மேற்பூச்சாக உபயோகித்தால் பட்ட இடம் புண்ணாகிவிடக் கூடும். வீக்கமும் வலியும் அதிகமாகும். ஆனால் ஹிங்குதிரிகுண தைலத்தில் அல்லது தூர்வா (அருகம்புல்) தைலம் ஒரு அவுன்சுடன் 10 - 30 துளிகள் இச் சொட்டைத் தைலத்தைக் கலந்து [குழைத்துக் கூட்டி] அளவோடு மேலுக்கு உபயோகிக்க இவ் வகையான படர் தாமரை, படை, சொறி சிரங்குகள் விரணங்கள்கூடக் குணமாகும்.

செரட்டைத் தைலம்: [செய்வது சிரமம். ஆனால் செலவு சொற்பம்] குழித் தைல முறைப்படி செய்ய வேண்டும். ஒரு மண் தோண்டியின் அடியில் மிகச் சிறிய துவாரங்கள் 10 - 15 செய்ய வேண்டும். தோண்டியின் உள்ளே இருக்கும் திரவம் கசிந்து வெளியே வழியுமாறு இத் துவாரங்களில் மெல்லிய கம்பிகளைப் பொருத்திக் கொள்ள வேண்டும்.

முற்றின தேங்காயின் ஓடுகளை [இதைக் கொட்டாங்கச்சி என்றும் செரட்டை என்றும் அழைப்பர்.] இடித்துத் தூளாக்கிக் குடத்தில் முக்கால் பாகம் வரையில் நிரப்பவும். பிறகு குடத்தின் வாய்க்குத் தக்கதொரு மண் தட்டினால் மூடிச் சீலைமண் செய்து கொள்ளவும்.

பிறகு குடத்தின் அடிப்பாகத்துடன் பொருந்தி இருக்கத்தக்க ஒரு மண் ஜாடியை எடுத்து, குடத்தை அதன் மேல் [குடத்தினடியில் நீட்டிக்கொண்டிருக்கும் கம்பிகள் ஜாடியின் உள்ளே இருக்கும்படி] வைத்துக் களிமண் பூசிக் கெட்டிப்படுத்திக் கொள்ளவும். இதை நிழலில் காயவைத்துக் கொண்டு சுத்தமான பிரதேசத்தில் நிலத்தைக் குழியினுள் குழியாகத் தோண்டி, அடிக் குழியில் ஜாடி பொருந்தும்படியும் மேற் குழியில் மண் தோண்டி நிலைக்கும்படியும் வைத்து, சுற்றுமுற்றுமுள்ள இடைவெளியை மண்ணினால் நிரப்பி விடவும். குடத்துக்கு மேல் சுமார் ஒரு சாண் குழியில் இடைவெளி இருக்க வேண்டும். இவ்விடத்தில் வறட்டிகளை அடுக்கித் தீயிடவும். தீ எரியும்போதே குடத்திலுள்ள செரட்டைத் தூளும் தீப்பற்றி எரியும். இதினின்றும் கசியும் எண்ணெய் கம்பிகளின் வழியாக ஒழுகி மண் ஜாடியில் சேரும். மறு நாள் யாவும் நன்றாறலாகத் தணிந்த பிறகு, ஜாக்கிரதையாகச் சாம்பல் மண் முதலியவைகளை நீக்கி, குடத்தையும் எடுத்த பிறகு ஜாடியிலுள்ள கறுப்பு நிறத் திரவத்தை எடுத்துக் கண்ணாடி அடைப்புள்ள கண்ணாடி புட்டியில் வைத்துக் கொள்ளவும். இதுதான் செரட்டைத் தைலம்.



புதுமை பெறுக!
இதம் பெறுக!
நளினமாய் இருங்கள்! நாள்முழுதும்!

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோ ரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத, மனோரம்மிய மணத்துடன்.

---

# Kassels
காஸல்ஸ் விசிறியின்கீழ்

## குளுமையும் நிம்மதியும்!



| | |
|---|---|
| மாட்ச்வெல் எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிமிடெட்<br>தபால் பெட்டி 156, புது டில்லி | தொழிற்சாலைகள்: பூனா மற்றும் டில்லி.<br>பூரண விற்பனை உரிமையாளர்கள்:<br>ரேடியோ லாம்ப் ஒர்க்ஸ் லிட்.<br>பம்பாய், கல்கத்தா, டில்லி, மதராஸ்<br>கான்பூர், பங்களூர், பாட்னா<br>இந்தூர், வார்தா, கௌஹாத்தி |



# அக்பர் சாஸ்திரி

தி. ஜானகிராமன்

மாயவரம் ஜங்ஷனில் இறங்கிச் சாப்பிட்டு விட்டுத் திரும்பியபோது, வண்டியில் மூன்றுவது ஆத்மா ஒன்று என் தோல் பையையும் துணிப் பையையும் நடுவே நகர்த்தி என் இடத்தில் உட்கார்ந்து பூரி உருளைக் கிழங்கு சாப்பிட்டுக் கொண்டிருந்தது. வெறுமே சாப்பிடவில்லை. உருளைக் கிழங்கு ஒட்டிக் கொண்டிருந்த விரல்களை ஆட்டி ஆட்டிப் பேசிக் கொண்டிருந்தது. குரலாவது குரல்! தொண்டைக்குள் வெண்கலப் பட்டம் தைத்த குரல். அதிகாரமும் வயசான பெருமையும் எக்களித்துக் கொண்டிருக்கிற குரல்.

"எக்ஸைஸ் இலாக்கான்னு என்ன டெஸிக்னேஷன்?" என்று களிப்பும் அழுத்தமுமாக அந்தக் குரல் போட்ட கேள்விக்கு, அடக்கமும் புன்சிரிப்புமாக என்னமோ மேலதிகாரிக்குப் பதில் சொல்லுகிறாற் போல "சூப்ரிண்டு" என்றார் மேலண்டைக் கோடியில் இருந்தவர். சீர்காழி ஸ்டேஷனில் ஏறி உட்கார்ந்திருந்த என்னை லட்சியமே செய்யாமல் ரயில்வே கைடுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டிருந்த இந்த ஆசாமிக்குப் புது ஆசாமியைக் கண்டு என்ன மரியாதை! என்ன வினயம்!

"எதிரே 'சூப்ரிண்டின்' மனைவி காலை நீட்டிப் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தவள் கண்ணைத் திறந்து ஒரு தடவை பார்த்துவிட்டு மறுபடியும் மூடிக் கொண்டாள். காலடியில் உட்கார்ந்திருந்த குழந்தைகள் இரண்டும் உருளைக் கிழங்கு சாப்பிடுகிறவரையும் அவருக்குப் பதில் சொல்லுகிற அப்பாவையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தன.

"எங்கேருந்து வரீர்?"

"மெட்ராஸிலேருந்து!"

"பகல் வண்டியிலே மெட்ராஸிலேயிருந்து யாராவது வருவாளோ?"

"இல்லே, நேத்து ராத்திரி புறப்பட்டேன். கடலூரிலே இறங்கி, என் மருமானுக்கு உடம்பு சரியாயில்லேன்னு, பாத்துட்டு இன்னிக்கி மத்தியானம் கிளம்பினேன்."

"எதுவரையில் இப் பயணம்?"

"தஞ்சாவூருக்கு. தாயாருக்கு உடம்பு சரிப்படலே. பார்க்கப் போறேன்."

"அப்படியா?...ம்!" என்று எழுந்து இலையை ஜன்னல் வழியாக வீசி எறிந்தார் வந்தவர். காற்று வாக்கில் இலை என் மேல்பறந்து விடப் போகிறதே என்று கதவோரமாக நின்ற நான் சற்று உள்ளே நகர்ந்து கொண்டேன். வண்டி அப்போது ஸ்டேஷனை விட்டுக் கிளம்பி லெவல்-கிராஸிங்கைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தது.

அவர் கதவைத் திறந்து கொண்டு உள்ளே கையலம்பப் போனார். நடுவே நகர்த்தப்பட்டிருந்த தோல் பையையும் துணிப் பையையும் நகர்த்திக் கொண்டு காலியான என் சீட்டில் உட்கார்ந்து கொண்டேன். கையலம்பி விட்டு வாயைத் துடைத்துக் கொண்டவர் இடத்தை மீட்டுக் கொண்ட என்னை அலட்சியமாகப் பார்த்து விட்டு நடுவில் உட்கார்ந்து கொண்டார்.

"ஆள் ஆறடி உயரத்துக்குக் குறைவில்லை. இரட்டைநாடியில்லை. ஆனால் ஒல்லியுமில்லை- சாட்டை மாதிரி முறுக்கு ஏறிய உடம்பு. நேரான உடம்பு. உட்கார்ந்திருந்தபோது கூட வளையா நேர் முதுகு. கறுப்பில்லை. மாநிறமுமில்லை. அப்படி ஒரு கறுப்பு. சந்திர வளைய வழுக்கையில் ஓரம் கட்டியிருந்த தலைமயிர் முழுவதும் நரைத்திருந்தது. நீள மூக்கு, நீளக்கை, கால். குரலில் தெறித்த அதிகாரத்துக்கேற்ற உடம்புதான்.

> காரணப் பெயருடைய விந்தை மனிதர். இவர் வாழ்க்கையின் எந்தச் சிக்கலையும் தீர்த்து வைக்க யோசனை கூறும் அனுபவஸ்தர். எந்த வியாதிக்கும் அவரிடம் மருந்து உண்டு. ஆனால் ...

உட்கார்ந்துகொண்டவர் "நீ போடா கிடக்கு, சின்னப் பையா!" என்று சொல்லாமல் இலேசாக எனக்கு முதுகைக் காட்டிக் கொண்டு திரும்பி உட்கார்ந்து விட்டார்.

"ம்......தாயாரைப் பார்க்கப் போறீராக்கும்? என்ன விசேஷம்?"

"போன மாசம் உடம்பாகக் கிடந்தா. அப்ப போய்ப் பார்க்கமுடியலே. எனக்கு இப்பத்தான் லீவு கிடைச்சுது. நீங்க...?" —அதே அடக்கம், புன்னகை.

"நானா? எனக்கு மதுரை. கோவிந்த சாஸ்திரின்னு பேரு. அட்வகேட்டாயிருக்கேன். ஒரு கேஸ் விஷயமா பட்டணம் போயிட்டுவரேன். மாயவரத்திலே எங்க சகோதரியைக் கொடுத்திருக்கு. இறங்கிப் பாத்துட்டு வரேன். முதல் கிளாஸ்லே டிக்கட் கிடைக்கலே. 'சகிண்ட்' கிளாஸ்தான் இருக்குன்னான். வாங்கிண்டுவந்து ஏறிப்ட்டேன். ராத்திரி சாப்பிடற தில்லே. பலகாரம்பண்றேனே அண்ணான்னு. அடி போடி பைத்தியம்னு வந்துட்டேன். பூரி இரண்டு வாங்கினேன். சாப்பிட்டேன். ஒண்டி ஆளுக்காகப் பலகாரம் பண்ணச் சொல்லவாவதுய்யா! இப்ப என்ன செத்தா போயிட்டேன்!" என்று சொல்லிக்கொண்டே கோவிந்த சாஸ்திரி வண்டியைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டார். குழந்தைகளைப் பார்த்தார்.



"உம்ம குழந்தைகளா இவர்கள்?"

"ஆமாம்."

"என்ன வயசாறது இவர்களுக்கு?"

"அவன்தான் பெரியவன். பத்து ஆறது. இவ சின்னவ. இப்ப ஏழு நடக்கறது!"

"மலேரியா அடிச்சுக் கிடந்தாப்பல இருக்கே ரண்டும். ஏலே இங்க வா...... வாடா......பரவால்லே வா...ஒண்ணும் பண்ணலே."

பையன் வந்து நின்றான். குச்சி குச்சியாக இருந்த கையைப் பிடித்தார் கோவிந்த சாஸ்திரி. கை முழுவதையும் ஒருமுறை தடவினார்.

"நாக்கை நீட்டு, கண்ணைக் காட்டு."

"அதெல்லாம் ஒன்றுமில்லே. சாப்பிடவே மாட்டான். சாப்பிட உட்கார்ந்தான்னா, பருப்பு நன்னால்லே, நெய் நாத்தம் அடிக்கிறது, இப்படி ஏதாவது சொல்லி எழுந்திண்டு போயிடுவான்" என்றார் கோடி ஆசாமி.

"சட்டையைத் தூக்கு."

பையன் சட்டையைத் தூக்கி வயிற்றைக் காண்பித்தான். அதை ஒரு அழுத்து அழுத்தி "ம்" என்றவண்ணம் அவனைப் பார்த்தார்.

"ஏண்டா! முழங்கால், முழங்கையெல்லாம் இப்படி எலும்பு முட்டுறது? கண்ணு கண்ணும்பா இருக்கு...நித்யம் ஒரு முட்டை கொடுமையா."

"எல்லாம் பாத்தாச்சு. எதையும் தொட மாட்டேங்கறான் சார்."

"காட்லிவர் ஆயில்?"

"அதுவும் கொடுத்துப் பார்த்தாச்சு."

"காட்லிவர் ஆயிலே 'மால்டா'க் கொடுக்கறது. தித்திப்பாயிருக்கும்."

"பார்க்கணும்."

கோவிந்த சாஸ்திரி இன்னும் கையை விடவில்லே. பார்வையையும்எடுக்கவில்லே.

"இல்லாட்டா ஒண்ணு செய்யறீரா இவனுக்கு?"

"என்ன?"

"கொள்ளு தெரியுமா கொள்ளு."

"...?"

குதிரைக்கு வைப்பாளேய்யா அது."

"ம் ம்."

"அதைத் தினமும் இவ்வளவு எடுத்துத் தண்ணியை விட்டுக் கொதிக்க வைச்சு, அந்தத் தண்ணியைச் சாப்பிடச் சொல்லும். அப்புறம் அந்தச் சுண்டலேயும் கொஞ்சம் உப்பைப் போட்டுச் சாப்பிடச் சொல்லும். பையன் அரபிக் குதிரை மாதிரி ஆகிறானா இல்லையா, பாரும். இப்ப நான் எங்க வீட்டுக்கு அழைச்சிண்டு போய் மூணு மாசம் கொடுத்தேன்னா, அப்புறம் உம்ம பையன் தான் இவன்னு நான் சத்தியம் பண்ணினாலொழிய உம்மாலே நம்ப முடியாது, என்ன! செய்யறீரா?" அதட்டுபவர் போலக் கேட்டார் சாஸ்திரி.

"செய்யறேன்."

"இதோபாரும், நான் டாக்டர் இல்லே. அதுக்குப்படிச்சுகிடிச்சு பாஸ் பண்ணலே. ஆனா எங்க வீட்டிலேருந்து போற மருந்துகளும் அங்க வரவாளும் கணக்கு வழக்கு இல்லே. எல்லாம் கடசிலே பாட்டியம்மா வைத்யம். கருவேப்பிலைக் குழம்பு வச்சுப் பத்துநாள் வட்டம் சாப்பிடுவேன். ஏழுநாள்வட்டம் வேப்பம் பூவைச் சாதத்து மேலே வச்சு ஆமணக்கெண்ணெயைக் காய்ச்சி அதுமேலே ஊத்தச்சொல்லிப் பிசைஞ்சு சாப்பிட்டுடுவேன். நீர் நம்ப மாட்டீர். இது வரையில் டாக்டருக்குன்னு ஒரு தம்பிடி? பேசப்படாது. பெரியவா புண்யத்திலே பத்துக் காணி நிலம் இருக்கு. ஆனால் அதிலேருந்து ஒரு நெல்லு வித்த காசு டாக்டர் வீட்டுக்குப் போனதில்லே."



"நல்ல புண்ணியம் பண்ணினவா நீங்க. ஹி ஹி ஹி."

"புண்ணியமாவது, புடலங்காயாவது. எல்லாம் நம்ப மனோபலத்தைப் பொறுத்திருக்குய்யா."

"என்னமோ, சார்! நான் தலையெடுத்த நாளையிலேருந்து பாருங்கோ, டாக்டர் வராத நாள் கிடையாது. இதைப் பாருங்கோளேன். நீங்கதான் பார்க்கறேளே, எதிர்த்தாப்பல. பிழிச்ச நார் மாதிரி படுத்திண்டு கிடக்கா. கடலூர்லே வண்டி ஏறினோம். படுத்திண்டா. இன்னும் எந்திருக்கலே. புருஷா முன்னாடி நிக்கமாட்டா அந்த நாள்ளே. அவளேதான் இப்படி ஆயிட்டா. என்னத்தைப் பண்றது? "என்று மனைவியைப் பார்த்தார் 'சூப்ரிண்டு'.

சூப்ரிண்டு மனைவி இலேசாகப் பாதிக் கண்ணைத் திறந்து பார்த்தாள்.

"என்ன உடம்பு?"

"அந்தக் காலத்திலே பம்பரமா சுத்தி வந்து காரியம் பண்ணிண்டிருந்தவ. திடீர்னு ஒரு நாளைக்கு வயத்தை வலிக்கிறதுன்னா. டாக்டர் வயத்திலே கட்டி, ஆபரேஷன் கேஸ்ன்னார். செஞ்சுது. அது தேவலையாச்சு. அப்புறம் பிரமை புடிச்சாப்பல எது கேட்டாலும் பதில் சொல்றதில்லே. அப்படி நாலு வருஷங்கள் உக்காந்திருந்தா. அதுக்கு வேற ஊசி, மாத்திரை கொஞ்சமில்லே. அது தேவலையாப் போயிடுத்து. இப்ப பத்து வருஷமா தினம்போது விடிஞ்சா தலை வலி. கால் துணியாப் போயிடறது. எழுந்து நடமாட முடியலே. காப்பி சமையல் முதல் கொண்டு, கூட நான் நிக்கவேண்டியிருக்கு."

சூப்ரிண்டு மனைவி கண்ணை மூடாமல் இதைக் கேட்டுக்கொண்டேயிருந்தாள்.

"வாரா வாரம் எண்ணெய் தேச்சுக்கணும்" என்றார், கோவிந்த சாஸ்திரி.

"எண்ணெயா! ஒரு முட்டை தலையிலே வச்சாப்போரும். 'ஐயோ கடப்பாறை போட்டு இடிக்கிறதே இடிக்கிறதேன்னு' அலற ஆரம்பிச்சிடுவ. எண்ணெய் தான் சத்ரு அவளுக்கு."

"என்னய்யா ஆச்சரியம்! எண்ணெய் ஒத்துக்காத ஒரு மனுஷா உண்டோ? நல்லெண்ணெய் தலைவலிக்குப் பரம சஞ்சீவி ஆச்சேய்யா."

"எண்ணெயைத் தவிர மீதி எதுவேணும்னாலும் சொல்லுங்கோ. போடாத ஊசியில்லே. குடிக்காத மருந்து இல்லே. இந்தத் தலைவலி நின்னாப் போரும்" என்று படுத்தவாறே வாயைத் திறந்தாள் சூப்ரிண்டின் மனைவி.

பேச ஆரம்பித்த பிறகுதான் தெரிந்தது. வயதுக்கு மீறிய மூப்பு. முகத்தில் சோகை. வாயில் குழறல். அழகாக இருந்த அம்மாள் இப்போது விகாரமாக மாறி விட்டிருந்தாள்.

"தலைவலியைத்தானே நிறுத்தணும்?" என்று கேட்டு விட்டு வெளியே பார்த்தார் கோவிந்த சாஸ்திரி.

**வ**ண்டி குத்தாலத்தில் நின்றது. ஒரு அணாவுக்கு வேர்க்கடலையை வாங்கி மென்றவாறு யோசனையில் ஆழ்ந்திருந்தார் அவர். வண்டி புறப்பட்டதும் தம் பேச்சை ஆரம்பித்தார்.

"சொல்லட்டுமா?" என்று அவர் ஆரம்பித்ததும், அவசரம் அவசரமாக புஷ்கோட் பையிலிருந்த ஒரு டயரியையும் பென்சிலையும் எடுத்து வைத்துக் கொண்டார் 'சூப்ரிண்டு.'

"எழுதிக்கிறீரா? சரி வேப்பம் பருப்பு, வெள்ளை மிளகு, கசகசா, சுக்கு...."

இன்னும் நாலைந்து சொன்னார் அவர். எனக்கு அது மறந்து விட்டது.



"என்ன சார், அஞ்சுவருஷமா நீங்கள் சேர்ந்தாற் போல் வியாபாரம் செய்கின்றீர்கள். இப்பத்தான் நீங்க இரண்டுபேரும் சண்டை போட்டுப் பார்க்கிறேன்!"
"இப்பத்தானே லாபம் வர ஆரம்பித்திருக்கிறது!"

"இதை யெல்லாம் பால்லெ போட்டு ஊறவச்சு நசுக்கி அம்மியிலே ஒட்டி உருண்டை உருண்டையாப் பண்ணிக் காய வச்சுக்கறது. அப்புறம் நித்யம் காலமே ஒரு உருண்டையைப் பால்லெ கலந்து தலையிலே தேச்சு ஸ்நானம் பண்ணச் சொல்லும். ஒரு மாசத்துக் கப்புறம் எனக்கு எழுதும்."

அமிருதம் கிடைத்த மாதிரி சூப்ரிண்டு எழுதிக் கொண்டு நாலு தடவைகள் சந்தேகங்களைக் கேட்டுத் தெளிந்து, டயரியைத் திருப்பித் திருப்பி வாசித்துப் பையில் போட்டுக் கொண்டார்.

"இதுதான் கல்கம். எல்லாக் 'கம்ப்ளெய்ண்டு'க்கும் சேத்திருக்கேன். அம்மா! உங்க தலைவலி இன்னியோட தீந்தது" என்றார் சாஸ்திரி.

அந்த அம்மாள் எழுந்து உட்கார்ந்து, "அதை இன்னொரு தடவை நன்னாக் கேட்டு வச்சுக்குங்கோ" என்றாள் தன் புருஷனைப் பார்த்து.

சாஸ்திரி இன்னும் பல ரகசியங்களை யெல்லாம் சொன்னார். சொறி சிரங்கு, சீதபேதி, ஆஸ்துமா, பாலுண்ணி— இப்படிப் பல வியாதிகளுக்கு அவரிடம் சஞ்சீவிகள் இருந்தன. சூப்ரிண்டின் கண்கள் மேலே அகல இடமில்லை. அப்படி ஒரு வியப்பு. தன்வந்திரி, சித்தர்கள்- எல்லாரும் அவர் மேல் கருணைகொண்டு இரண்டாம் வகுப்பில் சக பிரயாணியாக வந்து காட்சி கொடுத்து வினை தீர்த்த பரவசத்தை அவருடைய மரியாதை யிலும் அடக்கத்திலும் காண முடிந்தது.

"இத்தனைக்கும் நான் டாக்டர் இல்லே" என்றார் சாஸ்திரி மீண்டும். "எனக்கு வயசு எத்தனை யிருக்கும்? எங்கே? சொல்லும், பார்ப்போம்."

வியப்பில் ஆழ்ந்து கிடந்த 'சூப்ரிண்டு' தயங்கிப் புன்சிரிப்புச் சிரித்தார்.

"சும்மாச் சொல்லும்."

"ஐம்பது இருக்கும்."

"ஐம்பதா? எனக்கு அறுபதாம் கலியாணம் ஆகியே எட்டு வருஷங்கள் ஆச்சய்யா."

"அறுபத்தெட்டா! உங்களுக்கா!"

முதுகைப் பார்த்துக் கொண்டிருந்த எனக்கும் நம்பத்தான் முடியவில்லை.

"பின்னே? என் பெரிய பெண்ணுக்கே இப்ப வயசு நாப்பத்தஞ்சு. அவ பிள்ளை 'அக்கௌண்டண்ட்ஸ்' ஆபீசரா முந்தாநாள்தான் வேலை ஒத்திண்டிருக்கான். என் பெரிய பையனுக்கு வயசு நாற்பது முடிஞ்சுடுத்து...நீர் மாத்திரம் இல்லை. பாக்கறவா ஒவ்வொருத்தருமே இப்படித்தான் ஆச்சரியப்பட்டுண்டிருக்கான்னேன்."

"ஏ, அப்பா!" என்று அவரையே ஒரு நிமிஷம் பார்த்து, 'சூப்ரிண்டு' புன்சிரிப் புப் பூத்துக் கொண்டிருந்தார். "நீங்கள் ளாம் அந்தக்காலத்து மனுஷா."

"யாரு? நன்னாச் சொன்னீரே. எந்தக் காலத்திலேயும் முடியும்யா!" திடீரென்று கோவிந்த சாஸ்திரி ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தார். குரலும் தணிந்தது. "ரகசியம் என்ன தெரியுமா? எட்டாவது குழந்தை பிறந்தது. என் சம்சாரத்தைப் பார்த்தேன். என்ன சரிதானேன்னேன். சரின்னூட்டா. அதிலே யிருந்து ஒதுங்கிப்பிட்டோம். அப்ப எனக்கு முப்பத்தெட்டுவயசுதான்."

"அப்படியா!"

"அப்படியே தான். எங்க அப்பா அம்மா செஞ்ச தப்பையும் உணர்ந்துட்டேன். எனக்குப் பதினேழு வயசிலே கலியாணம் பண்ணி வச்சாளே...அதைச் சொல்றேன். என் பிள்ளைகளுக்கெல் லாம் முப்பது வயசிலேதான் கலியாணம் பண்றது. பெண்களுக்கு இருபத்திரண்டு வயசுக்கு அப்புறம்தான் கல்யாணம் பண்றதுன்னு தீர்மானம் பண்ணின் டேன். அப்படியே நடத்திண்டும் வரேன். நீர் பார்க்கிறது எனக்குப் புரியறது. என்னடாது ஒரு பக்கம் சுக்குக் கஷாயம், கருவேப்பிலைக் குழம்புன்னு ரொம்பப் பாட்டியா இருக்கான். இன்னொரு பக்கம் பார்த்தா ரொம்ப "அல்ட்ரா"வா இருக்கானேன்னு நினைக்கிறீர். உண்டா, இல்லியா?"

"ஆமாம் ஆமாம், ஹிஹிஹி."

"அதனாலே தானே என் சம்பந்தி என்னை 'அக்பர் சாஸ்திரி'ன்னு கூப்பிட ஆரமிச்சார்...என்னேன். அக்பர் சக்கரவர்த்தி எப்படி யிருந்தான்? உலகத்திலே இருக்கிற நல்லதெல்லாம் சேர்த்துத் தனக்குன்னு ஒரு வாழற முறையை ஏற்படுத்திண்டான். அந்த மாதிரி நீங்களும் இருக்கேள்ன்னார் அவர். பொண்களுக்குக் கலியாணம் பண்ணினேன். புள்ளைகளுக்

# எக்லா

## தென் இந்தியா விரும்பும் டால்க்!

### தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு



இந்த பரத நாட்டியக்காரியைப் போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம்... மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால். குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




கால்கேட்

# எக்லா

டால்க் பவுடர்

ECIG/2A

---

# 'அனஸின்'

## தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளிலிருந்து நிவாரணமளிப்பதில் **சிறந்தது**

ஏனெனில் அதில் **நான்கு மருந்துகள்** சேர்ந்துள்ளன.






வைத்திய விஞ்ஞானிகள், 'அனஸின்' என்பது வலியை அகற்றும் தீவிர சக்திவாய்ந்த அநேக மருந்துகளின் சரியான விகிதாச்சார கலவை என்று கூறுகிறார்கள். அது வேறெந்த ஒரே மருந்து கலவையைவிட அதிதுரிதமாயும், அபாயமின்றியும், நிச்சயமாயும் நிவாரணமளிக்கிறது என்று ஞாபகத்தில் வையுங்கள்! 'அனஸின்' ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலவையாகும். ஆகவே 'அனஸின்', தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து துரிதமாயும், முற்றிலும் குணமளிப்பதில் சிறந்தது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.

GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

A 67 (R) TA

ரும் பண்ணினேன். முதல் காரியமா ஊர்வலத்தை நிறுத்தினேன். அந்தக் காலத்திலே பத்து வயசிலே கலியாணம் பண்ணினா திருஷ்டி பட்டுடப் போற தேன்னு குழந்தைகளை வைச்சு ஊர் கோலம் எடுக்கறது. இப்ப புள்ளைக்கு முப்பது வயசு. பொண்ணுக்கு இருபத் தஞ்சு. ஊர்வலமாவதய்யா? இரண்டாம் பொண்ணுக்குக் கலியாணம் பண்ற போது ஒரு கிழவி வந்தா. 'என்னங்கா ணும் ஊர்வலம் இல்லேன்னுட்டீரா மே'ன்னு, 'ஊர்வலமா, உன்னை வாணா வச்சு நாலு தெருவிலேயும் சுத்தச்சொல் றேன்'னேன். அப்புறம் ஏன்பேசறா?....அ! நம்ம தாத்தாவும் அப்பாவும் பண்ணி னாங்கறதுக்காக எல்லாத்தையும் செஞ் சுற முடியுமோ? காலே காலே நம்ம புத்தியை உபயோகிச்சு மாத்தாட்டா நாம என்ன மனுஷாளா? மிருகங்களா? ஒரு உதாரணம் சொல்றேன். புருஷா சாப்பிட்ட அப்புறம் தான் பொண்டுகள்சாப் பிடறதுன்னு வச்சிண் டிருக்கோமே? அது எதி லேய்யா எழுதியிருக்கு? உனக்குச் சமைச்சும் கொட்டிப்பிட்டு, மீதி யிருக்கற அடி வண்ட லெல்லாம் அவ தனியா சாப்பிடணுமோ?என்ன நியாயம்யா? எங்க விட் டிலே என்ன பழக்கம் தெரியுமோ? நானும் சம்சாரமும் சேர்ந்து தான் சாப்புடுவோம். வீட்டுக்கு யார் வந்தா லும் சரி......குழந்தை குஞ்சுபொண்டுகள் எல்லாரையும்சேத்து உட்கார்த்தி வைச்சுத்தான் சாப்பிடு வேன். அவாளோட என் சம்சாரத்தை யும் உட்கார வச்சுப்பிடுவேன். கும்ப கோணத்திலே மூணாவது சம்பந்திருக் கார். ஜவுளிக் கடை வச்சிருக்கார், சக்ர பாணி அய்யர்னு. அவர் நான் இப்படி யெல்லாம் இருக்கறதைப் பார்த்துப் பிட்டு எதோ பரியாசமா பேசினாராம். நான் சொல்லிப்பிட்டேன். 'சார்! இத பாருங்கோ, நான் உங்க விட்டுக்கு வந்தா இந்தமாதிரி சேத்து வச்சுத் தான் போடணும். இல்லாவிட்டால் வரவேயில்லேன்'னேன். அப்பறம்னா வழிக்கு வந்தார். இத்தனை வயசுக்கு மேலே இந்தக் கிழவனுக்குச் சபலத்தைப் பாரும்னு, யாராவது சொல்லிண்டிருப் பன். சொல்லட்டுமே. இதுக்கெல்லாமா பயந்து முடியும்? முப்பத்தெட்டு வயசி லேருந்து நான் எப்படி யிருக்கேன்னு



எனக்குன்னாய்யா தெரியும்! எல்லாரோ டும் உட்காந்து சேந்து சாப்பிட்டு, ஒரு மணி நேரம் எல்லாரையும் பக்கத்திலே வச்சிண்டு கலகலன்னு பேசி சந்தோஷமா இருக்கமுடியலேன்னா அவன் என்ன ஆள், ஐயா! யார் என்ன சொன்னாலும் சரி. நான் அப்படித்தான் இருப்பேன். இருந் துண்டு வரேன். அதனாலேதான் அறுபத் தெட்டு வயசின்னவுடனே நீர் பிரமிக் கிறீர். நான் மாத்திரம் இல்லே. என் சம்சாரம் குழந்தைகளெல்லாம் இப் படித்தான் இருப்பா. டாக்டருக்குன்னு காலணா கொடுத்ததில்லையா? சத்தியம் வேணும்னாலும் பண்ணத் தயார். போருமா?'' என்றார் சாஸ்திரி.

சத்தியமே பண்ண வேண்டாம். உங் களைப்பார்த்தாலேபோதும் என்று நினைத் துக் கொண்டேன். என்னை இவர் லட்சி யம் பண்ணாவிட்டால் என்ன? பேசா விட்டால் என்ன? அக்கறையில்லை. இந்த வயசில் இவ்வளவு நேர் முதுகு - கணார் கணார் என்று இந்தக் குரல். டாக்டருக்கு ஒரு நெல் கூடக் கொடுக்காத பத்துக் காணி.

எதிரே சூம்பின கையும் காலுமாக இரண்டு குழந்தைகள். துணியாகக் கிடந்த 'சூப்ரிண்டு' மனைவியின் சோகை பாய்ந்த உடல். 'சூப்ரிண்டி'ன் முகத்தில் நிரந்தரமாகக்கோடிட்டு விட்ட குடும்பக் கவலை. இத்தனைக்கும் நடுவில் அக்பர் சாஸ்திரி, சித்த புருஷர்கள் அரைக் கைச் சட்டை யும் வேஷ்டியும் அணிந்து வந்தது போல் உட்கார்ந்திருந்தார். அவருக்குப் பின்னால் வயிற்று வலி - அதாவது நான். என்னை மூன்று வருஷங்களாக வதைத் துக் கொண்டிருக்கிற வயிற்றுவலியை நான் சொல்லவில்லை. சொல்லு சொல்லு என்று அது முனகின குரல் கேட்டது. அதுமட்டுமில்லை; இஸினோபீலியா. இஸினோபீலியா என்று என்மனைவி எட்டு வருஷங்களாக எனக்கும் அவளுக்கும் ராத் தூக்கம் வராமல் கண் பனிக்கப் பனிக்கஇருமுகிறவாதையையும்சொல்லு சொல்லு என்றது. சொல்லுகிறேன் சொல்லுகிறேன் என்று அவற்றைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தேன், திடீர் என்று எப்படிச் சொல்கிறது? முன்னால் இரண்டு வார்த்தையாவது அவருடன் பேச வேண்டும். அதற்குச் சமயம் கிடைக்காமலா போகும்?......

''மதுரைக்கு எப்பவாவது வந்தீர்னு, விட்டுக்கு வாரும். சந்தோஷமா எப்படி யிருக்கிறது, திடகாத்திரமா எப்படி இருக்கிறதுன்னு புரியும். டாக்டரை எப்படி அண்டவிடாமல் வாழறதுன்னு தானே புரிஞ்சுக்குவீர். பயந்திண்டு வராம இருந்துடாதீர். அதுக்காக வந்த வாளுக்குக் குளிக்க வெந்நீர் போடாமல் இருந்துடமாட்டோம். என்னோடேதான் நீரும் எழுந்திருக்கணும்னு காலமே நாலு மணிக்கே எழுப்பிட மாட்டேன். கவலைப் படாதீர் என்ன, வரீமா?''

''கட்டாயம் வரேன்.''

''உம்ம சம்சாரத்தையும் அழச்சிண்டு வரணும். என்ன வரீமா?''

எனக்கும் அக்பர் சாஸ்திரி விட்டுக்குப் போக வேண்டும் போல் தானிருந்தது. கூப்பிட்டால்தானே? மனுஷன் தற்செயலாகக்கூடத் திரும்பமாட்டார் போலிருக்கிறது. ஓர் இடத்தைக் கொடுக்கவில்லே என்று மனுஷனுக்கு வருத்தமோ?

திருவிடைமருதூர் ஸ்டேஷன் வந்தது. ''மகிழமாலே விற்குமே இங்கே?'' என்று எழுந்தார் அக்பர் சாஸ்திரி. எதிர் ஜன்னலண்டை எழுந்து போனார். ''மகிழ...மகிழ...மகிழ'' என்று பாதி பாதியாகக் கூப்பிட்டார். பேசின பேச்சில் தொண்டை சோர்ந்து விட்டது.

குழந்தைகளுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டார்.

''சார்!'' என்று சொல்லாமல் என்னை ஜாடைகாட்டி அழைத்தார். அவர் விழியைப் பார்த்து அருகே ஓடினேன். மார்பைத் தடவு என்று சைகை காட்டினார். சடசடவென்று பித்தானைக் கழற்றி மார்பைத் தடவினேன்.

''கும்பகோணத்திலே......'' அவரால் மேலே பேச முடியவில்லே.

''கும்பகோணத்திலே என்ன?''

''சக்ர...சக்ர...சக்ர...''

பேச முடியாமல் அப்படியே சாய்ந்து கொண்டார். பையனின் கை அவர் முதுகுக்கும் ஜன்னலுக்கும் இடையே அகப்பட்டுக் கொண்டது. இழுத்துக் கொண்டான்.

''என்ன சார், என்ன சார்?'' என்று 'சூப்ரிண்டு' எழுந்து வந்தார்.

''சார், சார், கோவிந்த சாஸ்திரிகள்'' என்று உரக்கக் கூப்பிட்டார்.

அவர் மனைவி எழுந்து, ''என்ன?'' என்று கண்ணைத் திறந்து நிலைமையைப் புரிந்துகொண்டு எழுந்து உட்கார்ந்தாள். ''இந்தண்டை வாடா கிச்சு, கௌரீ!'' என்று குழந்தைகளைக் கூப்பிட்டாள்.

நான் மார்பைத் தடவிக் கொண்டிருந்தேன். ''என்ன சார், என்ன சார்?'' என்று பதறினார் 'சூப்ரிண்டு'.

மூக்கில் கை வைத்துப் பார்த்தேன்.

''என்ன சார்?''

''கும்பகோணத்திலே அவர் சம்பந்தி பேர் என்ன என்று சொன்னார்?''

''சக்ரபாணி அய்யர். ஜவுளிக்கடை வைச்சிருக்காராம்.''

''நீங்க இறங்கிப் போய் ஸ்டேஷன் மாஸ்டர்கிட்ட சொல்லி அவரைக் கும்பகோணம் ஸ்டேஷனுக்கு வரச் சொல்லி 'மெஸ்ஸேஜ்' கொடுக்கச் சொல்லணும்.''

''ஏன்! என்ன?''

''ஒன்றுமில்லே.''

''அப்படின்னு?''

அவர் மனைவி அருகில் வந்தாள். ''அட, ராமா!'' என்று சாஸ்திரியைப் பார்த்தாள்.

''என்ன?'' என்றார் 'சூப்ரிண்டு' மறுபடியும்.

டாக்டர் உதவியில்லாமலே அக்பர் சாஸ்திரி மனிதன் செய்கிற கடைசிக் காரியத்தையும் செய்து விட்டார் என்று அவருக்குப் புரிந்தபாடில்லே.



திருடன் வந்தால் மறந்து போயிடாமல் ஞாபகமா குலைக்கணுமாம்; நான் மறந்துபோய் விடுகிறேனாம். அதற்குத்தான்..!



**யமன் :** என்னய்யா பெரியவரே! உங்க ஊரில் சேத்தப்பனார் சௌக்கியமா இருக்கிறாரா?

**பெரியவர் :** அவருங்களா? அவர் காலமாகி ரொம்ப வருஷமாகுதுங்களே!




"பார்த்தீரா! போகப் போகப் பிறப்பு உரிமையும் இல்லாமல் போயிடும் போல இருக்கு!"



"நான் குடியிருந்த வீட்டைக் காலி செய்யும்போது வீட்டுக்காரர் அப்படியே அழுது விட்டார்!"

"நோ! நோ! அவர் அதற்காக அழுதிருக்க மாட்டார். நீங்கள் வாடகையைக் கொடுக்காமல் அவரை அழ வைத்திருப்பீர்கள்!"



"உலகத்திலே நடக்கிற சில விஷயங்களுக்கு முன்னால் நாம் கண்ணை மூடிண்டு இருப்பது நல்லது!"

"அட! என்னய்யா நீர்! என் கண்ணிலே பொடியைத் தூவி விட்டீர். கண் போச்சு!"

என் மனைவி மிகுந்த
அவாவுடன் உண்ணும்
சிற்றுண்டிகளைச்
செய்கிறாள் !

# துஷார்

வைடமின் நிறைந்த வனஸ்பதி



துஷார் வனஸ்பதி சமையலுக்கு ஏற்ற சாதனம் மட்டுமல்ல. இதில் ஏ. டி. வைடமின் சத்துக்கள் நிறைந்து, சமையலின் ருசியையும் வாசனையை ஊட்டமளிக்கும் சக்தியையும் அதிகரிக்கச் செய்கின்றன.

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிட், கர்நூல்

# கலையும் வாழ்க்கையும்

விந்தன்

இரக்கப்படுவதுபோல் நடிப்பது கலை. கலையில் இரக்கப்பட்டால் காசு கிடைக்கும்; வாழ்க்கையில் இரக்கப்பட்டால்.........

ஒளிப்பதிவாளர் ஒன்பதாவது கொட்டாவியை விட்டுவிட்டு, ஐந்தாவது காப்பியின் துணையுடன் பத்தாவது கொட்டாவியை விரட்டப் பகீரதப் பிரயத்தனம் செய்து கொண்டிருந்தபோது, 'மேக் - அப்' அறையை விட்டு வெளியேறிய குமாரி கும்கும், பாட்டி பவுனம்பாளுடன் 'செட்'டுக்குள்ளே பிரவேசித்தாள்.

அஜந்தாக் கொண்டை — அசல் அல்ல, போலி; அந்தக் கொண்டையைச் சுற்றிலும் முல்லை அரும்புகள் —அசல் அல்ல, போலி; காதளவோடிய கண்கள் — அசல் அல்ல, போலி; கனி வாய் இதழ்கள் — அசல் அல்ல, போலி......

ஒருவேளை அவளுடைய வாழ்க்கையே போலியா யிருக்குமோ?

அதைப் பற்றி அவளும் சிந்தித்ததில்லை; அவளுடைய அபிமானிகளும் சிந்தித்ததில்லை!

இயற்கை இரவில் ஒளி வீசும் நட்சத்திரத்துக்குப் போட்டியாகச் செயற்கை இரவில் ஒளி வீசிக்கொண்டிருந்த அந்த நட்சத்திரத்தைக் கண்டதும் படத் தயாரிப்பாளர் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, 'பரவாயில்லை; பத்து மணி 'கால் - ஷீட்'டுக்குப் பன்னிரண்டு மணிக்கே வந்துவிட்டாளே!' என்ற திருப்தியுடன், "எங்கே டைரக்டரைக் காணோம்?" என்று கேட்டுக்கொண்டே திரும்பினார்.

"இதோ, நான் தயார்!" என்று சொல்லிக்கொண்டே அவர் இருபத்தேழாவது சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு, "குட் மார்னிங்!" என்றார் நட்சத்திரத்தின் பக்கம் திரும்பி.

பதிலுக்குக் "குட்மார்னிங்" என்று சொல்லிவிட்டு, "எங்கே டைலாக்?" என்று நட்சத்திரம் திருவாய் மலர்ந்தருள, "இதோ!" என்று 'டைலாக் பை'லை எடுத்து



நீட்டினார் உதவி டைரக்டர். அதை ஒரு 'நட்சத்திரப் பார்வை' பார்த்துவிட்டு, ''சரி, இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டாள் கும்கும்.

''உங்களுடைய ஒவ்வொரு சொல்லிலும், ஒவ்வொரு செயலிலும் அன்பு ததும்ப வேண்டும். அதற்கு முதற்படியாக, யாரைக் கண்டதும் உங்களுடைய உள்ளத்தில் அன்பு சுரக்குமோ, பிரவாகம் எடுத்து ஓடுமோ, அவர்களை நீங்கள் நினைத்துக்கொள்ள வேண்டும்!'' என்றார் டைரக்டர்.

''இவ்வளவுதானே, என்னுடைய 'பேபி'யை நினைத்துக் கொள்கிறேன்!'' என்றாள் கும்கும், அலட்சியமாக.

''பேபியா, உங்களுக்கா!'' என்றார் டைரக்டர் ஆச்சரியத்துடன்.

''அதற்குள் மறந்து விட்டீர்களா, என்ன? சென்ற வாரம் 'அவுட்டோர் ஷூட்டிங்'குக்காகப் பெங்களூருக்குப் போயிருந்தபோது நான் வாங்கிக் கொண்டு வந்தேனே, ஒரு நாய்க் குட்டி.......''

''ஓ, அதைச் சொல்கிறீர்களா? சரி, எதை நினைத்துக்கொண்டால் என்ன? எனக்கு வேண்டியது 'எபெக்ட்'—அவ்வளவுதான்! அதோ பாருங்கள், அந்தக் கடையை நோக்கி நீங்கள் இந்தக் காரில் செல்கிறீர்கள். கடையை நெருங்கியதும் காரை நிறுத்தச் சொல்கிறீர்கள்; கார் நிற்கிறது. டிரைவர் இறங்கிக் கதவைத் திறக்கிறார்; நீங்கள் இறங்கி உள்ளே செல்கிறீர்கள். இதுதான் முதல் ஷாட்!''

கும்கும் சிரித்தாள். ''ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டார் டைரக்டர்.

''ஒன்றுமில்லை. இப்பொழுது நான் எதை நாய்க்குட்டியாக நினைத்துக் கொள்ள வேண்டும்? எதன் மேல் அன்பைச் சொரிய வேண்டும்? கடை—மீதா, கார் மீதா?'' என்று கேட்டாள் அவள், மேலும் சிரித்துக்கொண்டே.

''மன்னியுங்கள், அதற்குள் என்னுடைய கவனம் எங்கேயோ போய்விட்டது!'' என்றார் அவர் அசடு வழிய.

''வேறு எங்கே போயிருக்கும்? குதிரைப் பந்தயத்தின் மேல் போயிருக்கும்!''

''கரெக்ட், கரெக்ட்! ஏன், நீங்கள் போவதில்லையா?''

இந்தச் சமயத்தில் படத் தயாரிப்பாளர் குறுக்கிட்டு, ''அங்கே போகும்போது போவோமே, ஸார்!'' என்று பரிதாபத்துடன் சொல்லவே, ''அடென்ஷன் ப்ளீஸ்!'' என்று டைரக்டர் இரைந்துவிட்டு, ''இதோ இருக்கிறான், பாருங்கள் — இந்தப் பையனைத்தான் நீங்கள் நாய்க்குட்டியாக நினைத்துக்கொள்ள வேண்டும்; இவன் மேல்தான் அன்பைச் சொரிய வேண்டும். இவன் தாய் தந்தையற்ற அனாதை; இவனுக்கு ஏகப் பசி; இவன் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வந்து உங்கள் காரை நெருங்குகிறான்; பின் 'ஸீட்'டின் மேல் கட்டியிருக்கும் ரொட்டியை எடுத்துப் பிட்டுப் பிட்டுத் தின்கிறான். அப்போது இதோ இருக்கிறாரே—இந்தப் போலீஸ்காரர் வந்து, 'திருட்டுப் பயலே, அகப்பட்டுக் கொண்டாயா?' என்று இவனைப் பிடித்துக்கொள்கிறார்; அந்தச் சமயத்தில் நீங்கள் வருகிறீர்கள்; பையனையும் போலீஸ்காரரையும் மாறி மாறிப் பார்க்கிறீர்கள்; நடந்தது இதுதான் என்று உங்களுக்குத் தெரிகிறது; 'ஐயோ, பாவம்!' என்று இவனிடம் அனுதாபம் கொள்கிறீர்கள்; உடனே உங்களுக்கு ஒரு யோசனை தோன்றுகிறது; 'அவனை விடுங்கள்; அவனுக்குத் தின்ன ரொட்டி கொடுத்தது நான்தான்!' என்று சொல்கிறீர்கள்; போலீஸ்காரர் பையனை விட்டுவிட்டுச் செல்கிறார்; நீங்கள் இவனை நெருங்குகிறீர்கள்; 'ரொட்டி போதுமா, இன்னும் வேண்டுமா?' என்று கனிவுடன் கேட்கிறீர்கள். இவனுக்கு ஒரே வியப்பு; 'இப்படியும் ஒரு தெய்வம் உண்டா, இந்த உலகத்தில்?' என்று உங்களைப் பார்க்கிறான். இவனுடைய கண்களில் நீர் மல்குகிறது; அதை நீங்கள் அன்புடன் துடைக்கிறீர்கள். இதுதான் இன்று எடுக்கப் போகும் காட்சி!'' என்றார் கும்கும்மை நோக்கி.

''சரி, இவனுடைய கண்ணீரைத் துடைக்கிறேன். அதற்குப் பிறகு இவனை

நான் காதலிக்கிறேனா?'' என்றாள் அவள், தன்னுடைய 'மேதா விலாச'த்தைச் சற்றே வெளிப்படுத்தி!

''அது எனக்குத் தெரியாது; கதாசிரியரைத்தான் கேட்க வேண்டும்!'' என்றார் அவர், தற்காப்புக்காக.

''அவருடைய இஷ்டத்துக்கு இங்கே என்ன ஸார், நடக்கிறது? எல்லாம் நம்முடைய இஷ்டந்தானே?''

''என்ன இருந்தாலும் வயது என்று ஒன்று இருக்கிறது, பாருங்கள். இவனோ சிறுவன்; நீங்களோ வயது வந்தவர்கள்......''

''அதனாலென்ன, அதுவும் ஒரு புதுமையாயிருக்கட்டுமே!''

'புதுமை' என்ற வார்த்தை காதில் விழுந்ததுதான் தாமதம், ''புதுமை எதுவாயிருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ள நான் இருக்கிறேன்; நீங்கள் ஏறுங்கள், காரில்!'' என்றார் படத் தயாரிப்பாளர்.

அவ்வளவுதான்; வெற்றிப் புன்னகையுடன் நடிகை கும்கும் காரில் ஏறி உட்கார்ந்தாள்.

டைரக்டர் திரும்பித் தலையில் அடித்துக்கொண்டு, ''கம் ஆன், ரிஹர்ஸல்!'' என்று தம்முடைய தோல்வியைச் சமாளித்தார்.

அதைப் பொருட்படுத்தாமல், ''எங்கே மேக்-அப்-மேன்!'' என்று குரல் கொடுத்தாள் கும்கும், 'டச் – அப்' செய்து கொள்வதற்காக.

அதுவரை பொறுமையுடனிருந்த ஒளிப்பதிவாளர், ''லெட்ஸ் ஆர் பர்னிங்!'' என்றார், நட்சத்திரத்தின் காதில் விழும்படி.

''எஸ், ஐ ஆம் ரெடி!'' என்றாள் அவள்.

இந்தச் சமயத்தில் எங்கிருந்தோ ஓடி வந்த ப்ரொடக்ஷன் மானேஜர், ''எனி திங் யு வாண்ட்? ஆப்பிள் ஜூஸ், ஆரஞ்சு ஜூஸ், ஐஸ் க்ரீம், சோடா, காப்பி, ஓவல்.....'' என்று அடுக்கிக் கொண்டே போனார், அவளை நெருங்கி.

படத் தயாரிப்பாளர் அவருடைய கழுத்தைப் பிடித்து நெரிக்கத் தயாராவதற்குள், ''இப்போது ஒன்றும் வேண்டாம், எனக்கு!'' என்று அவள் சொல்லி விடவே, ''ஸைலென்ஸ் ப்ளீஸ் ஸைலென்ஸ் ப்ளீஸ்!'' என்று ஏற்கெனவே அங்கு நிலவிக் கொண்டிருந்த அமைதியைக் குலைத்தார் அவர்!

''சரி, ஆரம்பிப்போமா?'' என்று எல்லோரையும் பார்த்தாற்போல் கேட்டுவிட்டு, ''ஸ்டார்ட் ப்ளீஸ்!'' என்றார் டைரக்டர்.

கடையை நோக்கிக் கார் சென்று நின்றது; ஒத்திகையும் ஒருவாறு நடந்து முடிந்தது.

''ஓ. கே. டேக்!'' என்றார் டைரக்டர்.

இப்படியாக அந்தக் காட்சி முழுவதும் அன்று படமாக்கப்பட்டு முடிந்ததும், சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் நட்சத்திரத்தைச் சூழ்ந்து கொண்டு விட்டார்கள்.

''ஆஹா, அற்புதம்!'' என்றார் ஒருவர்.

''அபாரம்!'' என்றார் இன்னொருவர்.

''இன்று நடிப்பின் சிகரத்தையே நீங்கள் தொட்டுவிட்டீர்கள்!'' என்றார் ஒரு பேர்வழி; ''நடிப்பின் சிகரத்தை மட்டுமா, என் இதயத்தைக்கூடத் தொட்டுவிட்டார்கள். அந்தப் பையனின் கண்ணீரை அவர்கள் துடைத்த போது, என்னுடைய கண்களிலும் நீர் நிறைந்துவிட்டது'' என்றார் இன்னொரு பேர்வழி.



இந்தச் சமயத்தில் அங்கு வந்து உட்கார்ந்து, 'கா, கா!' என்று கரைந்த காக்கைகளை 'ஸ், ஸ்' என்று விரட்டி, 'அபிமானிக'ளின் மேல் தமக்கு ஏற்பட்ட ஆத்திரத்தை ஒருவாறு தீர்த்துக் கொண்டார் ஒலிப்பதிவாளர்!

எல்லோருக்கும் சேர்ந்தாற்போல் ஒரு 'நட்சத்திரப் புன்னகை' புரிந்து விட்டு, ஸ்டுடியோவை விட்டுக் கிளம்பினாள் குமாரி கும்கும்.

* * *

**வ**ழியில், ''ஏண்டி, குப்பாயி! பேபிக்குப் 'பிஸ்கெட்' வாங்க வேண்டுமென்று சொன்னாயே?'' என்றாள் பாட்டி.

''ஏன் பாட்டி, என்னைக் 'குப்பாயி, குப்பாயி!' என்று கூப்பிடாதே என்று உனக்கு நான் எத்தனை தடவை சொல்கிறது?'' என்று எரிந்து விழுந்தாள் குமாரி கும்கும்.

"இனிமேல் சொல்ல வில்லையடி, அம்மா! இப்போது நீ 'டவு'னுக்குப் போகப் போகிறாயா, இல்லையா?"

"போகத்தான் வேண்டும்; இருந்த பிஸ்கெட்டெல்லாம்தான் நேற்றே தீர்ந்து போய் விட்டதே!"

"சரி, வண்டியைத் திருப்பச் சொல்லு; வாங்கிக் கொண்டு போவோம்" என்றாள் பாட்டி.

"அதென்ன பாட்டி, நீங்கள் சொன்னால் திருப்ப மாட்டேனா?" என்றான் டிரைவர் முத்து சிரித்துக்கொண்டே.

"வாயை மூடடா, உனக்குமா நான் பாட்டியாய்ப் போய்விட்டேன்?" என்றாள் அந்த நித்திய கன்னி.

"இல்லே மேடம், இல்லே!" என்று சொல்லிக்கொண்டே சென்று, நிறுத்த வேண்டிய இடத்தில் வண்டியை நிறுத்தினான் முத்து.

அவ்வளவுதான்; அங்கிருந்த அனாதைச் சிறுவர், சிறுமியரெல்லாம் — பாரத புண்ணிய பூமியில் பூத்த பைந்தமிழ் மலர்களெல்லாம் அந்தக் காரைச் சூழ்ந்துகொண்டு, வாயையும் வயிற்றையும் காட்ட ஆரம்பித்துவிட்டன.

"அவமானம், நகரத்துக்கே அவமானம்!" என்றாள் கும்கும்.

"நகரத்துக்கு மட்டும் என்னடி, நாட்டுக்கே அவமானம் என்று சொல்லு!" என்றாள் கௌரவம் மிக்க பவுனம்பாள்.

"இறங்கினால் இந்த 'அவமானங்கள்' என்னையே சாப்பிட்டுவிடும்போலிருக்கிறதே!" என்றாள் குமாரி கும்கும்.

"ஆமாமாம், நீ இறங்காதே! முதலில் முத்துவைக் கீழே இறங்கி அவற்றை விரட்டச் சொல்லு!"

முத்து சிரித்தான்; சிரித்துக் கொண்டே தன்னிடமிருந்த பத்து காசை எடுத்து அந்த 'அவமான'ங்களில் ஒன்றை அழைத்துக் கொடுத்துவிட்டு, "என்னிடமிருந்தது இவ்வளவுதான்; இதை எல்லோரும் பங்கிட்டுக்கொள்ளுங்கள்!" என்றான். அதை வாங்கிக் கொண்டு அவை சிட்டாய்ப் பறந்ததும், "இறங்குவோமா?" என்றாள் பாட்டி.

"எதற்கு, இவனிடம் கொடுத்தால் இவனே வாங்கிக்கொண்டு வந்துவிடுகிறான்!" என்று சொல்லிக்கொண்டே இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்து முத்துவுக்கு முன்னால் விட்டெறிந்து, "ஒரு டின் பிஸ்கெட் வாங்கிக்கொண்டு வந்து வண்டியில் வை!" என்றாள் பேத்தி.

அப்படியே வாங்கிக் கொண்டு வந்து வைத்துவிட்டு, "போவோமா?" என்றான் முத்து.

"போக வேண்டியதுதான்!" என்றாள் நடிகை கும்கும்.

இந்தச் சமயத்தில், "ஏண்டி, 'நாலு பாவாடைக்கு லாட்டினும் நாலு தாவணிக்கு நைலானும் வாங்கிக் கொடு, வாங்கிக் கொடு!' என்று நானும் எத்தனை நாட்களாய்க் கேட்டுக் கொண்டிருக்கிறேன்? இன்றாவது வாங்கிக் கொடேண்டி!" என்றாள் பவுனம்பாள்.

"அதற்கென்ன, வாங்கிக் கொண்டால் போச்சு!" என்றாள் கும்கும்.

இருவரும் இறங்கி முக்காட்டை இழுத்துப் போர்த்திக்கொண்டு எதிர்த்தாற்போலிருந்த ஜவுளிக் கடைக்குள் நுழைந்தார்கள்.

அதுதான் சமயமென்று முத்து வண்டிக்குப் பின்னால் சென்றான்; ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு நின்றான்.

குப், குப், குப்!

"ஆகா! என்ன சுகம், என்ன சுகம்! 'ஏர் கண்டிஷன் ரூ'மின் குளுமை, இமாசல வாசத்தின் பெருமை எல்லாம் இந்தப் பீடியிலல்லவா இருக்கிறது, எனக்கு!"

இந்த ரசனையில் சுவாரசியமாக ஈடுபட்டிருந்த அவனை, "ஏய், என்ன அது?" என்ற கும்கும்மின் குரல் திடுக்கிட வைத்தது.

அவசரம் அவசரமாகக் கையிலிருந்த பீடித்துண்டைக் கீழே போட்டுக் காலால் மிதித்துவிட்டு, "என்ன அம்மா, என்ன?" என்றான் அவன், பரபரப்புடன்.

"அங்கே பாருடா, இடியட்!" என்றாள் கும்கும், ஆத்திரத்துடன்.

முத்து பார்த்தான்; ஒட்டிய வயிறும் குழி விழுந்த கண்களுமாகக் காட்சியளித்த ஒரு சிறுமி, 'பேபி'க்காக வாங்கி வைத்திருந்த 'பிஸ்கெட்'டுகளில் ஒன்றை எடுத்து அவசரம் அவசரமாகத் தின்று கொண்டிருந்தாள்!

"ஐயோ, பாவம்!" என்றான் முத்து.

"பாவமாவது? கூப்பிடு, போலீஸை!" என்று இரைந்தாள் கும்கும்.

அதற்குள் அந்த வழியாக வந்த ஒரு போலீஸ்காரர், "திருட்டுச் சிறுக்கி, இங்கேயும் உன் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்துவிட்டாயா? நட, ஸ்டேஷனுக்கு!" என்று அந்தப் 'பாரத புண்ய'த்தைத் தள்ளிக்கொண்டு போனார்.

முத்துவுக்கு ஒன்றும் புரியவில்லை. "ஏம்மா, காலையிலே அந்தப் பையன் ரொட்டியைத் திருடித் தின்றபோது, 'ஐயோ, பாவம்!' என்று சொன்னது நீங்கள்தானே?" என்று கேட்டான், திருதிருவென்று விழித்துக்கொண்டே.

"அது கலை; இது வாழ்க்கையடா, முட்டாள்!" என்றாள் அவள்.

அப்படியானால் அன்பு....

நடிக்கத்தானா?

வியக்கத்தக்க
நீளமான
செழிப்பான
கூந்தல்





ரோமா

கூந்தல் வளர்க்கும் டானிக்





நிச்சயமான
குணம்
ஆபத்தில்லாதது

வயிற்றுக் கோளாறுகளுக்கு
நம்பகமான நிவாரணம்

# HEWLETT'S



## MIXTURE

அபின் கலந்ததும் கலவாததும் 4 அவுன்ஸ் 10 அவுன்ஸ் பாட்டில்களில் கிடைக்கும்.

உடனே குணம் தெரியும்—எல்லா வலிகளையும் போக்குகிறது. ஜீரண சக்தியை ஊக்குகிறது. அதிகப்படியான புளிப்பை நீக்கி வயிற்றுப் பொருமலையும் போக்குகிறது. குடல் சம்பந்தமான கோளாறுகளுக்குக் கைகண்ட ஔடதம். வைத்தியர்களால் சிபாரிசு செய்யப்பட்டது.





ஸி.ஜே. ஹியூலெட் & சன் (இந்தியா) லிமிடெட்,
சென்னை. 3.

பிரீமென் மற்றும்
ஸுலேகா



இன்றைய
மிகவும்
நம்பகமான
பேனாக்கள்

பலவித ரகங்களிலும் கவர்ச்சியான
தோற்றத்திலும் எங்கும் விற்கப்படும்

Sole Distributors :

PENMEN'S INDUSTRIAL SERVICES

Kandivli, Bombay (S. D.)

இப்பொழுது

# ஆர்ஜென்டா

150 வாட்களில்

கிடைக்கின்றன






**அதிக வெளிச்சத்தை அளித்தும், கண்ணைக் கூசுவதில்லை**

வேலை செய்யும் இடத்திலும், விளையாடும் இடத்திலும், கடைகளிலும், தொழிற்சாலை களிலும், ஆர்ஜென்டா 150 வாட் லாம்பு கள், உங்கள் கண்ணைக் கூசாமலும், நிழல் தட்டாமலும், அதிக பிரகாசமான வெளிச் சத்தைக் கொடுக்கின்றன.

இன்றே ஆர்ஜென்டா 150 வாட் பல்புகளை பொருத்தி அதன் குளிமையான, கண்ணைக் கூசாத பிரகாசமான வெளிச் சத்தை அனுபவியுங்கள். 40, 60, 75 மேலும் 100 வாட்களி லும் கிடைக்கின்றன.




*பிலிப்ஸின் தரத்தை சரியான விலையில் வாங்குங்கள்*

**பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்**

# உங்கள் நரம்புகள்

வலுவுள்ளதாக உறுதியுடன் இருக்க வேண்டும்—அதுவும் ஓய் வில்லாத உழைப்பும் ஒழியாத கவலையும் நிறைந்த தற்கால வாழ்க்கையில்

# அஸ்வான்

நீண்டகாலமாய் மனோபலமும் தேக திடனும் வியர்த்தமாகி யிருந்தாலும் ஈடு கொடுத்து போஷாக்கு அளிக்கக்கூடிய ஒரு உயர்ந்த டானிக்

**இன்றே ஒரு பாட்டில் வாங்குங்கள். எப் போதும் கைவிருப்பாக வைத்திருங்கள்**



சிறியோர்

●

முதியோர்

●

நோயாளிகள்

யாவருக்கும்

உகந்தது

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா : பம்பாய் : கான்பூர்

●

*சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்:*

**ஆர் எல். கௌடர் & கோ.**

59, பந்தர் தெரு - சென்னை

*ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிபியூட்டர்கள்:*

**சத்ய நாராயண பார்மஸி**

விஜயநகரம் & குமரி தெரு. விஜயவாடா - 1

[ரொக்க வியாபாரக்காரர் காரியத்துக்காகக் கடன் கொடுத்தார். காரியமும் நடக்கவில்லை, கடனும் திரவில்லை......]






# கடன் கொடுத்தார் நெஞ்சம்போல்.

சுந்தர ராமசாமி

"சூரியன் மேற்கே உதிக்கிற காரியமாகவல்லவா இருக்கிறது?"

"இனிமேல் அப்படி உதித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை."

ஊர் முழுக்க இதே பேச்சு.

யாருக்குமே கடன் தராத ரொக்க வியாபாரக் கடையிலிருந்து ஏழாயிரத்தி ஐந்நூறுக்குக் கடன் போய் விட்டது. முப்பது வருடங்களாகக் கட்டி யெழுப்பிய கீர்த்தியை ஒரு நொடியில் புழுதியோடு புழுதியாய்த் தேய்த்து விட்டார் ராஜமாணிக்கம்!

ஊரிலேயே பிரபலமான கடை. "தனுக்கோடியா பிள்ளை அன் சன்ஸ்; மளிகை அன் ஷாப்பு வியாபாரம்" என்றெல்லாம் நீட்டிக் கொண்டிருக்க வேண்டாம். ரொக்க வியாபாரக் கடை என்று சொன்னாலே போதும். ஊர் முழுக்கத் தெரியும். எல்லோரும் அப்படித்தான் சொல்வார்கள். ரொக்க வியாபாரக் கடையில்ஒருபிடிபருப்பை அள்ளினாலும், காசு கல்லாப் பெட்டியில் விழுந்தாக வேண்டும். இல்லையென்றால் கையை விரித்து உதறி விட்டு நடையைக் கட்ட வேண்டியது. 'ஷாப்பு'க் கடையிலும் ஒரு முழம் இடுப்புக் கயிறு கடனாக வாங்கிவிட முடியாது. 'நாளைக்கு.....முதல் தேதி... சம்பளம் வாங்கி'......ஊஹூம்! அந்தப் பேச்சே கிடையாது. நேற்று இன்றுள்ள விஷயமா? முப்பதாண்டுகளாக இந்த நியதிதான். இந்த முப்பதாண்டுகளில் எத்தனை எத்தனையோ தலைகீழ் மாற்றங்கள். அதனால் என்ன? காலத்தை ஏப்பமிட்டுக் கொண்டே சிலர் நிற்ப தில்லையா? கோபுரம் மாதிரி, கற் கோட்டை மாதிரி. அந்த வரிசையைச் சேர்ந்ததுதான் இதுவும்.

இத்தனை பெருமையும் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போய் விட்டது, இப்பொழுது!

கடன் பேச்சே யில்லாத ரொக்க வியாபாரக் கடையிலிருந்து கேவலம் ஒரு தலைமைக் குமாஸ்தா ஏழாயிரத்தி ஐந்நூறு ரூபாய்க்குச் சாமான்களைக் கடனாக அள்ளிக்கொண்டு போய் விடுவதா? வேடிக்கைதான்.

இனிமேல் நொந்துகொண்டு என்ன பயன்? 'கேஸு' வேறு புறப்பட்டுக் காலைப் பின்னிக் கொண்டு விட்டதே. அப்பாவுக்கும் பிள்ளைக்கும் வியாபாரத்தைக் கவனிக்க நேரம் ஏது? 'கோர்ட்டு'க்கும் வக்கீல் வீட்டுக்குமாக நடந்ததில் உள்ளங்கால் எலும்பாடியதுதான் மிச்சம்!

பாவம் பிள்ளை! என்ன செய்வார்?

"பிள்ளைவாள்! அங்கே என்ன அது சுவரில் மாட்டி வைத்திருக்கிறது?" என்று கேட்டார் சாமான் வாங்க வந்த நண்பர் ஒருவர்.

தனுக்கோடியா பிள்ளை தலைதூக்கிப் பார்த்தார். சுவரில், "ரொக்க வியாபாரம், கடன் கிடையாது" என்று எழுதிய போர்டு தொங்கியது. முப்பது வருடங்களுக்கு முன்னால் பொறித்த எழுத்துக்கள்!

"இனிமேலாவது அதைக் கழற்றி எறியக் கூடாதோ?" என்று சிரித்தபடி கேட்டுக்கொண்டே, மேலும் பெரிதாகச் சிரித்தார் நண்பர்.

விலாவில் அஸ்திரம் பாய்ந்தது போலிருந்தது பிள்ளைக்கு. அப்படியே தலையைக் கவிழ்த்துக் கொண்டார். கணக்கைப் பார்ப்பதாகப் பாவனை. கண்களில் ஈரம் கசிகிறபொழுது எண்ணும் எழுத்தும் தெரியவா போகிறது?

மளிகைக் கடையும் 'ஷாப்பு'க் கடையும் எதிரெதிரே இருந்தன. மளிகைக் கடையில் முகத்தில் சதா சிரிப்புப் பொங்கி வழியத் தராசு முன்னால் நின்று கொண்டிருப்பார், பிள்ளை. எதிர்க் கடையில் பிள்ளையின் மூத்த குமாரன் செண்பகம் நாற்காலியில் அமர்ந்திருப்பான். இரண்டு கடைகளுமே தனுக்கோடியா பிள்ளைக்குச் சொந்தமானவை.

மாலை வேளைகளில் இரண்டு கடைகளிலும் கூட்டம் மொய்க்கும். அதோடு





அன்று சந்தை முறை வேறு. கேட்பானேன்; யந்திரம் மாதிரிக் கையும் வாயும் செயல்பட்டுக் கொண்டிருந்தன பிள்ளைக்கு. சதாவதானம்தான்!

அப்பொழுதுதான் ராஜமாணிக்கம் படியேறி வந்தார். அந்த மும்முரத்திலும் தலையைத்தூக்கிக் குழைவோடு, "வாங்க, வாங்க" என்று வரவேற்று உபசரித்தார் தனுக்கோடியா பிள்ளை.

"அவசரமில்லை, சாவகாசமாகப் பேசிக் கொள்வோம்" என்று சொல்லிக் கொண்டே கடைத் திண்ணையில் கிடந்த முக்காலியில் அமர்ந்தார் ராஜமாணிக்கம்.

இரத்தத்தை ஒட்ட உறிஞ்சி யெடுத்துவிட்டு, வெய்யிலில் போட்டு வாட்டியெடுத்தமாதிரி உடம்பு. குரல்வளை முடிச்சு, எலுமிச்சைப் பருமன்! ஒரு கட்டுத் தலை மயிர். அதிலும் பித்த நரை. ஆனால் எண்ணெய் போட்டுப் பிடரி வரையில் படிய வாரி விட்டிருந்தார்.

தகர டப்பா மாதிரி உயரம் குறைந்த முக்காலியில் உட்கார்ந்ததில், கால் முட்டிகள் மார்பு உயரத்துக்கு வந்துவிட்டன. அதிலும் முட்டிகளைச் சேர்த்துப் பாதத்தை அகல விரித்தபடி உட்கார்ந்திருந்தார். காலிடையே குடையை நட்டுக் குடைப்பிடியில் இரு கைகளையும் வைத்து அழுத்தி, நாடியை அதன்மேல் வைத்துத் தாங்கிக் கொண்டிருந்தார். சாமான் வாங்க வந்தவர்கள் அத்தனை பேரும் இந்தப்பக்கம் அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

எட்டு மணியாகி விட்டது, கூட்டம் கலைவதற்கு. கல்லாப்பெட்டிக்கு அருகிலிருந்து வெளியேறிக் கடையுள்ளே வந்து பாயில் உட்கார்ந்து கொண்டு, "ஸார்! இப்படி வாருங்களேன்" என்று அழைத்தார் பிள்ளை.

பிள்ளையின் முன்னால் சென்று அமர்ந்தார், ராஜமாணிக்கம்.

"ரொம்ப நேரம் காத்திருக்கும்படி ஆகிவிட்டது......" என்று மெதுவாக இழுத்தார் பிள்ளை.

"பரவாயில்லை. அதனால் என்ன?" என்றார் ராஜமாணிக்கம்.

ஒரு நிமிஷம் மௌனம் நிலவியது.

"என்னால் ஏதாவது ஆகவேண்டியிருந்தால் சொல்லலாமே?" என்றார் பிள்ளை கனிவான குரலில்.

"ஒன்றுமில்லை, நீங்கள் ஒரு சிறிய உதவி செய்ய வேண்டும்....." என்று அரைகுறையாகச் சொல்லி விட்டு மீண்டும் மௌனியானார் ராஜமாணிக்கம்.

ஏன் இந்தத் தயக்கம்? பிள்ளைக்குச் சந்தேகம் தட்ட ஆரம்பித்துவிட்டது.

"முடிந்தால் செய்கிறேன்" என்று இழுத்தார் பிள்ளை.

"முடியாததைக் கேட்பேனா?" என்றார் ராஜமாணிக்கம்.

முன்னெச்சரிக்கையாக அணை போட்டுப் பேசினார் பிள்ளை. "நீங்கள் முடியும் என்று நினைப்பதும் எனக்கு முடியாமல் இருக்கலாம்" என்றார்.

"மனசு இருந்தால் முடியாததும் முடியும்" என்று விடாமல் பின்னினார் ராஜமாணிக்கம்.

பிள்ளைக்குச் சற்று எரிச்சலாகவே இருந்தது. அதை மறைக்கக் 'கடகட' வென்று போலிச் சிரிப்புச் சிரித்தார். கடைசியில் ராஜமாணிக்கம் விஷ

யத்தை அவிழ்த்தார். அவருடைய பெண்ணுக்குக் கல்யாணமாம். மளிகைச் சாமான் கடனாக வேண்டுமாம்!

"அதை மட்டும் என்னிடம் கேட்கக் கூடாது" என்றார் பிள்ளை.

"ஒரே அடியாக அப்படிச் சொல்லக் கூடாது. எனக்கு இக்கட்டான நிலை. முகூர்த்தம் குறித்தாகி விட்டது. இல்லாவிட்டால் உங்களிடம் கேட்க மாட்டேன்" என்றார் ராஜமாணிக்கம்.

"தயவுசெய்து அந்தப் பேச்சை விட்டு விடுங்கள்" என்று கண்களை மூடியபடி, விடை கொடுக்கும் பாவனையில் கை கூப்பினார் பிள்ளை.

"நான் சொல்வதைக் குறையும் கேட்டு விட்டு...." என்று இழுத்தார் ராஜமாணிக்கம்.

பிள்ளை பொறுமை இழந்துவிட்டார்.

"கடன் விஷயம் பேசவும் வேண்டாம், கேட்கவும் வேண்டாம்" என்று சொல்லும்பொழுதே கூப்பிய கைகள் மார்பிலிருந்து நெற்றிப் பொட்டுக்கு உயர்ந்து விட்டன. பிள்ளை எழுந்து நின்று கொண்டு விட்டார்.

"என்ன மனிதரய்யா நீர்?" என்று கோபமாகக் கத்தினார் ராஜமாணிக்கம்.

"கடன் கொடுக்காத வியாபாரி" என்றார் பிள்ளை.

சர சரவென்று படியிறங்கிச் சென்று விட்டார் ராஜமாணிக்கம்.

"சார், உங்கள் குடை..." என்றான் கடைப் பையன்.

திரும்பி வந்து குடையை எடுத்துக் கொண்டு, பிள்ளையின் முகத்தை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்து விட்டுச் சென்றார் அவர்.

இரண்டு நாட்கள் சென்றன.

பேரின்பநாயகம் வந்தார். ராஜமாணிக்கமும் அவரும் ஒரே காரியாலயத்தில் வேலை பார்ப்பவர்கள். பிள்ளை கடைக்கு வழக்கமான வாடிக்கைக்காரர்

சிறிது நேரம் உலக சமாசாரங்களைப் பற்றிப் பேசி விட்டு, "பிள்ளைவாள்! உங்களிடம் கொஞ்சம் தனியாகப் பேச வேண்டும்" என்றார் பேரின்பநாயம்'

இரண்டு பேர்களும் கடையின் பின் அறைக்குச் சென்றார்கள்.

"என்ன பிள்ளைவாள்! கடையேறி வந்த சீதேவியைக் காலால் எட்டி மிதித்து விட்டீர்களே?" என்றார் பேரின்ப நாயகம்.

விஷயம் பிடிபடாமல் திருதிருவென்று விழித்தார் பிள்ளை. விளக்கிச் சொன்னார் பேரின்பநாயகம்.

பிள்ளையின் புருவங்கள் நெரிந்தன.

பேரின்ப நாயகம் சொன்னார்:—"ராஜமாணிக்கம்தான் தலைமைக் குமாஸ்தா. அத்தனை அதிகாரிகளையும் பையில் போட்டுக் கொண்டிருக்கிறார் அவர். சொல்கிற இடத்தில் கையெழுத்துப் போடுவார்கள் அத்தனை பேர்களும்...."

"அதனால் நமக்கு என்ன?" என்று குறுக்கிட்டார் பிள்ளை.

அறை மூலையில் காகிதக் கட்டுக்களை அடுக்கிக் கொண்டிருந்த பையனைப் பார்த்தார் பேரின்பநாயகம்.

"டேய்! போய் இரண்டு கப் காப்பி வாங்கிக்கொண்டு வா" என்று அவனை அங்கிருந்து அகற்றினார் பிள்ளை.

பேரின்பநாயகம் அறைக் கதவைச் சாத்திவிட்டு வந்து, தனிவான குரலில் சொன்னார்: "எங்கள் காரியாலயத்தில் இறக்குமதி லைசன்ஸ் வழங்கும் பகுதியில் அவர் தான் வேலை செய்கிறார்...."

பிள்ளை ஒன்றும் சொல்லவில்லை.

"பிள்ளைவாள்! கொஞ்சம் விட்டுப் பிடியுங்கள். அதனால் உங்களுக்கு லாபம் உண்டு. நல்ல கறவை மாடு அது. வைக்கோல் செலவாகுமே என்று நீங்கள் கலங்க வேண்டாம்."

சில வியாபாரிகளின் பெயரையும் வரிசையாக அடுக்கினார் பேரின்பநாயகம். எல்லாம் பிள்ளை அறிந்த விலாசங்கள் தான். இறக்குமதி வியாபாரத்தில் கருங்கிய காலத்தில் நல்ல நிலைமைக்கு வந்தவர்கள். லகாரம் லகாரமாக அள்ளுவதாக ஊரில் பேசிக் கொண்டார்கள்.

"அவர்கள் கெட்டிக்காரர்கள். புத்திசாலித்தனமாக நடந்து கொண்டார்கள். எல்லாம் இந்த ராஜமாணிக்கம் மூலம் தான் நடந்தது. ஒரு கோட்டை விதைத்தால் பத்துக் கோட்டை அறுவடை



செய்யலாம். யோசித்துப் பாருங்கள்'' என்றார் பேரின்பநாயகம்.

''யோசித்துச் சொல்கிறேன்'' என்றார் பிள்ளை. காப்பியைக் குடித்து விட்டு விடைபெற்றுச் சென்றார் பேரின்ப நாயகம்.

அன்று இரவு வெகுநேரம் சிந்தனையில் ஆழ்ந்தார் பிள்ளை. 'இந்த விஷயத்தில் தலையிட வேண்டாம். இருப்பதே போதும்' என்று ஒரு மனசு கூறியது. 'வியாபாரத் தந்திரங்கள் எவ்வளவோ உண்டு. அதைச் செய்ய ஏன் தயங்க வேண்டும்?' என்று இன்னொரு மனசு கேட்டது. நடுநிசியில் தன்னையறியாமல் தூங்கிப் போனார் அவர்.

மறுநாள் பேரின்ப நாயகம் வந்தார்.

''ராஜமாணிக்கத்தை நாளை வரச் சொல்லுங்கள்'' என்றார் பிள்ளை.

பேரின்பநாயகம் முகமலர்ச்சியோடு திரும்பிச் சென்றார்.

**ம**றுநாள் ராஜமாணிக்கம், மனைவியோடு வந்தார். அவரோடு சமையல்காரனும் வந்தான்.

சமையல்காரன் மளிகைக் கடைச் சாமான்களை அள்ளினான். மனைவி 'ஷாப்பு'க் கடையின் சாமான்களைப் பொறுக்கினாள்.

முதலில் மளிகைச் சாமான் மட்டும் போதுமென்று சொல்லி விட்டு, இப்பொழுது ஷாப்புச் சாமான்களை வேறு பொறுக்குவதைக் கண்டதும் பிள்ளைக்கு வயிற்றை எரிந்தது. ஆனால் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. கடைப் பையனை விட்டு மூன்று 'கப்' குளிர் பானம் வாங்கிவரச் செய்தார்.

செண்பகம் எதிர்க் கடையிலிருந்து ஓடோடி வந்தான்.

''என்னப்பா இது? சாமான்களை எடுத்து விட்டுக் கணக்கில் எழுதச் சொல்கிறான் அந்த அம்மாள்'' என்று படபடப்போடு கேட்டான்.

பிள்ளை, ராஜமாணிக்கத்தின் முகத்தைப் பார்த்துக் கொண்டே, ''இரைந்து பேசாதே. அவர் காதில் விழப்போகிறது. கணக்கில் எழுதிக் கொள். விஷயத்தைப் பின்னால் சொல்கிறேன்'' என்றார்.

ராஜமாணிக்கம் சாமான் வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தார்.

**ம**றுநாள் தொட்டு ராஜமாணிக்கத்தின் உதவியால் இறக்குமதி லைசன்ஸ் பெறுவதற்கான முயற்சிகளில் முனைந்தார் பிள்ளை. விண்ணப்பங்களைத் தயார் செய்து கொடுத்தார். மேலதிகாரிகள் பரிசீலனை செய்து தகவல் தெரிவிப்பார்கள் என்று காரியாலயத்தில் சொல்லி விட்டார்கள். காத்திருந்தார் பிள்ளை.

ராஜமாணிக்கம் மகளுக்குத் திருமணம் நடந்தது. அன்பளிப்பாக வெள்ளிக் குத்துவிளக்கு ஒன்று கொடுத்தார் தனுக்கோடியா பிள்ளை.

இரண்டு வாரங்கள் சென்றதும், ராஜமாணிக்கத்தின் மனைவி வந்து சில சாமான்கள் மேலும் கடனாக எடுத்துச் சென்றாள். அடிக்கடி சமையல்காரனும் வந்து சாமான்கள் கொண்டு போனான். கடன் ஏறிக் கொண்டே போயிற்று. ஆனால் லைசென்ஸ் காரியம், நடக்கிற வழியாயில்லை.

மூன்று மாதங்கள் சென்றன. ராஜமாணிக்கம் கடன் கணக்கில் பாக்கி நாலு இலக்கத்துக்கு வந்து விட்டது!

ஒரு நாள் பேரின்பநாயகம் வந்தார்.

''பிள்ளைவாள்! நீங்கள் விண்ணப்பம் எல்லாம் கொடுத்து விட்டீர்களா?'' என்று கேட்டார்.

''கொடுத்து மாதங்கள் மூன்றாகின்றன!'' என்றார் பிள்ளை.

ப்ரூக் பாண்ட் தேயிலைப்
பாக்கட் ஒவ்வொன்றும்
அதிக கோப்பைகள்
சிறந்த தேநீர் தருகிறது
என்பது யாவரும் அறிந்ததே!

வாரமொன்றுக்கு
ப்ரூக் பாண்ட்
2,89,00,000 தேயிலைப் பாக்கட்
டுகள் உற்பத்தி செய்கிறார்கள்!
இதற்கு முதல் மார்க்
கொடுத்தே ஆகவேண்டும்!

கணக்கிடும் போது,
மற்றெல்லாத் தேயிலையை
விட மக்கள் யாவரும், ஏன்
ப்ரூக் பாண்ட் தேயிலையையே
விரும்புகிறார்கள்
என்பதின் காரணம்
தெளிவாகிறதல்லவா!

# எப்பொழுதும்
# இன்பம்
# தப்பாது அளிப்பது
# ப்ரூக் பாண்ட்
# தேயிலையே



ப்ரூக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

BB 274K

“அப்படியா ? ‘பைல்’ இன்னும் மேலே வரவில்லை, வந்தால்தான் கவனிக்க முடியும். காரியாலயத்தில் அந்தக் கோடியில் சன்னலோரத்தில் ஒரு அம்மாள் உட்கார்ந்திருக்கிறாளே......”

“கண்ணாடி போட்டுக் கொண்டு......”

“ஆமாம்! அந்த அம்மாளைப் பார்த்துக் கொஞ்சம் பைலை மேலே தள்ளி விடச் சொல்லும். மேலே வந்து விட்டதென்றால் நான் பார்த்துக் கொள்கிறேன்” என்றார் பேரின்பநாயகம்.

பிள்ளை, கண்ணாடி அம்மாளைப் பார்த்துத் ‘தார்க்குச்சி’ போட்டார்.

அன்று மாலை கண்ணாடி அம்மாள் வந்து சில ஷாப்புச் சாமான்கள் கடனாக வாங்கினாள். பணம் வாங்க வேண்டாமென்று மகனுக்குச் சைகை காட்டினார் பிள்ளை. ரொக்கக் கடையின் அழுத்தமான கொள்கை தளர்ந்து செல்லரித்துக்கொண்டு வந்தது.

மறுவாரம் ராஜமாணிக்கத்தின் மூத்த பையன் வந்து ஒரு டஜன் ‘டென்னிஸ்’ பந்து னாக வாங்கிச் சென்றான்.

மாதங்கள் பறந்தன.

“அப்பா, கணக்கில் கடன் தொகை மிகவும் ஏறி விட்டதே!” என்றான் செண்பகம். கடை பூட்டி வந்து, சாப்பிட்டுவிட்டு இருவரும் திண்ணையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

“என்ன செய்வது? ஒரு காரியத்தை நினைத்துக் கொண்டு இறங்கியாகி விட்டது. பொறுத்துப் பார்ப்போம்” என்றார் பிள்ளை. அவர் தமது விசனத்தை மகனிடம் காட்டிக் கொள்ளவில்லை.

இறக்குமதி ‘பைல்,’ கண்ணாடி அம்மாளைத் தாண்டி ஒரு கிருதா மீசைக்காரரிடம் சிக்கிக் கொண்டிருந்தது. கிருதா மீசை, பிள்ளை கடையில் வேலை பார்த்து வந்த பையன் ஒருவனின் ஒன்று விட்ட அண்ணா. அந்தப் பையன் ஒரு நாள் சென்று ‘பைலை’க் கிளறித் தள்ளினான்.

அன்று மாலை கிருதாமீசை வந்து சிறிது சாமான்கள் எடுத்து விட்டு, “பணம் சம்பளம் வாங்கித் தருகிறேன்” என்று சொன்னபொழுது பிள்ளையால் தட்டிச் சொல்ல முடியவில்லை. ‘கிருதாமீசைக்கும்’ கடன் கொடுத்தார்.

இப்பொழுது அநேகமாக எல்லாக் குமாஸ்தாக்களுக்கும் பிள்ளை கடையில் கடன் கணக்கு ஏற்பட்டு விட்டது. சிலர் கறாராகப் பணம் கொடுத்தார்கள். கேட்டுப் பிடுங்கினார் சிலரிடம். வேறு சிலரைப் பின்னால் பார்க்கவே முடியவில்லை. நடமாட்டத்தைக் கூட வேறு பாதைக்குத் திருப்பி விட்டார்கள் என்று எண்ண



“இந்தக் கடன் கொடுக்கும் பட்டாணியர்களைக் கொஞ்ச நாட்களாகவே ஏன் காணோம்?”

“அவர்கள் யாரிடமோ கடன் வாங்கி விட்டுத் தலைமறைவாக இருப்பாங்க!”

வேண்டியிருந்தது. வருடக் கடைசியில் வசூலாகாத சில்லறைத் தொகைகளைச் செலவெழுதித் தள்ளி விட்டார் பிள்ளை. கடன் பாக்கியைக் கணக்குப் புத்தகத்தில் பார்க்க மிகவும் வேதனையாக இருந்தது. அப்படிப் பார்த்துப் பழக்கமில்லை அவருக்கு.

பேரின்பநாயகம் வந்தார்.

“என்னய்யா இது? கணக்கில் தொகை கண்டபடி ஏறி விட்டது. லைசென்ஸ் விஷயமும் நடந்தபாடாக இல்லை” என்றார் பிள்ளை. சற்று வருத்தத்துடன் தான் இதைச் சொன்னார்.

“எல்லாம் தீர்த்து விடுவார். நான் சமயம் பார்த்துச் சொல்கிறேன். நீர் ஆள் விட வேண்டாம். ‘பைல்’ அவருடைய மேஜைக்குமேல் வந்து விட்டது. வெண்ணெய் திரளுகிற பொழுது தாழியை உடைத்து விடாதேயும்” என்றார் பேரின்பநாயகம்

பிள்ளை இறக்குமதிச் சரக்கைச் சேமிக்க மண்டியொன்று பார்த்து, முன் பணம் கொடுத்துச் சாவியும் வாங்கி வைத்துக் கொண்டார்.

மறுநாள் ராஜமாணிக்கத்தின் மகன் மோட்டார் சைக்கிளில் வந்து இரண்டு டப்பா சிகரெட் வாங்கிக் கொண்டான்.

“பிள்ளைவாள்! சிகரெட் என்று கணக்கில் எழுத வேண்டாம். அப்பா வித்தியாசமாக நினைத்துக் கொள்வார். வேறு எந்தச் சாமான் பெயரிலாவது பற்று எழுதும்” என்றான்.

“ஏதேது, கணக்கும் குமைந்துபோகும் போலிருக்கிறதே” என்று அங்கலாய்த்தார் பிள்ளை. மோட்டார் சைக்கிள் புறப்படும் இரைச்சலில் பிள்ளையின் பேச்சு அவன் காதில் விழவில்லை.

“எந்தப் பெயரில் பற்றெழுத?” என்று கேட்டார் கணக்குப்பிள்ளை.

“மண்ணாங்கட்டி கொடுத்த வகை என்றெழுதும்” என்று கத்தினார் பிள்ளை.

ஒரு நாள் திடுக்கிடும் செய்தியொன்று வந்தது. ராஜமாணிக்கம் வேறு ஊர் மாற்றலாகிச் சென்று விட்டாராம்!

"அட பாவி!" என்று தலையில் கை வைத்தார் பிள்ளை!

ராஜமாணிக்கத்துக்குக் கடிதத்துக்கு மேல் கடிதமாக எழுதினார் பிள்ளை. பதில் வந்தது. தாமதத்துக்கு மிகவும் வருந்துவதாகவும், சில மாதங்களில் பாக்கியைத் தீர்த்து விடுவதாகவும் கடிதத்தில் ராஜமாணிக்கம் எழுதியிருந்தார்.

எப்போதும் இந்த விஷயத்தைப் பற்றியே புலம்ப ஆரம்பித்து விட்டார் பிள்ளை. ஒரு நாள் யதேச்சையாகக் கண்ணாடி போட்ட அம்மாளைச் சந்தித்த பொழுது, வயிற்றெரிச்சலோடு விஷயத்தைச் சொன்னார். ராஜமாணிக்கத்தை வாயில் வந்தபடி திட்டினார்.

"சார்! அந்த மனிதரைப் பற்றி அவதூறு சொன்னால் நாக்கு அழுகிப் போகும்" என்றாள் கண்ணாடி அம்மாள்.

"என்னிடம் இப்படியா நடந்து கொள்வது?" என்று சீறினார் பிள்ளை.

"நீர் அவரிடம் சலுகைகள் எதிர்பார்த்தது தப்பு. அவர் ஆபீஸ் வேலையில் நேர்மை தவறாதவர். மிகவும் கண்டிப்பானவர். ஆனால் ஒன்று. அவரிடம் பாக்கியை வசூலிப்பது சிரமமான காரியம். பெரிய சம்சாரி, கை ஓட்டை. வாரி வாரிச் செலவு செய்து விடுவார்" என்றாள் அந்த அம்மாள்.

"பேரின்பநாயகம் என்ன என்னவோ சொன்னாரே?" என்று கேட்டார் பிள்ளை.

"அவர் சாமானைக் கடனாக வாங்கித் தரச் சொல்லியிருக்கலாம். அவரைக் காக்காய் பிடிக்க இவர் உம்முடைய தலையில் மிளகை அரைத்திருக்கலாம். நிச்சயமாக எதுவும் சொல்ல முடியாது" என்றாள் அம்மாள். பிள்ளை ஸ்தம்பித்துக் கல் தூண் மாதிரி நின்றார்.

"இருந்தாலும் நீர் இந்தக் குறுக்கு வழிக்குப் போயிருக்கக் கூடாது" என்று சொல்லி விட்டுச் சென்றாள் அந்த அம்மாள். பிள்ளையின் கண்கள் நீரால் நிறைந்து விட்டன.

*

**வ**க்கீலிடம் கலந்து ஆலோசனை செய்தார் பிள்ளை. பாக்கிக்கு ராஜமாணிக்கத்தின் மேல் 'கேஸ்' போட்டுச் சம்பளத்தைப் பிடிக்கலாம் என்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது என்பது தெரிந்தது.

பிள்ளை வழக்குத் தொடர்ந்தார். வழக்கு இரண்டு வருடங்கள் இழுத்து விட்டது. கடைசியில் பிள்ளைக்குச் சாதகமான தீர்ப்பு வந்தது. 'சம்பளத்தைப் பகுதி பகுதியாகப் பிடிக்க வேண்டும்' என்று விதி பிறந்தது. ஆனால் மேற்படி தீர்ப்பு அமுலாவதற்கு முன் ராஜமாணிக்கம் ஓய்வு பெற்றுப் பென்ஷன் வாங்கி விட்டார்.

'சம்பளத்தைப் பற்றிய தீர்ப்பு பென்ஷனைப் பாதிக்காது' என்று மீண்டும் வாதாடினார் ராஜமாணிக்கம். வழக்கு புனராலோசனை செய்யப்பட்டது. அதன்படி 'பென்ஷனில் குறைந்த தொகைதான் பிடிக்க வேண்டும்' என்று கீழ்க் கோர்ட்டில் தீர்ப்பு வழங்கப்பட்டது. அதன் பேரில் அப்பீல் சென்றார் ராஜமாணிக்கம்.

'அப்பீல்' செல்ல ராஜமாணிக்கத்துக்கு விருப்பமில்லையென்றும், அவர் நோய்வாய்ப்பட்டு விட்டதால் அவருடைய சொல்லை மதியாது, அவருடைய மகன்தான் பிடிவாதமாக வழக்கு நடத்துவதாகவும் ஊரில் அனைவரும் பேசிக் கொண்டார்கள்.

தனுக்கோடியா பிள்ளைக்கும் மகனுக்கும் வியாபாரத்தில் கவனம் குறைந்தது. ரொக்கக் கடை என்ற பெயர் அழிந்து விட்டது. கேஸுக்கு வேறு பணம் கரைந்தது.

பிள்ளையின் மகன் செண்பகம் சென்னை சென்று வழக்கை நடத்தி வந்தான்.

நாளைத் தீர்ப்பு!

வழக்கு வெற்றி பெறப் பிள்ளை, கோயிலில் அர்ச்சனை செய்தார். பிள்ளையாருக்கு ஆயிரம் தேங்காய்களும் உடைத்தார்.

மாலையில் சென்னையிலிருந்து தந்தி வந்தது. "கேஸ் வெற்றி. பென்ஷனைப் பிடிக்கத் தீர்ப்பு"—என்று அதில் கண்டிருந்தது. செண்பகம் அடித்த தந்தி அது.

சிறிது நேரத்துக்கெல்லாம் உள்ளூர் வக்கீல் குமாஸ்தா ஓடோடி வந்து, ராஜமாணிக்கம் திடீரென்று மாரடைப்பால் இறந்து போன செய்தி வந்திருப்பதாகச் சொன்னான்.

"கேஸ் தோல்வி அடைந்து விட்டது. ஊர் வந்து சேரு" என்று தம் மகனுக்குப் பதில் தந்தி கொடுத்தார் தனுக்கோடியா பிள்ளை. மகனுக்குத் தந்தி கொடுத்த கையோடு "ரொக்க வியாபாரம். கடன் கிடையாது" — என்ற போர்டைக் கழற்றி உள்ளேபோட்டார்.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras 10
Managing Editor: T. Sadasivam

